திருச்சிற்றம்பலம்.

# தஞ்சைவாணன்கோவைமூலம்

நாற்கவிராசநம்பி

அகப்பொருள்விளக்கத்திற்கிலக்கியமாகப்

பொய்யாமொழிப்புலவர்

இயற்றியது.



இஃது

குன்றத்தூர்-அஷ்டாவதானி

## சொக்கப்பநாவலர்

செய்த உரையுடன்

தொண்டைமண்டலம் ஆங்கிலோ வெர்னாக்யுலர்

கல்விச்சாலை பிரின்ஸிபல்

திருமயிலை-தெய்வசிகாமணிமுதலியாரவர்களாலும்,

திருமயிலை-வித்வான்

சண்முகம்பிள்ளையவர்களாலும்

பலபிரதிரூபங்களைக்கொண்டு

பரிசோதிக்கப்பட்டு,

ப. மு. செல்வராசமுதலியாரவர்களால்

தமது

சென்னை அமெரிகன் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.



இதன்விலை ரூபா-கவ.

1893.

## அறிவிப்பு

---

இப்புத்தகம் வேண்டுவோர் சென்னை பெத்துநாயக்கன்பேட்டைத் தங்கசாலைவீதி அமெரிகன் அச்சுக்கூடத்திலும், ஷை வீதியில் தொண்டைமண்டலம் கல்விச்சாலையிலும், கும்பகோணத்தில் சவுளிக்கடை இராமசாமி செட்டியாரிடத்திலும் விலைக்குப் பெற்றுக் கொள்ளலாம்.

உ

திருச்சிற்றம்பலம்.

# முகவுரை.

---

சந்தனப் பொதிகைச் செந்தமிழ் முனிவனுஞ், சவுந்தரபாண்டியனெனுந் தமிழ் நாடனுஞ், சங்கப்பலகையுந் தழைத்தினி தோங்கும், மங்கலப்பாண்டி வளநாட்டின்கண், நீடொளிமாடக் கூடலின் மேவிய ஆலவாயடிகள் கைதவனபொருளின்மையை நாடிவருந்திய ஞான்று "அன்பி னைந்திணைக் களவெனப்படுவ" என்பதுமுதலிய அறுபது சூத்திரங்களையுடைய வோர்நூலை யருளிச்செய்தனர்.

அதற்குத் தனித்தனி யுரைகண்டார் களவியற் பொருள்கண்ட கணக்காயனார்மகனார் நக்கீரனார் முதலாயினோர். அவ்வுரையுட்சிறந்தது நக்கீரனார்செய்த வுரையேயென விளக்கினார் உருத்திரசன்மனார். இதுநிற்க,

தொல்காப்பியம் எழுத்துச் சொற் பொரு ளென்னு மூன்றதிகாரத்ததாகவும், பொருளே வீடுபேற்றிற் குரியதாகவும் வழங்கப் பொருளாராய்ச்சியின்மையாயதெனபது அசங்கதமாக முடிவெய்தும். இனிப்பொருளே சிறந்தமை, காமருதில்லை மாமணிமன்றில நாடகவிற்றும் ஆடகப்பேரொளியாம் அற்புதன் போதவூர்நாடிய வாதவூரடிகளை யெய்தித் தன்னை ஐந்திணைக்கோவை பாடுகெனப் பாடுவித்துக்கொண்டு அதனீற்றில் தன்கைச்சாத்திட்டதே சாலு மெனபது.

பொருளாராய்ச்சியைப் பிறறைஞான்று குறைவறக்காட்டாததினர் நன்னூலார் முதலாயினோர். அவருள் நாற்கவிராசநம்பியார் முன்னூலாகிய தொல்காப்பியம், இறையனார் அகப்பொருள் முதலிய நூற்கு அகப்பொருள்விளக்க மென்னொருநூலை வழிநூலாக இயற்றினார். அன்னது ஏனைய நூற்களின் உண்மைக் கருத்தடங்கி யாவருக்குமினிதுவிளங்க விருக்க, அதுகண்ட பொய்யாமொழிப்புலவர் பெருமான் தஞ்சைவாணன் எனனும் பெருந்தகைமேல் ஐந்திணைக் கோவையாம் அருமபிரபந்தமொன்றருளிச்செய்தனர். அது திருக்கோவையாரொழிந்த பலகோவைகளினுஞ்சிறந்தது. கோவை

யென்பது பலதுறைகளா னமைந்த தென்பதை உரையாசிரிய கூறிய வுரையா னுமுணர்க. அது புலவர்பாடும் தொண்ணூற்று பிரபந்தங்களிலொன் றென்பதைப் பன்னிருபாட்டியல் முதலிய நூற்களா னுணர்க.

இக்கோவைப்பிரபந்தம் களவியல் வரைவியல் கற்பியல் என்னுங் கைகோள் மூன்றானு முறைக்கப்பட்டதன்றி இடையிடையே உரையாசிரியரால் அகப்பொருட்கிணங்கச் சிலதுறைகளைத் திருக் கோவையாரினின்றும், அம்பிகாபதி கோவையினின்றும் சேர்க்கப் பட்டிருக்கின்றது.

உரையாசிரியராகிய குன்றத்தூர்-அஷ்டாவதானம். சொக்கப்ப நாவலர் தாமெடுத்துக்கொண்ட கோவைப்பிரபந்தம் அகப்பொருள் விளக்கத்துக் கிலக்கியமேயாயினும், தொல்காப்பியப் பொருளதிகாரவுரை பெரும்பான்மையும் இறையனாரகப்பொருளுரை சிறுபான்மையும் நோக்கிச்செய்தனரென்பது அவருரையானினிது விளங்கும்.

இவ்வுரைகலந்த நூலை அச்சிடத்தொடங்கிய காலத்தில் எமக்குக் கையிலிருந்த நாலைந்து பிரதி ரூபங்களொழிய யாழ்ப்பாணம் நல்லூர் கனம்பொருந்திய சதாசிவம்பிள்ளையவர்களும், வித்வசிரோமணி திருக்கோணமலை - கனகசுந்தரம்பிள்ளையவர்களும், காஞ்சிபுரம் - பச்சையப்பமுதலியார் கலவிச்சாலைக் காரியதரிசியா யிருந்து காலஞ்சென்ற ஈக்காடு - பாலசுந்தரமுதலியாரவர்களும், திருத்தணிகை - இயற்றமிழாசிரியர் விசாகப்பெருமாளையரவர்கள் சட்டகர் குமாரர் குமாரசுவாமி ஐயரவர்களும் பிரதிரூபங்களைக்கொடுத்துதவினர். அவர்கட்கெம்மாலாய கைம்மாறியாது செய்யவல்லேம்.

ஆயினும், இவ்விலக்கியத்தைப் பதிப்பிக்கத்தொடங்கி மேற் கண்டவாறு எம்பாற்கிடைத்த பிரதிரூபங்களைப் பரிசோதித்து வருங்கால் யாவும் ஒன்றுக்கொன்று ஓரிடத்தினன்றிப் பலவிடத்தினும் முறையெழுதுவோரால் பிழைத்ததும் விடுத்ததுமாகிய செயலாலும், பூச்சுகளின் வாய்ப்பட்டுப் பழுதெய்தியமையினும் ஆங்காங்கு அவையிற்றின் பொருள்களின்னவென எளிதிற்றோதற்கு இடம்பெறாப் போயினமையின் இதுகாறும் காலநீட்டித்த தென வறிக.

இதனன்றியும், உரையாசிரியர் இப்பிரபந்தத்திற்கு உரையெழுது முறையில் ஆங்காங்கு மேற்கோளாகத்தெரித்த செய்யுள் முதலிய

வைகளுட் சில இறையனாரகப்பொருளுரையில் உதாரணச்செய்யுள்களாக இருப்பதுகண்டும் அவை இன்ன நூலின்கண்ணுள்ளவையெனத்தேர்ந்து தெளிய வருந்தி முயன்றும் அவ்வாறு தேர்ந்துணரச் சாத்தியமின்மையின் அவற்றை $ இக்குறிப்பிட்டு வறிதே அச்சிட்டு விடுத்தனம்.

இதுவுமன்றி, மற்றைமேற்கோள்களுட் பலவற்றையும் எம்பாற் கிடைக்கப்பெற்ற சிந்தாமணி, கல்லாடம் முதலிய இலக்கியங்களினும், எட்டுத்தொகை, பத்துப்பாட்டு, பதினெண்கீழ்க்கணக்கு முதலிய சங்கச்செய்யுள்களினும் இன்னது இந்நூலின்கண்ணுள்ளதென அவ்வப்பக்கத்தினடியிற் குறிப்பிட்டுக்காட்டியும், இன்னும் விளங்காதன சிலவுளவாகலின் அவையிற்றை இதன்பின்னர் விளங்கா மேற்கோள்களெனச் சேர்த்துமிருக்கின்றோம்.

ஆகவே, கல்விகேள்விகளானிறைவுற்ற மூதறிவுடையோரெவரேனும் இப்பதிப்பில் யாதொருபிழை பொதுளியிருப்பின் அதனையேனும், விளங்காமேற்கோள்களுள் யாதேனும் தங்கள் நூலாராய்ச்சியிற் காணப்பட்டுள்ளதாயின் அதனையேனும் எடுத்துக்காட்டுவராயின் அவற்றை அடுத்த பதிப்பிலெடுத்துக் காட்டுவதுமன்றி அப்பேருதவிக்கு அவர்பால் நன்றியறிதலாகியகைம்மாறு எம்பாற் கணிக்கற்பாற்றன்றெனக் கூறுகின்றோம்.

திருவாதவூரடிகளருளிச்செய்த திருக்கோவையாருக்கு இவ்வுரையாசிரியர் ஒருவரே சேனாவரையருரைசெய்தனர் என்றமையானும் பலரும் பேராசிரியரெனக் கோடலானும் பேராசிரியருரையென்றே காட்டினம்.

ம தே., ம ச.

# விளங்கா மேற்கோள்கள்.

| பக்கம். | வரி. | மேற்கோள்கள். |
|---|---|---|
| ௩ | ௨௬-௨௭ | “களவியொழுக்கமு … … னகமெனமொழிப.” |
| ௫ | ௨௫-௨௬ | “மெய்சகிளையாழோர்…நிகழதல்கடனெனமொழிப’ |
| ௧௧ | ௭-௧௦ | “உரையுறைதீந்தமிழ் … … . . ’ திருநுதலே” |
| ௧௬ | ௧௦ | “இளையரிநாணற்கிழங்குமணற்கீனற” |
| ௩௧ | ௨௩-௨௫ | “கொல்லல்கொல்லல் … புல்லலெஞ்ஞான்றும்.” |
| ௩௨ | ௮-௧௧ | §“மின்னிறபொலிந்த . . வென்னீபுலமபுவதே.” |
| ,, | ௧௨-௧௫ | §“பொன்னார்புனைகழற் . . … னமுங்கற்கவே.” |
| ௩௩ | ௯-௧௨ | “வெட்சிநிரைகவாதல் … வளைததலாகுமுழிஞை.” |
| ௪௩ | ௨௦-௨௧ | “பொருளதுபுணாவே . மருளவருஉமரபிறறென்.” |
| ௬௩ | ௧௧ ௧௪ | “தொய்யில்வனமுலையுந … . . யிதுவநதவாறு” |
| ௬௪ | ௯-௧௨ | §“ஆணெடுநதானையை .. … தடஞ்சுனையே” |
| ௬௬ | ௧௮-௧௯ | “நாணநடுங்கவு … காணுஙகாலைததலைமகடேதது.” |
| ௬௭ | ௨௮-௨௯ | “ஒப்பில்கூட்டமு … . சிதைவுமபெருநதிணை.” |
| ௬௮ | ௧ | “அகததிற்சிதைந்ததுபுறததினபாறபடும” |
| ௭௯ | ௨௯-௩௨ | “துவைக்குந்துணிமுனனீா …. மணணலார்பாடல்.” |
| ௮௬ | ௨௫-௨௮ | “வையகமிழவன . நாடறியக்கவஙவயொருஙகு.” |
| ௧௦௫ | ௨௭-௨௮ | “நல்வினையாற்று . . .. தூறறலினுலவநததுயா.” |
| ௧௧௨ | ௪ | “ஆஙகணுன்கேதலைப்பெயன்மரபே.” |
| ௧௧௬ | ௧௫ | “வாணமலைந்தெழிநதோளைமகிழ்ந்துபறைதூஙக” |
| ௧௨௫ | ௪-௭ | “ஆடவாகளெவ்வா . … மதிற்கசமொணபு.” |
| ,, | ௧௨ | “கோடாப்புகழமாறன்” |
| ௧௪௨ | ௨௫ | “வம்புமுவென்றுசெப்புறறதோாபகை” |
| ௧௪௯ | ௪-௭ | §“அடிககணணதிரும … துயின்றிலவே.” |
| ௧௬௬ | ௨௫ | “வேஙகைசணபகமவணடுணுமலா” |
| ௧௬௭ | ௩௧ | “வாளிரணடுமாறு … பொன்மழைக்கணமாதரா.” |
| ௧௮௨ | ௨௯ | “வளாவிடைவைதது . . . தெனமனுர்புலவா.” |
| ௧௮௭ | ௨௨ | “உரற்காலயானை … … செந்நாயேறறை” |
| ௧௮௯ | ௧௯ | “கஙகையாதாஙகுங . . மெயகுளிாமின்கண்டு.” |
| ௨௨௩ | ௩௪ | “குனறி-நெஞ்சுபகவெறிநத வெஞ்சுடாநெடுவேல” |
| ௨௩௬ | ௨௦ | “அனைநிலைவகையோடாஙகெழுவகையால்.” |
| ,, | ௨௩ | “காமொதிாகானமபாடினேமாக” |
| ௨௬௩ | ௫ | “கடலனணகாமமுழநது” |
| ௨௬௬ | ௨௫-௨௬ | “தேவாகுலமே சாலையம்பலமே” |

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ங | கூ | மாக | காம |
| ககூ | உச | தலைவி | தலைவன் |
| உசா | ரு | - புழுகு | ——— |
| ஙO | உகூ | பிரிவெனனுங | பிரிவனெனனுங |
| எஅ | கச | சாதகங்குரமெனனுஞ்சா | தூரங்கமெனுஞ |
| அO | கச | †"கோளகொத்துக் ... குலைவாழை" | கோள-கொதது † "கோட்டெங்கின குலைவாழை" |
| அO | கரு-கசா | கோள்வண்கோட் | வணகோட் |
| கூங | ககூ | கணை | கள |
| கூச | உக | மகள் | மகன் |
| கூரு | உக | முலைலயுஞ | முலையஞ |
| ,, | உகூ | ,, | ,, |
| கூசா | சா | வந்தவா | வநதவா |
| கூஅ | கஉ | இ - ள்.——— | இ-ள். தஞ்சைவாணன்வெற்பா! இலாஙகலி தென்னை மா பாக்கு பலா வாழையுமாகிய மரங்கள் |
| கOக | கரு | தழை | தமைக |
| ,, | கஎ | ——— வாடி | மெயவண்ணமவாடி |
| 5Oங | க | யுடைய——— | யுடையவஞசி ! |
| ௗகஅ | கO | செலலல் | சொல்லல் |
| ,, | கங | கூறனுங | கூறலினுங |
| ௗககூ | அ | கிளவி——— | கிளவியும் |
| உஅ | உஎ | மென் | மண் |
| ௗஙO | உங | வேணடினன | வேணடினள் |
| ௗஙச | ஙச. | விந்தை. வெறறி | விநதைவெறறி |
| ௗஙசா | கஅ | சொல்லை | செல்லை |
| ௗஙஅ | உச | வேளின் | வேலின் |
| ஙகூ | உஅ-ஙO | தலை . குரியன | ——— |
| கசO | ங | சேறனு | சேரனு |
| கருக | கச | வகை | மங்கை |
| ,, | கச-கரு | குழலினின்றுஆயர் | குழலி ! நின்றுயர் |
| கருரு | கச | யேன்——— | யேன் என் |
| ,, | ககூ,உO | தலைவாக் | தலைவற் |
| கசாரு | ரு | கூறிவந்த | கூறிவந்ததனை |
| கஅசா | கூ | மகவும் | அகவும; |
| கஅகூ | அ | வாயினது | வானது |
| ,, | கரு | நான்கே | மன்ன |
| ககூO | * | சே ஙஉ. | சே. ககூ. |
| ககூக | * | சூ. கசா. | சூ. ஙஉ. |

# பிழைதிருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௧௯௨ | ௫ | வெள்வனையீர்! | வேலனையீர்! |
| ௧௯௩ | ௧0 | கரிய | அரிய |
| ௧௯௭ | ௩௧ | வாளிரண்டு ... மாதரார்” | “வாளிரண்டு...பொன்மழைக்கண் மாதரார்” |
| ௧௯௯ | ¶ | சே. ௩௩௪. | சே. ௩௨௪. |
| ௨00 | ௨௯ | சொன்ன —— | சொன்னசொல்லை |
| ௨0௧ | ௩௩ | பெருவாயப | பெருளாயப் |
| ௨0௩ | ௧௬ | இ - ள். —— | இ - ள். நலலாய்! |
| ,, | ௩0 | யின்மேல் | யென்மேல |
| ௨0௬ | ௨௩ | யொழித | யொழிந |
| ,, | ௨௯ | புணறறு | புணறரு |
| ௨0௭ | ௨௯ | நீர் —— | நீர் இடப்பாகம் நனைதத்லால |
| ௨௧௩ | ௬ | பாாவைகளுள் | பார்வைகளும |
| ,, | * | சூ. ௪௧௩. | சூ ௨௨. |
| ௨௧௮ | ௨௬ | அவன | அவள |
| ,, | ௨௭ | ளென்க | னென்க |
| ௨௨0 | ௮ | வளை | விழை |
| ௨௨௧ | ௧௮ | கொடியால | கொடியாள |
| ௨௨௨ | ௧௭ | பாலன | பாலான |
| ௨௨௩ | ௧௪ | அழுகின்ற —— | அழுகின்ற நினது |
| ௨௨௪ | ௧௧ | யேயதினேன | யெய்தினேன |
| ௨௩0 | ௩0 | —— பாடு | வணடு - அமபு. பாடு |
| ௨௩௧ | ௩௧ | ளலலள, தையலாா | ளல்லது அயலாா |
| ௨௩௨ | * | சூ. ௧௯. | சூ. ௨0. |
| ௨௩௪ | ௧0 | அலர்தோா | அலாநதோர் |
| ,, | ,, | பூட்டு | பூட |
| ௨௪௭ | ௨௧ | இ - ள். —— | இ - ள். முகிழ்நகையே! |
| ௨௫௩ | ௧௮ | இ - ள். —— | இ - ள். கோமளமே! |
| ௨௫௯ | ௧௫ | ஓ | ஏ |
| ௨௬௧ | ௨௧ | மணத்தொடு | மணதொடு |

குறிப்பு.—(1). —— இக்குறி பிழையின்கீழிருககின் விடுபட்டதனையும் திருத்தத்தின் கீழிருக்கின் நீக்கப்பட்டதனையும் விளககும.

(2). ௨௧௭-ம் பககம் தன்பதியணிமைசாற்றல் என்னுங் கிளவிக்கு ‘இவ்விடத்தில நுமதூரில வைகிப்போதல பொருநதாது எம்பதிப்போதல் வேணடுமென்று தலைவன் கூறியவழி தலைவன்றன்பதி அணிததென்பதனைக் கண்டோர் கூறுதல்’.—எனப் பொருள்கொளக.

(3). ௨௫௮-ம் பக்கம் ௨௫-ம் வரிக்குப்பின் ‘இச்சொற்கு மனம் பொறுததேன் சொல்லாய்’ என்பதனைச் சோத்துப் பாடமோதுக. இவ்வாறு இங்குவிடுபட்டதனை அடுத்த செய்யுள் விசேடவுரையின் தலைப்பிறகாண்க.

திருச்சிற்றம்பலம்.

# தஞ்சைவாணன்கோவை

## உரைச்சிறப்புப்பாயிரம்.

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

பொய்யா மொழியா னெனும்பெரியோர்
புகலும் வாணன் கோவையுரை
மையார் சோலைக் குன்றத்தூர்
வளரட் டாவதானி சொக்கன்
கையார் கனிபோ லகப்பொருளிற்
காணுஞ் சங்கை யெலாந்தீர
மெய்யாத் தொல்காப் பியநூலின்
விதியா லெழுதி விளக்கினனே. ௧

இது மன்னுபுகழ்பெற்ற வாணன் றன்மேல் பண்ணிய கோவையுரை பகர்ந்தானை இவன் என்பது.

### இதன்பொருள்.

திரிபுபடாத சொல்லினை யுடையானென்று யாவராலும் புகழப்படும் பெருமையுடையாராற் சொல்லப்படும் வாணன் என்னும் இயற்பெயருடையானது கோவை யெனனும் பாட்டிற்கு நால்வகைத்தாகிய உரையை, மேகங்களைப்பொருந்தாநின்ற சோலைசூழ்ந்த குன்றத்தூரென்னும் நகர்வளர்தற் கேதுவாகிய அட்டாவதானத்தை யுடையனாகிய சொக்கன் என்னும் இயற்பெயரையுடைய நாவலர்பிரான், அகங்கையிற்பொருந்திய நெல்லிக்கனிபோலத் தன்னால் விபரீதம் ஐயமறக் காணப்படும் அகப்பொருளிடத்துப் பிறாக்குத தோன்றுங் கடாவிடையெல்லாந் திருமபுடி உண்மையாமென்று, அதங்கோட்டாசிரியர் முதலானோராற் கொள்ளப்படுந் தொல்காப்பியன் என்னும் முனிவனாற் செய்யப்பட்டதாய் நிரம்பிய இலக்கணத்ததாய அந்நூலினியல்பால் எழுததலைச்செய்து, யாவரும் அறியும் பொருட்டுத் தெரிவித்தானென்க.

திரிபாவது ஒன்றையொன்றாகக்காண்டல். அது பொய்யாமொழியானெனவே வந்தனை முதற்காரணமாகவுடைய பாவினையும் உடையானென்பதனானே பெற்றாம். சொல்லினையும் பாவினையுந் திரிபின்றி புணரவே அவ

வுணர்ச்சிக்குப் பயனாகிய ஒழுக்கமுடையா னென்பதாம். இவ்வகையாய பேருணர்வுடையாராற் புகழப்பட்டானெனவே அவனது பெருமை கூற வேண்டாவாயிற்று. 'வளரட்டாவதானி' என்றது அப்பொருண்மைக்கண் வந்த வினைத்தொகை.

* "தோன்றிற் புகழொடு தோன்றுக அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று." —என்னும் திருவள்ளுவர் கூறிய திருக்குறளினது பயனுக்கு உதாரணம் இவனென்பது பெற்றாம். முன்னை நல்வினை யுண்மையாற் பிறந்த நுண்ணறிவான இவன் காண்டலாற் சங்கையினனென்பது தோன்ற, தானும் அகப்பொருளென மாறிய பிறர்க்குத் தோன்றுமென வருவித்துரைக்க. நிரம்பிய இலக்கண முணராதார் தாம் வேண்டியவாறே கூறிய கூற்றைத் தன்மொழியா னீக்கி, மாசுண்டமணியைத் துடைப்பாரைப்போன்று, செய்தானென்பது விளக்கினான் என்பதனாற் பெற்றாம் 'குன்றத்தூர் சொக்கனை கையார் கனிபோலக் கோவைக்கு உரையெழுதி விளக்கினன்' என ஒருதொடராக்குக.

பொய்யா என்னும் எதிர்மறைப் பெயரெச்சம் மொழியார் என்னும் வினைக்குறிப்புப் பெயரது முதனிலையாகிய மொழி யென்னுங் கருவிப் பெயர்கொண்டு முடிந்தது. புகலும் என்னும் பெயரெச்சம் கோவையென்னுஞ் செயப்படுபொருள் கொண்டது. வாணன் கோவை யென்றவழி ஆறாம் வேற்றுமைச் செய்யுட்கிழமைக்கண் வந்தது. சோலைக்குன்றத்தூர் என்பது உருபும் பொருளு முடன்றொக்க தொகை. அட்டாவதானி என்பது வடசொன்முடிபாகிய குறிப்புவினைப் பெயரெச்சக்குறிப்பாய்ச் சொக்கன் என்னும் பெயரோடியைந்தது.

இது † "குறிப்புமுற்றீ ரெச்சமாகலு முளவே." என்னும் விதிபெற்றது. நச்சினார்க்கினியர் எச்சமுற்றாதலன்றி முற்றெச்சமாகாதென்று கூறினாராலோவெனின், அஃதிலக்கணமன்று, குறிப்பு வாய்பாட்டான் எச்சங்களுண்டேற் முற்றாய்த் திரிந்ததென்று சொல்லுதல்கூடுவது: அது கருதி முற்றே கூறினமையா லெனக.

கை என்பது ஆகுபெயர். போல் என்னும் உவமவுருபு வினையுவமத்தின்கண் வந்தது. தொல்காப்பியநூல் என்றவழி மூன்றாம்வேற்றுமை யுருபும் பொருளுமுடன்றொக்க தொகை. நிலைமொழி யீறுதிரிந்து கருத்த ருகுபெயராய்ப் பண்புத்தொகை யாயிற்றெனினும் இழுக்காது.

உரைச்சிறப்புப்பாயிரம்

முற்றும்.

---

* திருக்குறள், செ. உ௩௬. † நன்னூல், சூ. ௩௫௧.

உ

கடவுள் துணை.

# தஞ்சைவாணன் கோவை

## மூலமும் உரையும்.

---

முதலாவது

## களவியல்.

---

### கைக்கிளை.

#### காட்சி.

காட்சி என்றது தலைமகன் தலைமகளைக் காண்டல். தலைமகனென்றுந் தலைமகளென்றும் கூறிய இவர் யாரெனின் இல்லது, இனியது, நல்லது என்று புலவரானாடிக் கூறப்பட்ட மூன்றனுள் இல்லதாகிய புனைந்துரை யாற் றோன்றினோரென்க. இவரது இலக்கணம் யாதோவெனின், பிணி மூப்பு இறப்புகளின்றி எஞ்ஞான்றும் ஒரு தன்மையராய உருவும் திருவும் பருவமும் குலனும் குணனும் அன்பும் முதலியவற்றான் தம்முள் ஒப்புவமை யராய்ப் பொருவிறந்தாரெனப. என்னை, —

* "பிறப்பே குடிமை யாண்மை யாண்டோ
டுருவு நிறுத்த மாக வாயில
நிறையே யருளே யுணர்வொடு திருவென
முறையுறக் கிளந்த வொப்பினது வகையே."—என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரவகையான் இப்பத்துவகையும் ஒத்திருப்பது இலக்கணம்; இவற்றுள் ஆண்டு என்பது இருவர்க்குங் களவிற்காணும்போதில் எத்தனை யாண்டு கூறவேண்டுமென்று கூறின், பதினைந்தாண்டும் பத்துத் திங்களும் புக்கதலைமகனும், பதினோராண்டும் பத்துத் திங்களும் புக்கதலைமகளும் களவொழுக்கத்தில் நிகழ்வரென்றுணர்க. என்னை, —

† "களவினுட் டவிர்ச்சி வரைவி னீட்டம்
திங்க ளிரண்டி னகமென மொழிப."—எனவும்,
"களவி னொழுக்கமுங் காலமுந்
திங்க ளிரண்டி னகமென மொழிப."—எனவும்வரும் சூத்திரங் களாற்கண்டுகொள்க.

---

* தொல்காப்பியம், பொருளதிகாரம், மெய்ப்பாட்டியல், சூ. ௨௫.
இறையனார் அகப்பொருள், சூ ௩௨.

தலைமகனென்றும் தலைமகளென்றும் கூறப்படும் விதியாதெனின், கோவை யாதலின்கூறவேண்டுமென்பது. கோவை யாவதென்னெனின், பாட்டியலுட் கூறப்படுஞ் செய்யுட்களில் இஃதோர் செய்யுட்கோவை யென்று பெயராயது. அது என்னையெனின், மணிகளை யோரினமா யொழுங்குபடக் கோப்பது கோவையென்றுபெயர்; அதுபோல, இதுவும் அகப் பொருட் கிளவிகளை ஒழுங்குபடக் கோத்து நிற்றலின் கோவை யென்று பெயராயிற் றென்பது.

அகப்பொருள் என்பது யாதோவெனின், அகத்திணையபயனென்பது. ஆயின், அகம் என்பது யாதோவெனின, ஒருவனும் ஒருதலியும் தம்மு ளொத்த அன்பினராய்க் கூடுங் கூட்டத்தின்கண் பிறந்த இன்பம், அக் கூட்டத்தின் பின்னர் ஆண்டனுபவித்த அக்காலத்தில் இன்பம் எவவாறிரு ந்ததென்று அவ்விருவரி லொருவனையொருவர் கேட்கின், தமக்குப் புலப் படக்கூறப்படாதாய், உள்ளத்து உணர்வேநுகர்வதாய் அகத்தேநிகழ்தலின் அகம் எனப் பெயராயிற்று ஆயின், அகத்தே நிகழ்கின்ற இன்பத்திற்கு அகமென்றதோ ராகுபெயராமென்பது, தொல்காப்பியம் பொருளதிகாரத் தில் அகத்திணையியல் என்பதற்கு நச்சினார்க்கினியரும் இவ்வாறே உரை கூறினுரொன் றுணர்க.

பொருள் என்பது யாதோவெனின், அகத்திற்கும் புறத்திற்கும்பொது வென்பது. அகத்தைச் சார்ந்துவரும் பொருளெல்லாம் அகப்பொருளென் னப்படும். புறத்தைச் சார்ந்துவரும பொருளெல்லாம் புறப்பொருளென னப்படும். இனிச் சுவை யொன்பானுள் இஃது இன்பச்சுவையென்று கூறப் படும. அச்சுவை யாவையோவெனின், வீரம், அச்சம், இழிவு, வியப்பு, காமம், அவலம், உருத்திரம், நகை, சாந்தம். இவற்றுள் சாந்தம் ஒழிந்த எட்டுங்கூறப்படுவன. அவற்றுள் இச்சுவை காமம் என்று சொல்லப்படு வது. காமம் எனினும், இன்பம் எனினும, சிங்காரம் எனினும ஒக்குமாக லின் இக்கோவை இன்பச்சுவை யென்னப்படும்.

இஃது எனைத்துவகையாற் கூறப்பட்டதோவெனின், களவு, கற்பு என்னும் இரண்டு கைகோளாற் கூறப்படும். கைகோள் என்பது யாதோ வெனின், கை என்பது ஒழுக்கம், கோள் என்பது கொள்ளுதல். 'நிறை கோட்பறை' யென்பதுபோல நின்றது; எனவே, களவொழுக்கம் கற் பொழுக்கம் எனப்பட்டது. களவாவது யாதோவெனின், தலைமகனும் தலைமகளும் கொடுப்போரும் அடுப்போருமின்றிப் பான்மை வகையால் தாமே யெதிர்ப்பட்டுப் புணர்தலான், இவ்வியற்குக் களவியல் என்றுபெய ராயிற்றென்பது. ஆயின், களவென்பது தருமநெறியன்றே, இலக்கணம் பலவற்றினுங் கூறிய வழக்குப்பயிற்சியாய் வருவதென்னையெனின், கள

விற் றீங்குதருவதாய் நரகத்துக்கேதுவாய செய்யத்தகாத களவென்றறிக. அறஞ்செய்ய மறமாகவும், மறஞ்செய்ய அறமாகவும் வருதலுமுள.

அஃதென்னை யெனின், தக்கன் வேள்விசெய்ய அவனுக்கே தீங்கு தருதலான் அறஞ்செய்ய மறமாயிற்று. ஒருவன் அயலார் மனைவியைக் கைதொட்டான்; அப்போ தொருவனைக் கரிகூறிக் கூவினான்; கூவவே தொட்டானை அரசன்முன்னே ஈர்த்துப்போய்விடக் கரியோனை யழைத்து உள்ளபடி கரிகூறென்ன, அவன் கைதொட்ட தில்லையென்று கூறினான்; கரிகூறவே அவனைப் போவென்று அரசன் விடுத்தனன். ஆங்குப் பொய் யுரைத்தது அறமாயிற்று. இவன் கைதொட்டானெனின், அவன்தலை யோடுமுடியும். இனிப்பொய்யுங்களவும் இரண்டு மொக்குமென்பவாதலான் களவினும் நன்குதரு களவுமுண்டு. இக்களவு கேடுமுதலிய துன்பங்களைத் தருவதன்று.

எண்மணத்துள் ஒருமணமாய்க் கந்தருவநெறியென்று மறையொழுக் கமாய்க் கூறப்பட்டதாகலின் தருமவொழுக்க மெனப்படும். நாகப்பட் டினத்தில் புத்தர் தெய்வம் பசும்பொன்னாற் செய்திருந்தது. அதனை † ஆலி நாடர் களவிற்கொண்டுவந்து திருவரங்கத்து மதில்செய்வித்தனர். அதனால் அவர் அச்சமயத்தில் கடவுட்டன்மையராய்விளங்கினார். அவரைக்குற்றங் கூறுநர் ஒருவருமிலராதலால் களவினும் நன்குதருகளவும் உண்டென்றறிக.

ஆயின், களவென்று பெயர்கூறவேண்டுவ தென்னையெனின், வேதத் தினை பலபொருளும் மறைந்திருக்குங் காரணத்தான் மறை என்றுபெயர் கூறினாற்போல, பிறரறியாமை இருவருங்கரந்த உள்ளத்தராய்க் கூடுதலான் களவியல் என்றதென்க. பின் கற்பின்வழி நின்று விளங்குதலான் குற்ற மின்றெனக் கொள்க.

இக்களவொழுக்கத்திற்கு முன்னர்க் கைக்கிளைகூறப்படும்; என்னை,—

"மெய்க்கிளை யாமேழோர் வேண்டும் புணர்ச்சிமுன்
கைக்கிளை நிகழ்தல கடனென மொழிப"— என்பது இலக்கண மாகலின்.

கைக்கிளை என்பது யாதோவெனின், கை யென்பது சிறுமை; கிளை யென்பது உறவு; ஆகலின், சிறுமையுறவென்பது கைக்கிளை என்று பெய ராயிற்று. கைக்குடை, கைவாய்க்கால், கையரிவாள் எனவழக்கிடத்துஞ் சிறுமைபற்றி வருதல் காண்க. அஃதென்னை யெனின், ஒருதலைக் காம மென்னப்பட்டுத் தலைமகன்கூற்றாய் நிகழ்தலினாலென்க. அதனுள் இக் கிளவி காட்சி யென்னப்பட்டது.

காணுமியல்பு யாதோவெனின், முன்சொன்ன தலைவனும், கற்கந்தும் எதிர்போந்தும் *கடுங்கண்யானையும் தருகட்பன்றியும் கருவரையும் இருவில

---

† திருமங்கையாழ்வார்.

னும் பெருவிசும்புவிளையார் ஆளிமொய்ம்பினர் அரிமான்றுப்பினர் பற்ப ஞூறுயிரவர் கூர்வேலிளையர் தற்சூழச்செல்வனென்பது முடிந்தது. இவ ளும் உடன்பிறந்து உடன்வளர்ந்து நீர் உடனாடிச் சீர் உடன்பெருகி ஒல் லட்டுட்டுப் பால் உடனுண்டு பல் உடனெழுந்து சொல் உடன் கற்றுப் பழமையும் பயிற்றியும் பண்பும நண்பும் விழுப்பமும் ஒழுக்கமும் மாட்சியும் உடையார் பற்பனூறாயிரவா கண்ணுமனமுங்கவரும் ஒண்ணுதன் மகளிர் தற்சூழத் தாரகை நடுவண் தணமதிபோலச் செலவாளெனபது முடிந்தது. முடியவே, தமியராய்ப் புணர்ந்தார் என்பதனோடு மாறுகொள்ளுமெனின், மாறுகொள்ளாது; என்னை, அவள் ஆயங்களும் பொழிலிடம புகுதலும் விளையாட்டு விருப்பினாற்பிரியும. என்னைபிரியுமாறெனின், ஒருவா ஒரு வரின்முன்னர்த் தழை விழையததக்கன தொடுததுமென்றும், கண்ணி நண்ணறுநாற்றததன செய்துமென்றும், போது மேதககன கொய்துமென் றும், மயிலொடு மாறாடுதுமென்றும், குயிலொடு மாறுகூவுதுமென்றும், அருவியாடி அஞ்சுனை குடைதுமென்றும், வாசமலர்க்கொடியில் ஊசலாடு துமென்றும் பரந்து, அப்பாலுள்ளாா இப்பாலுள்ளாா கொல்லோவென் றும், இப்பாலுள்ளார் அப்பாலுள்ளார் கொல்லோவென்றும் இவவகை நினைத்துப் பிரிபவென்பது.

இவ்வகை அவளைதமியராயப் பிரிபவெனின், எட்டியுஞ்சுட்டியுங் காட்டப்படுங் குலத்தனளல்லளாகலானும, பான்மை அவவகைததாகலா னும் பிறவாறு நினையாா பிரிபவெனபது. ஆயின, இவவகைபபட்ட ஆயத் திடை மேனாட்பிரிநது பயின்றறியாதாள் தமியளாய நிறகுமோவெனின், நிற்கும்; தான் பயின்ற இடம் தன் ஆயததினோ டொகக மாகலானென் பது. யாங்ஙனம் நிற்குமோவெனின், சநதனமும் சண்பகமும தேமாவும தேமபலவும ஆசினியும அசோகும் கோஙகும வேங்கையும் குரவமும விரிநது, நாகமும் திலகமும நறவும் நநதியும் மாதவியும் மலலிகையும மௌவலொடு மணங்கமழ்ந்து, பாதிரியும பரவைஞாழலும பைங்கொன்றையும் பிணி யவிழ்ந்த பொரிப்புன்கும் புனனைகமும உருககொடு முகைசிறநது, வண டறைந்து, தேனார்ந்து, வரிக்குயிலகள் இசைபாடத, தணடெனறல் இடை விராய்த் தனியவனை முனிவுசெயயும பொழிலது நடுவண ஓரணிக்கச் செய்குன்றின்மேல் விசும்பு துடைததுப் பசுமபொன்பூத்து வண்டுதுவைப் பத் தண்டேன் துளிப்பதோர் வெறியுறு நறுமலர் வேஙகை கணடாள்; கண்டு பெரியதோர் காதல் களிகூர்ந்து தன் செம்மலர்ச சீறடிமேற் சிலம்பு கிடந்து சிலம்பு புடைப்ப, அமமலரணிக் கொம்பா நடை கறபதென நட ந்து சென்று, நறைவிரி வேங்கை நாணமலர் கொய்தாள்; கொய்தவிடத்து மரகதமணி விளிம்படுத்த மாணிக்கச் சுனைமருங்கினதோர் மாதவிவல்லி மண்டபத்துப் போதுவேய்ந்த பூநாறு கொழுநிழற் கீழ்க் கடிக்குருக்கத்தி கொடிபிடிததுத் தகடுபடு பசும்பொற் சிகரஙகளின் முகடுதொடுத்து வந

இழிதரும் அருவிபொன்கொழித்து மணிவரன்றி மாணிக்கத்தொடு வயிர முகதி அணிகிளர் அருவி ஆடகப்பாறைமேல் அதிர்குரல் முரசின்கணிரட்ட, வண்டுந்தேனும் யாழமுரல, வரிக்குயில்கள் இசைபாட, தண்டாரு தவிகபட, போர்த்ததோர் பளிக்குப்பாறை மணித்தலத்துமிசை நீல ஆலவட்டம் விரித்தாற்போலத் தன்கோலக் கலாவங்கொளவிரித்து முளையிளஞாயிற்று இளவெயில எறிப்ப ஓர் இளமயில் ஆடுவது கண்டு நின்றாள். அப்பால் தலைமகனும் * பற்பனூறாயிரவர் கூர்வேலிளையாரொடுஞ்சிரமலைச்சாரல் வேட்டம போய விளையாடுகின்றான், ஆண்டெழுந்ததோர் கடுமாவின்பின் னோடிக் காவலிளையவரைக் கையகன்று, நெடுமானதேரொடு பாகனை நிலவு மணற் கானியாற்று நிறகப் பணித்து, தொடுகழல் அடியதிரச் சுருளிருங் குஞ்சி பொன்ஞாணிற பிணித்து, கடிகமழ நறுங்கண்ணி மேற்கொண்டு வண்டு மணமயர, அஞ்சாந்தின நறுநாற்றம அகன்பொழிலிடைப் பரந்து நாற, ஆடுசிலை ஒருகணை ஏந்திவடிவுகொண்ட காமன்போலச் சென்று அவள் நின்ற இருமபொழில்புகும். அஃதியாங்ஙனமோ வெனின், வட கடலிட்ட ஒருநுகம் ஒருதுளை தெனகடலிட்ட ஒருகழி சென்று கோத்தாற்போலவும், வெங்கதிர்க்கனலியுந் தண்கதிர்மதியமுந் தங்கதி வழுவித் தலைப்பெய்தாறபோலவும் தலைப்பெய்து ஒருவரொருவரைக் காண்டல் நிமித்தமாகத தமியராவரென்பது.

புயலே சுமந்து பிறையே யணிந்து பொருவிலுடன்
கயலே மணந்த கமல மலர்ந்தொரு கற்பகத்தின்
அயலே பசும்பொற் கொடிநின்ற தாலவெள்ளை யன்னஞ்செந்நெல்
வயலே தடம்பொய்கை சூழதஞ்சை வாணன் மலயத்திலே.

உரை கூறுமிடத்து † நான்குவகையாற கூறப்படும். அவை யாவை யெனின், கருத்துரைத்தல், கண்ணழித்தல், பொழிப்புத்திரட்டல், அகலங்கூறல் என நான்கு வகைப்படும அவற்றுள் கருத்துரைத்தலாவது,— சொல்லப்படுஞ் செய்யுளின கருத்தையுரைத்தல். கண்ணழித்தலாவது,— பதப்பொருளுரைத்தல. பொழிப்புத்திரட்டலாவது, — அச்செய்யுளிற் கூறப்படும பொருளைத்தொகுத்து ஒருபிண்டமாகக் கூறுதல் அகலங்கூறலாவது,— *அச்செய்யுளின பொருளைத் துய்மைசெய்தற்குக் கடாவிடை யுள்ளுறுத்தி ஐயந்திர விரித்துக் கூறல.

அவற்றுள் இச்செய்யுட்குக் கருத்துரை யாதோவெனின், களவி கூறவே கருத்துரையாய் விளங்கி நின்றதெனக் கொள்க.

ப-ரை. புயலே சுமந்து - புயலைத்தாங்கி, பிறையேஅணிந்து-மதிக்கலையைத்தரித்து, பொருவிலுடன் கயலேமணந்த கமலம மலர்ந்து - போர் செய்யும் வில்லுடனே கெண்டைமீன் பொருந்திய தாமரைமலர்ந்து, ஒரு

† "பொழிப்பேயகல நுட்பமெச்சமெனப பழிப்பில பல்லுரை" — எனபதனுமுணர்க.

கற்பகத்தின் அயலே - ஒருகற்பகத்தின் பக்கத்து, பசும்பொற்கொடி பசிய காமவல்லிக்கொடி, நின்றது - என் கண்ணெதிரே நின்றது. ஆல் - அசை. வெள்ளை அன்னம் - வெள்ளை நிறத்தையுடைய அன்னம். செம்நெல் - சிவந்தநெல். வயல் - கழனி. தடம்பொய்கை - பெரியவாவி. சூழ் - சூழ்ந்த. தஞ்சைவாணன் - தஞ்சாவூரிலிருக்கும் வாணன். மலயத்திலே - பொதிய மலையிடத்து. எ - று. — இது கண்ணெழுத்தல்.

பொ-ரை. அன்னப்புள் செறிந்த வயலும் வாவியுஞ் சூழ்ந்த தஞ்சை வாணன் பொதியவெற்பில் ஒரு கற்பகத்தருவின் பக்கத்தில் ஒரு பசும் பொற்கொடி புயலைத்தாங்கிப் பிறையைத் தரித்துப் போர்செய்யும் வில் லுடன் கெண்டைமீன் பொருந்திய தாமரை மலர்ந்து என்கண்ணெதிரே நின்றது. எ - று. — இது பொழிப்புத்திரட்டல்.

வி-ரை. 'புயலைச்சுமந்து பிறையையணிந்து பொருவிலுடன் கயலை மணந்த கமலமலர்ந்து' என்னும் வினையெச்ச வடுக்குகள் 'நின்றது' என் னும் அஃறிணை முற்றுவினைகொண்டு முடிந்தது. 'புயலைப் பிறையைக் கம லத்தை' என்னும் இரண்டாமுருபு தொக்கு நின்றது. ஏகாரமனைத்தும் ஈற்றசை. 'வயலபொய்கை' என்புழி எண்ணும்மை தொக்கு நின்றது. புவி யினகண் கற்பகத்தருக் கூறினது குற்றமெனின் குற்றமன்று. என்னை,—

தேவரெல்லாரும் பொதியமலையிற் கூடி யிருத்தலின் அம்மலைக்குப் பொதுவில் என்னும்பெயர் இக்காலத்து பொதியில் எனத்திரிந்து மரூஉ வாய் நின்றதாதலால், தேவரிருக்குமிடத்துக் கற்பகத்தரு இருக்குமென் பது துணிபு. அன்றியும் குறுமுனியிருக்கும் மலையாதலானுங் கூறப்படும். கற்பகத்தின் அயலில்நிற்பது காமவல்லிக் கொடியாதலான் பசும்பொற் கொடி காமவல்லிக்கொடி யென்றுணர்க. இக்கவி கட்டளைக்கலித்துறை என்றுணர்க. நிலைக்கலித்துறை, கோவைக்கலித்துறை யெனினும் அமையும். இதற்கு விதி "நோபதிஞூறே" என்னுஞ் சூத்திரத்திற்கண்டு கொள்க. ஆயின், 'யானுக தோழியும்' என்பதும், 'வென்றான்வினையின' என்பதும், கலித்துறை யன்றோ வெனிற் கூறுதும்.—

† "மூவா முதலா யுலகமொரு மூன்றுமேத்தத்
தாவாத வின்பந் தலையாயது தன்னி னெய்தி
யோவாது நின்றகுணத் தொண்ணிதிச் செல்வ னென்ப
தேவாதி தேவனவன் சேவடி சேர்து மன்றே." — என்னுஞ்

சிந்தாமணிப் பதிகச்செய்யுளில் இதற்குப்பெயர், விருத்தத் தொகையாய் விருத்தத்திலக்கணம் நிரம்பாமையானும், நெடிலடி நான்காய்க் கலித்துறை யோசையிலக்கணம் நிரம்பாமையானும், விருத்தக் கலித்துறை யென்று

* சிந்தாமணி, கடவுள்வாழ்த்து, செ. க.

நச்சினார்க்கினியர் கூறிய உரையானுணர்க — இது அகலங்கூறல்.
இதனில அகப்பாட்டுறுப்பு வருமாறு —

* "திணையே கைகோள கூற்றே கேட்போ
ரிடனே காலம பயனே முன்ன
மெயப்பா டெசசம பொருளவகை துறையென
வப்பா லாறிரண டகப்பாட் டுறுப்பே." — எனபதனுன் இப

பாடடிற்குத, திணை - குறிஞசி, கைகோள் - களவு, கூற்று - தலைவன,
கேட்போர் - நெஞ்சு, இடம் - பொழிலிடம,

"ஒருநெறிப படடாங கோரியன் முடியுங
கரும நிகழச்சி யிடமென மொழிப." —எனபவாகலின், காலம் -
இறநதகாலம, பயன் - காடசி, முன்னம்-வியபபினுலுள்ளமகிழதல, தலை
வியைககணடு தலைவனவியந்து பொருளைககூறுது உவமையே கூறுதலான
புறததுககணட பொருளகாரணமாக நெஞசிறறேனறிய விகாரததன
விளைவு மெயபபாடாதலான, மெய்ப்பாடு - மருட்கை; திருககோவை
யாருரையில காடசிச செயயுட்கு மெயப்பாடு உவகை யெனறு பேரா
சிரியர் எழுதினரேயெனில உவகையாகாது. எனனை, கணடபொரு
ளான் நெஞசின் மயககந தோன்றி ஒனறை யொனறுகக கூறுதலின
மருடகையேயாமெனக எச்சம்-நெஞசம பொருள்வகை-ஆறெழுகசு
துறை ஒவவோரிடஙகளில் அரிதாய வருமெனக்கொளக, வநதவிடதது
உரையிறகூறுதுங கணடுகொளக

காட்சிககுப் பாட்டுபபாடும இயல் ஓரினஞ சாாநதபொருளாற பாட
வேணடுமெனபது இயலபு அது சானறோா கூறிய கோவைசசெயயுளிற
கணடுகொளக ஆயின, இசசெயயுடகு ஓரினஞசாாநத தெஙஙனமெனின,
குறிஞசி நிலத்துப் பொருளையே ஓரினஞசாாாது பாடியவாறு கணடு
கொளக. இககாடசிககனறி வழிநிலைககாடசிககு எவவாறு கூறினும அமை
யும. காட்சிககுக கணடபொருள அவையவததைக கூறுது உவமையைக
கூறவேணடுவ தெனனையெனின, இஙஙனஞ சிறநதுதோனறுவிடின ஐயம
நிகழாதாதலான இஙஙனஙகூறவேணடுமெனபது வாணனநாடடிடததுப்
பொருவிறநத தலைமகன பொருவிறந்த தலைமகளைககணடுறறனெனபுழி,
இவன பொருவிறபபுககு மாறுகொளளுமெனின, எனாடிககுங கீாததியை
நிலைநிறுததித தெயவநதோ டொததவ னுதலின, தேவரு ளொருவ
னெனறு கூறப்படுமவன சீாத்தியிறபாடும புலவரால் தோனறுந தலைவ
னுநதலைவியு மாதலான, மககட்டன்மையிற் பொருவிறாதா ராயினரெனக்
கொளக

---

* அகப்பொருளவிளக்கம, ஒழிபியல, சூ ௨
‡ தொல பொருள செயயளியல, சூ கஙக

இத்தமிழ் நாடகத்தமிழ் எனப்படும். என்னை, களவியொழுக்குப்படக் கோத்துக் கதைபோலவந்து நாடகத்துக்கேற்றலின். ஆயின், இலக்கண மென்று இலக்கணத்திற் கூறியவா றென்னையெனின், அந்நாடகத்தமிழுக்கே இலக்கணங் கூறினாரெனக். இவையெல்லாம் அகலவுரைப்பாற்படும்.

ஐயம்.

ஐயம் எ-து கண்ணுற்றதலைமகன் கொடியல்லள் பெண்ணென்றறிந்து, இங்ஙனங்காட்சியிற்சிறந்து தோன்றிய இவள் தெய்வப்பெண்களில் எத்தெய்வப்பெண்ணோ வென்று ஐயப்படுதல் கூறல்

---

பாரணங் கோதிருப் பாற்கட லீன்றபங் கேருகத்தின்
ஓரணங் கோவெற் புறையணங் கோவுயர் பாவலர்க்கு
வாரணங் கோடி தருந்தஞ்சை வாணன்றென் மாறைவையை
நீரணங் கோநெஞ்ச மேதனி யேயிங்கு நின்றவரே.

இ-ள். பாரினிடத்துப் பொழிலின்மேலிருந்து புவியினுள்ளோர் சிறப்புச்செய்ய அச்சிறப்பைக் கொள்ளுந் தெய்வப்பெண்ணோ! திருப்பாற் கடல்பெற்ற பங்கேருகத்துக்கண் இருக்கும் ஒப்பில்லாத தெய்வப்பெண்ணோ! வரையரமகளோ! உயர்ந்த பாவலர்க்குக் கோடியானையைக் கொடுக்கும் தஞ்சைவாணனது நாட்டகத்து வரும் வையையாற்றின்கண் தோற்றிய நீரரமகளோ! நெஞ்சமே! தனியே யிங்கு நின்றவர் யாரோவென்று அறியப்படாது. எ-று.

இதனுள் ஓகாரங்கள் ஐயப்பொருளவென் றுணர்க. நெஞ்சமே! தனியே யிங்கு நின்றவர் யார்? என நெஞ்சொடு வினாதற் பொருண்மையென்று வினா ஓகாரம் என்பாரும், அவரோ இவரோவென்று ஆராய்தற் பொருண்மைக்கண் வந்ததென்று தெரிநிலை ஓகாரம் என்பாரும் உளராலோவெனின், இக்கிளவி ஐயமாதலால் ஐயப்பொருண்மையை விளக்குவது இவ்வோகாரங்கள், அல்லவெனின், ஐயப்பொருண்மையையுணர்த்துவதுவேறின்மைபோல, அவர் கூறிய வினா ஓகாரமும், தெரிநிலையோகாரமும் அப்பொருண்மையறிக

"பிரிநிலை வினாவே யெதிர்மறை யொழியிசை
தெரிநிலைக் கிளவி சிறப்பொடு தொகைஇ
இருமூன் றென்ப வோகா ரம்மே"—எனச் சூத்திரத்துள்
ஐய ஓகாரங்கொண்டிலராலெனின் இச்சூத்திரத்திற் கொண்டிலர். எழுத்ததிகாரத்து உயிர்மயங்கியலில் ஓகார வீற்றுப் பதமுடிப்புழி,

---

‡ தொல். சொல், இடையியல், சூ அ

"மாறுகொளெச்சமும் வினைவு மையமுங்
கூறிய வல்லெழுத் தியற்கை யாகும்." — என்னுஞ் சூத்திரத்தில் ஐய ஏகாரமுங் கொண்டார். அதற்குதாரணம், பத்தோ பதினொன்றோ வென உரையாசிரியர் காட்டிப்போந்ததனானுங் கொள்க. பாரணங்கோ என்பதற்குச் சூரரமகளிரொன்று கூறினமையால் இறையனார் அகப்பொருளில்,

"உரையுறை தீந்தமிழ் வேந்த னுசிதன்றென் னாட்டொளிசேர்
விரையுறை பூமபொழின மேலுறை தெய்வங்கொ லன்றிவிண்டோய்
வரையுறை தெயவங்கொல் வானுறை தெய்வங்கொ னீரணந்த
திரையுறை தெய்வங்கொ லையந் தருமித் திருநுதலே". — என ஐயத்திற்குககாட்டிய பாட்டில் பொழிலின்மேலுறை தெய்வமெனச் சூரரமகளைக் கூறியவாறு கண்டுகொள்க. 'பங்கேருகத்தி னோரணங்கோ' என்பது மகரவீறறுப்பதம் அத்துச்சாரியை பெற்று இன்என்னும ஐந்தாமுருபு ஏழாவதின் பொருள்படவந்தது.

‡‡ "யாத னுருபிற் கூறிற் றாயினும்
பொருள்சென் மருங்கின் வேற்றுமை சாரும்.' — என்னுஞ் சூத்திரவிதியாற் கணடுகொள்க. அன்றியும ஊரிலிருந்தார், மலையிலிருந்தார் என்பதுபோற கொளளினு மமையும.

பொழிலைச்சார்ந்து நிறறலின் 'பாரணங்கோ' வென்றும், இவள் நிறகும இடம பசுபபொறறகடுவேயந்து மரகதவிளிம்படுத்த மாணிக்கச்சுனையருகு சண்பகம, பாதிரி, வகுளம், அசோகு, சந்தன முதலாய தருக்கள் மலர்ந்த பூநாறு கொழுநிழறகீழ் ஒரு கற்பகத்தைச்சார்ந்து பளிக்குப் பாறைமேல் கோலக்கலாபம் விரித்து மயிலாடனோக்கி நின்றாளாகலின், இவள் நிற்குமிடத்துச் சிறப்புநோக்கிப 'பங்கேருகத்தி னோரணங்கோ' வென்றும், மலையிடத்து நிற்றலால 'வரையரமகளோ' என்றும, சுனைநீரருகு நிறறலின 'நீரரமகளோ' என்றுங் கூறினானென்க.

பொழிலின்மேலிருந்து பூசைகொளளுந தெய்வம் யாதோவெனின் சூரரமகளென்ப 'பாற்கடல்' என்ன அமையாதோ 'திரு' என்ற தெற்றுக்கோ வெனின், கடல்களிற் குணமிக்க கடலாதலானும், தேவருக் கமுதங் கொடுத்தலானும, நெடுமால் பள்ளிகொண்ட இடமாதலானும் திருப பாற்கடலென்று கூறப்பட்டது.

---

‡ தொல். எழுத். உயிர மயங்கியல, சூ. அஅ.

‡‡ ஷை சொல். வேற்றுமை மயங்கியல, சூ. உங.

இவ்வாறு தலைவியும் ஐயுறாது எனனையெனின், ஐயுறின் கந்திருவனே! முருகவேளோ! இயக்கனோ! என ஐயுறவேண்டும். அங்ஙனம் ஐயுறவே அச்சநதோன்றும, தோன்றவே காமவேடகைநிகழாது, ஆதலால் கூறிற்றில னெனக் கொளக. (உ)

### துணிவு.

துணிவு எ-து. கண்ணி வாடுதல கண்ணிமைத்தல முதலிய குறிக ளான் மானிடமாதேயென முன் ஐயுற்ற தலைமகன தெளிந்து கூறல.

---

மையார குவளை வயற்றஞசை வாணனை வாழ்த்தலாபோல
நையா தொழிமதி நனனெஞச மேயினி நமமினுநதன
நெய்யார கருஙகுழற செமமலா வாடின நீலவுணகண
கையா லழைபபன போலிமை யாநிறகுங காரிகைக்கே.

இ-ள். நலல நெஞசமே! இனறு இக்காரிகைககு நமமினும தனது நெய்யாாநத கருஙகுழலில சூடிய செமமலாவாடின, அனறியம நீலமபோன்ற மையுணடகண கையினால வாவெனறழைபபதுபோலும இமையா நினறன, ஆதலால, கருமைபொருநதிய குவளைமலாநத வயலசூழ்நத தஞசைவாணனை வாழ்நதாாத தெவ்வாபோல நீ நையாதொழிவாயாக எ-று.

மதி - முனனிலையசை. உணகண் - மையுண்டகண. நெய-புழுகு. ‡ "நெயயொடு குஙகுமம நிறைநத நீரினற - பொய்கைகள் பூமபடாம போாததல போனறவே" எனறாா பிறருமெனக (ங)

### குறிப்பறிதல்.

குறிபபறிதல எ-து. தலைவி வேட்கை அவள் பாாவையால் தனனிடதது துண்டென்று குறிபபா லறிவது.

---

மணணிற் சிறநத புகழ்த்தஞசை வாணன மலயவெற்பில
பெணணிற சிறநதவிப பேதைதன பாாவை பெருவினையேன
எணணிற சிறநத விருநதுபா நோயதனக கினமருநதாய
கணணிற் சிறநத வுறுபபிலலை யாவதுங காடடியதே

இ-ள். மணணிலே மிகுநத புகழையுடைய தஞ்சைவாணன பொதிய வெற்பிடதது பெண்மையிறசிறநத இபபேதை தனது பார்வை பெரிய தீவினையேன எண்ணததின் மிகுந்த பெரிய வேடகைநோய தனக்கு வருத தப்பாடு செயயாது இனபஞசெயகினற மருநதுமாகி, கண்போற் சிறநத உறுபபிலலையாவதுங காட்டியது. எ-று.

---

‡ சிநதாமணி, காமகளிலமபகம, செ. ருக.

துயர் - ஆகுபெயர். வேட்கையை நோயாக்கலால் பார்வையை மருந்தாக உருவகஞ் செய்யப்பட்டது. அவயவம் பலவற்றினும் பயன்றருவ தின்மையாய்க் கண் பயன்தருவதாய்ச் சிறத்தலின், கண்போற் சிறந்த வுறுப்பில்லையாவதுங் காட்டியதென்று கூறியது.

காட்சி முதல் குறிப்பறிதல் ஈறுக நானகுங் கைக்கிளை யென்று கூறப்படுதலின், கைக்கிளையுள் தலைவி வேட்கைக்குறிப்பினை யறிந்தனன் என்புழி, கைக்கிளையென்பதனொடு மாறுகொள்ளும்; மற்றெனனை யெனின், மாறுகொள்ளாது. என்னை, —

தலைமகள் பார்வை பொதுப்பார்வையே, இவன் தன்னவாமிகுதியால் பார்வையில வேட்கையுளதென்று கருதினானெனபதாயின, தலைவன அறிவிலனும, மற்றெனனையெனின, தலைமகன வேட்கைக் குறிப்பால பார்த்தாள் என்புழி புணர்ச்சிக்கு உடனபட்டாளாயிறறு. உடன்பட்டாள் எனவே தொலலாசிரியர் கைக்கிளையிற் கூறார்.

மெயப்பாட்டியலில் தலைவிக்குக்கூறிய அவதைதயில

முதலவத்தை.

‡ "புகுமுகம புரிதல பொறிநுதல வியர்தத
னகுநய மறைததல சிதைவுபிறர்க் கின்மையொடு
தகுமுறை நானகே யொனறென மொழிப."

இரண்டா மவத்தை.

a‡ "கூழை விரிததல காதொன்று களைத
லூழணி தைவர லுடைபெயாத துடுததலோ
டூழி நான்கே யிரணடென மொழிப."

மூன்றமவத்தை.

b‡ "அலகு றைவர லணிநதவை திருதத
லில்வலி யுறுதத லிருகையு மெடுததலொடு
சொலலிய நான்கே மூன்றென மொழிப."

நான்காமவத்தை.

c‡ "பாராட் டெடுததன் மடநதப வுரைதத
லீரமில கூற்ற மேறறலா நாணல்
கொடுப்பவை கோட லுளபடத தொகைஇ
யெடுதத நானகே நானகென மொழிப"

‡ தொல. பொருள். மெயபபாட்டியல், சூ. கரு.
a‡ ஷை ஷை ஷை சூ. கச.
b‡ ஷை ஷை ஷை சூ. கரு.
c‡ ஷை ஷை ஷை சூ. கசு.

## ஐந்தாமவத்தை.

‡ "தெரிந்துடம் படுத றிளைப்புவினை மறுத்தல்
கரந்திடத் தொழிதல் கண்டவழி யுவத்தலொடு
பொருந்திய நான்கே யைந்தென மொழிப."

இங்ஙனம் நான்கவத்தைக்கண்ணுங் கூறிய மெய்ப்பாடு பதினாறும் நிகழ்ந்ததில்லை, ஐந்தாமவத்தைக் குணநான்கினும் முதற்குணம் தெரிந் துடன்படுத லென்பதற்கு, ஆராய்ந்துடன்படுதலென்று இலக்கணங் கூறி னமையால், இவற்றி னொன்று மின்றிக் கைக்கிளையில் உடன்பட்டா ளென்று சொல்லுவது பொருந்தாதென்பது. ஆயின், சான்றோர் செய்யுள் பலவற்றினுங் கைக்கிளையுட் குறிப்பறிந்தானென்று கூறியவா றென்னை யெனின், அவள் பார்த்த பார்வை நன்றெனக்கோடற்கும், அன்றெனக் கோடற்கும் பொதுவேயாம். அஃதென்னையெனின், ஒருவன் பசித்து வந்தா னொருவனைக்கண்டான், அவன் பசியோடிளைத்துவந்தவன் முகத் தைப்பார்த்தான்; அப்பார்வை பசிதீர்க்குமென்பதோ தீராதென்பதோ வென்னல்போல நின்றது. பசித்துவந்தான் இவன் சோறுகொடுப்பானெ ன்றெண்ணுவ தல்லது, கொடானென வெண்ணுவதில்லை; ஆதலினா னெனின் தன்னவாவினானென்பது. அதுபோலத் தலைமகனும் தன்னவா வயத்தனாய்க் கூறியதல்லது அறிவிலனாய்க் கூறினான் அல்லனெ னறுணர்க.

இனி வேட்கையின் குறிப்புணர்ந்தது பதினொருங்கவி முறுவற்குறிப் புணர்தற் செய்யுளிற் கூறியவாற்றா னுணர்க. இனி இவ்வாறே அகத் திணையியலில் †"முன்னைய நான்கு முன்னதற்கு" என்னுஞ் சூத்திரத்தில் நச்சினார்க்கினியர் உரையின் அவ்வேட்கை மிகுதியாற்கூறியதல்லது உடம் பட்டாளல்லளென்று கூறியவாறுணர்க. அவளுடம்படுவ தெங்ஙன மெ னின், மறுத்தெதிர் கோடலின்கண்ணே யுடம்பட்டவாறுணர்க. ஆயின், நான்கவத்தைக்கண்ணோதிய பதினாறுவகையும் நிகழாதன்றோ உடம்படுவ தெனின் நிகழ்ந்தது உண்டென்றுணர்க. எங்ஙனமெனின் மெய்தொட் டுப்பயிறல் முதலிய நிகழ்ந்துழி எல்லாவகையும் நிகழ்ந்தவாறு கூறவேண் டுவாயிற்று. (௬)

கைக்கிளை - முற்றும்.

---

‡ தொல். பொரு. மெய்ப்பாட்டியல், சூ. ௧௭.
† ஷை ஷை அகத்திணையியல், சூ. ௫௨.

# இயற்கைப்புணர்ச்சி.

அஃதாவது, தெய்வத்தாற் கூடுதலும், தலைவியாற் கூடுதலும் என இருவகைப்படும். செய்யுட்பாடுவார் தெய்வப்புணர்ச்சி பாடுவாருமுளர், தலைவியிற்புணர்ச்சி பாடுவாருமுளர். இவ்விரண்டிற்கும் இயற்கைப் புணர்ச்சியென்று பெயராகூறப்படும். அவற்றுள் இச்செய்யுள் தலைவியிற்புணர்ச்சியாய இயற்கைப் புணர்ச்சியென்று கொள்க.

* "வேட்கை யுணர்த்தன் மறுத்த லுடன்படல்
கூட்டமெனத் திறைவியிற் கூட்டநால் வகைத்தே." — என்னுஞ் சூத்திரவிதியால் இயற்கைப்புணர்ச்சி நான்குவகைப்படுமெனக் கொள்க. அவை வருமாறு.—

## இரந்துபின்னிற்றற்கெண்ணல்.

இரந்துபின்னிற்றற்கெண்ணல் எ-து. தலைவன் தலைவியை யிரந்து பின்னிற்றற்கெண்ணல். [பின்னிற்றல் என்பது ஓர் சொல்; அதற்குப் பொருள் இதஞ்சொல்லுதல்]

---

தேங்கிய காதர வாதரஞ் செப்பித்தண செப்பிணைபோல
வீங்கிய மாமுலை மேவுதும யாமவிசு யக்கொடிமேல்
வாங்கிய சாப முபாதவன் போர்வென்ற வாணனவையந
தாங்கிய மாலனை யானறஞ்சை சூழ்வரைத தாழ்குழற்கே.

இ—ள். நெஞ்சமே! வெற்றிக்கொடிமேல் வளைவில்லை யுயர்த்தவனாகிய சேரனது போரைவென்ற வாணன் வையந்தாங்கிய மாலுக்கொப்பான், அவன தஞ்சையைச் சூழ்ந்த வரையிலிருக்குந் தாழ்ந்த குழலினை யுடையாட்கு நிறைந்த அச்சந்தரும ஆதரத்தைச்சொல்லி தண்ணிய செப்பிணை போற் பூரித்த பெரிய முலையிடத்து யாங்கூடுதும. எ-று.

காதரம் - அச்சம, வடசொல. ஆதரம - காதல். தாழ்குழல் - அன்மொழித்தொகை. நெஞ்சம் - முன்னிலையெச்சம. (௫)

## இரந்துபின்னிலைநிற்றல்

இரந்துபினனிலைநிற்றல் எ-து தலைவியையிரந்து இதஞ்சொல்லுதல. நிலையாகப் பின்னிற்றலென்று மாறிக்கொள்க.

---

செறிவேழ வெஞ்சிலை வேடஞ்சை வாணன் றிருந்தலாமேல!
எறிவேலை வென்றகண ணென்னுயிர்க் கேவி யிருண்டறலபோல
நெறிவே யலங்கன முடித்ததலை சாய்த்திங்ங னிற்பதுதான
அறிவே யறிந்த வினைககலா மாளிகை யாரணங்கே.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல, சூ. ௪௦.

இ-ள். அலர்மாளிகையிலிருக்கும் அரியதெய்வம்போல்வாய! வென்றி செறிந்த கருப்புவெஞ்சிலையையுடைய வேளன்ன தஞ்சைவாணன் பகைவர்மேலெறிந்த வேலைவென்ற நின்கண்ணை என்னுயிர்மேலே விடுதலைச் செய்து, அறல்போலிருண்டு நெறிவேய்ந்த மாலையைச்சூடிய முடித்தலையைச சாய்த்து, இவ்வாறு நிற்பது எல்லாமறிநத உனக்கறிவோ! எ-று.

'இருண்டறல்' என்புழியும், 'அறிவேயறிந்த உனக்கும்' என்புழியும் மொழிமாற்றிக்கொள்க. 'வேடஞ்சை வாணன்' என்புழி அன்ன எனனும் பெயரெச்ச வினைக்குறிப்பாகிய உவமவுருபு தொக்கது. 'என்னுயிர்க்கேவி' என்புழி நான்கனுருபு மேல் என்னும ஏழனுருபாயினவாறுகண்டுகொள்க.
'கிளையரி நாணற் கிழங்கு மணறகனற" என்பதுபோலக்கொள்க. நெறி-மயிரிருபக்கமும் வகிரநத நடுவொழுங்கு. முடித்தலை - இருபெயரொட்டுப் பண்புததொகை ஆரணங்கு-ஆகுபெயா, அன்னம போலவாளை அன்னம் என்றதுபோலக் கொளக. (சு)

முன்னிலையாக்கல்.

முனனிலையாக்கல் எ-து. தலைமகன் தலைமகளை முனனிலையாக்கிக் கூறுதல். அஃதெனனையெனின்,

[காரியத்திற்கு முன்னிற்பதுயாதோ அது முன்னிலை யென்று பெயா. முன்னிலை யெனினும, முதனிலை யெனினும, காரணம் எனினும ஒககும.] ஆயின், என்சொலலியவாறோவெனின் இவள நிறபது தன்காரணமாக்கிக் கூறுதல்.

---

வழுதியா நாமம வளாக்கின்ற வாணன்றென் மாறைவுண்டு
கொழுதிய லாரசெய் குழன்மட வீர்நுங்குற் றேவலசெய்து
தொழுதிய லாயத தொகுதியொ டாடிச் சுனைகுடையா
தெழுதிய பாவையைப போனினற வாறென னியமபுமினே.

இ-ள். பாணடியருடைய புகழை வளாக்கின்ற வாணன தென்மாறை நாட்டுவண்டு கொழுதப்பட்ட செய்யவேணடு மிலககணமெல்லாம முற்றசசெய்து குழலையுடைய மடவீா! நுமமிடததுக் குற்றேவலசெயது தொழுது சஞ்சரிக்கும ஆயக்கூட்டததோடு விளையாடிச் சுனைகுடையாது எழுதிய சிததிரப்பாவைபோல, வாணனமாறைநாட்டு நீா நின்றவாறு யாதுகாரணம்? எனனைக் காககவோ? சொலலும் இப்போழுதே. எ-று.

'வழுதியா நாமம வளாக்கினற வாணன' என்பது பாண்டியனுக் கமைசசனுதலால் என்று கொள்க. வழுதி யெனறது வழுதியர் எனப பன்மையாற கூறிய தெனனையெனின, வழுதிகுலதது முனனுள்ளோா

படைத்த புகழும், இப்பாண்டியன் படைத்த புகழுமெல்லாம் வளர்ப்பவ ளாதலின் பன்மையாற் கூறப்பட்டது.

நாமம்-புகழ். தென் - அழகு; தெற்குத் திசையிலுள்ள மாறையென் றுமாம். கொழுதுதல் - கோதுதல். இயல் - இலக்கணம். ஆர் - நிறைய; அர் என்னுஞ்சொல் விகாரத்தால் ஆர் என நின்றது. இயலுதல் - சஞ்சரித்தல். தொகுதி - கூட்டம். குடைதல் - குளித்தல். இன்னே - இப்போழ்தே. 'என்னைக்காக்கவோ' என்னுஞ் சொல் வருவித்துரைக்க. இச்சொல்லுரையாவிடின் முன்னிலையாக்கப்பொருள் தோன்றாமையுணர்க. இலக்கணமெல்லாம் முற்றச்செய்த குழல் என்றது திருமுருகாற்றுப்படையில் ‡"துவரமுடித்த துகளறுமுச்சி" என்பதற்கு முற்றமுடித்த வுச்சி - எனப் பொருள்கொண்டவாறுணர்க (எ)

## மெய்தொட்டுப்பயிறல்.

மெய்தொட்டுப்பயிறல் எ-து. தலைவன் தலைவி மெய்யினைத்தீண்டி நெருங்குதல்.

தீண்டுமாறென்னை, மெய்யைத்தொடக் கொடுக்கின் நாணிலளாம், நாணுடையளெனின் தொடத்தின்றாம். மற்றென்னையெனின், நாணுமுடையள், தொட்டது முண்டு என்ன வேண்டும். எவ்வாறெனின், புனலோடும் வழிப் புற்சாய்ந்து புறங்கிடப்பதுபோல வேட்கைமீதூரப்பட்டு நாணம் ஒருபாற் சாய்ந்துகிடப்ப நின்றாளென்க. அக்காலத்தில் தலைவன் தீண்டற்கஞ்சி நின்று குழலில் வண்டை யோட்டுவதுபோல நெருங்கி வண்டையோட்டுகையில் கைபட்டதுபோலத் தொட்டானென்க. அங்ஙனந் தீண்டிய பயனென்னையெனின், இவனுக்கு ஊற்றின்பமும், தலைவி நாணந் தன்வசப்படுத்தலும் பயனென்றுணர்க. **பயிறல்** என்பதற்குப் **பழகுதல்** என்றுரைப்பாருமுளர். நெருங்கி நிற்றலால் பழகுதலுமாம். **நச்சினார்க்கினியர்** மெய்தொட்டுப்பயிறல் என்பதற்கு, புலையன் தீம்பால் போல மனங்கொள்ளவுங் கொள்ளாவுமாகி யிருக்கின்றகாலத்தே தொட்டானென் றுரைகூறினார் அஃதென்னையெனின், புலையன் தொட்டானென்பதனன் சிறிது அருவருப்பும், பாலுக்குக் குற்றமின்றென்பதனன் விருப்புமென்று பொருள்கொள்க. அருவருப்பும் விருப்பும் இவட்கு எற்றினாலாயதோவெனின், களவொழுக்கம் என்பதனன் அருவருப்பும், கந்தருவ மணம் என்பதனன் விருப்புமென்றும் பொருள்கொள்க. இனி யெவ்வுறுப்பைத்தொட்டானெனின் தோள்தீண்டினனென்க என்னை,—

‡ திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம்.

"உறுதோ றுயிர்தளிர்ப்பத் தீண்டலாற் பேதைக்
கமிழ்தி னியன்றன தோள்." — என்பதனுற் கண்டுகொள்க.

---

நல்லார் விழிபோ லிருந்து மளியெனு நாமம்பெற்றும்
அல்லா குழலி லமர்ந்திருந் தாலம ராரைவெல்ல
வல்லான் வரோதயன் வாணன்றென் மாறை மதுகரங்காள்
நில்லா திடையுமக் கோபழி சால நிலைநிற்குமே.

**இ-ள்.** பகைவரை வெல்ல வல்லமையுடைத்து வரதநிறை லுதையஞ் செய்தவனுகிய வாணனது தென்மாறைநாட்டு வண்டுகாள்! நல்லார்க்கு நீர் கண்போலிருந்தும், அன்பென்கின்ற அளியென்னும்பெயரைப்பெற்றும், இவளுடைய இருள் போன்ற குழலின்மேற் பொருந்தி இருந்தீராயின், இடை நில்லாது இறும், அதனால் இவள் இறந்துபடும்; படின் உமக்குப் பெண்கொலைப் பாவம் மிகவும் நிலைநிற்கும், அவ்வண்ணம் கொலைபாவம் வாராமல் நீங்குவீராக. எ - று.

**நீங்குவீராக** என்பது வருவித்துரைக்கப்பட்டது. ஏ என்பது அசை நிலை. **அல்லார்** என்புழி **ஆர்** உவமவுருபாய் நின்றது. **வரோதயன்** வட சொன்முடிபு. **வல்லான்** என்னும் வினைக்குறிப்பு முற்றுவினையெச்சமாய் நின்றது. என்னை,— ‡ திருமுருகாற்றுப்படையுள், "குழலன் கோட்டன் குறும்பல் லியத்தன்" என்பதற்கு, குழலையூதிக் கோட்டைக்குறித்துப் பல்லியத்தை யொலித்து, என முற்றுவினை யெச்சமாக **நச்சினார்க்கினியர்** கூறிய வுரையிற் கண்டுகொள்க. இக்கிளவிக்குச் செய்யுள் வண்டு முன்னிலையாகப் பாடவேண்டுமென்பது. (அ)

### பொய்ப்பாராட்டல்.

பொய்ப்பாராட்டல் எ-து. தலைமகன் தலைமகள்மாட்டுள்ளதும் இல்லதுங் கூட்டிக்கொண்டாடுதல்.

ஆயின், இக்கிளவியிற் பொய்ப்பாராட்டலெனக்கூறியதல்லது உள்ளது மெனக்கூறியதில்லையால் இவ்வா றுரைகூறியதென்னை யெனின், இல்லதனைக் கூறிக்கொண்டாடுவான் உள்ளதனை விடுவதிலன், மிகவுங் கொண்டாடுவான் என்பதாதலான், பொய்ப்பாராட்டற்கு உள்ளதும் இல்லதுங் கூட்டிக்கொண்டாடுதலென *"மெய்தொட்டுப்பயிறல் பொய்ப்பாராட்டல்" என்னுஞ் சூத்திரத்தில் உரையாசிரிய ரெழுதியவுரையிற் கண்டுகொள்க.

---

† திருக்குறள், செ. ககOக. ‡ திருமுருகாற்றுப்படை, குன்றுதோறாடல்.
* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. கக.

பருந்தொன்றுங் கூரிலை வேற்படை வாணன் பரிமளப்பூஞ்
செருந்தொன்று சோலைத்தென் மாறையன் னீர்செழுந் திங்களுந்
முருந்தொன்று கோப முகங்கண்டு நாணி முயன் மறுத்தீர [கன்
மருந்தொன்று நாடியன் றோவட மேரு வலங்கொள்வதே.

இ-ள்.. பகைவருடலிற் றோய்ந்து அவரூன்பற்றிப் புலவு நாறுத லால்; பருந்து பொருந்துங் கூரிய இலைபோலும் வேலாகிய படையை யுடைய வாணனது பரிமளம்பொருந்திய பூவோடு கூடிய செருந்திமரஞ் செறிந்த சோலைசூழ்ந்த தென்மாறை நாடுபோலும் வனப்புடையவரே!, நிறைந்த திங்கள் உமது முருந்துபொருந்துங் கோபமுடைய முகத்தைக் கண்டு, தன்னிடத்து முயலாகிய மறு உண்மையான் ஒவ்வாமையாய் நாணி, அம்முயலமறுத்தீர்த்தற்கு மருந்தொன்று மனத்தில் நாடியன்றோ! வடமேருவைத் தினம் வலங்கொள்வது. எ – று.

முருந்து - இறகின் முதன்முள்; பற்கு உவமை. கோபம் - இந்திர கோபம், இதழ்க்குவமை. இஃதிரண்டும் ஆகுபெயர். இதனுள் இல்லது மருந்தொன்று நாடுதல், வடமேருவலங்கொள்வது. மகளிர்க்கு உறுப்பு பல வற்றினும் முகனும் முலையுஞ்சிறந்தவுறுப்பாதலின், இவ்விரண்டினுள்ளை இக்கிளவிக்குப் பாடவேண்டு மென்பது புலவர் வழக்கு, சிறப்புடைய பொருளைத் தானெடுத்து மொழிதல் என்னுந் தந்திர உத்தியாதலான். (க)

## இடம்பெற்றுத்தழால்.

இடம்பெற்றுத்தழால் எ-து. தலைவி நிற்குமிடத்து அயலாய்த் தேனருவி யாற்றங்கரையில் அசோகமரம் நிற்க, பூங்கொடி சுற்றும் படர்ந் திருக்க, மாதவிக்கொடி நின்று மலர்பூத்து வண்டுந் தேனும் பாட வரிக் குயில்கூவத் தென்றல்வீசாநிற்க, மணல்பரந்து பூந்தாது தவிசுபடுத்தாற் போற் பொலியும் அவ்விடத்தைக் காணப்பெற்று, அவ்விடத்துக் தலைவி தழுவவிரும்பிக் கூறுதல்.

இவ்வாறு விரித்துச் சிறப்பித்துக் கூறவேண்டுவ தென்னையெனின், களவிற்பகற்குறியிற் கூடுங் கூட்ட மெல்லாவற்றிற்கும் இதுவே குறியிட மாக நிற்றலினெனக்கொள்க.

---

படம்பட்ட வாளர வல்குலி லேதளை பட்டநெஞ்சம்
விடம்பட்ட வாள்பட்ட வேதனை தீரவின் றோய்பொழிலு
தடம்பட்ட வாவியுஞ் சூழ்தஞ்சை வாணன் றமிழ்க்கிரிமா
இடம்பட்ட வார முலைத்தடந் தோய்தற் கிடமிதுவே

இ-ள். ஒளிபொருந்திய அரவினது படம்போலுண்டாக்கப்பட்ட அல்குலிடத்துக் கட்டுப்பட்ட நெஞ்சமே! விடத்திலே பதம்பட்ட வாளா

னறைகூப்பட்ட துளியந்தீர விண்ணைத்தொட்ட பொழிலும், விரிவுபட்ட வாவியுஞ்சூழ்ந்த தஞ்சைவாணனது பொதியமலையினிடத்து காம் மார்பெல்லாம் இடமாக்கப்பட்ட முத்துமாலை பூண்ட முலையாகிய வாவியிற் குளித்தற்கிதுவே யிடம். எ-று.

'படமபட்டவாளரவு' என்புழி மொழிமாற்றிக்கொள்க. நெஞ்சம், அண்மைவிளி. வாள்போன்றதனை வாள் என்றார், அஃது ஆகுபெயராற் கண்டுகொள்க. தமிழ்க்கிரி யெனபுழி கண் என்னும் உருபு தொக்கது. இதுவே யென்னும் ஏகாரமதேற்றம். அததேற்றததினால் இடம்வேறில்லை யென்பதுணாரத்தப்பட்டது. (௧௦)

### வழிபாடுமறுத்தல்.

வழிபாடுமறுத்தல எ-து. இரந்துபினனிலைநிற்றல் முதலாகப் பொய் பாராட்டல் ஈறாகத் தலைவன் வழிபட்டதனைத் தலைவிமறுததல.

இடம்பெற்றுத் தழாலென்னுங் கிளவியில இடங்குறித்துத் தலைவன் தன்னுட் கூறுதலும், தலைவி தனனியல்பான அவன் கூறியவிடத்துக் காக தாளியம்போலச செனறாள் கூறக்கேட்டு இவன்சொற்படி சென்றாளல் லள், அங்ஙனஞ்செனறாளாயின் புணர்ச்சிக் குடன்பட்டனளாம். ஆகவே, மறுத்தெதிா கோடலோடு மாறுகொள்ளுமே. அன்றியும், இக்கிளவியின் பொருள் தலைவன் வழிபாட்டைத் தலைவிமறுத்தா ளென்பதாகலின், மறுத்தே கூறவேண்டுமெனபபடுமே. அஃதென்னையெனின, தலைவன நெஞ்சுட்கூறியதனைத தலைவியறியாளென றுணர்க.

---

தேறாத தெவ்வென்ற வாணன்றென் மாறைச்செந் தேனருவி
ஊறாத காலத்து மூறுதண சாரலொா துக்கிடநதந
தாறாத சோகமு மாற்றுதல் வேணடு மசோகமெய்தி
மாறாத தணணளி கூர்மலா வாண்முக மாதவியே.

இ-ள். அசோகமரத்தைப் பொருந்தி எஞ்ஞான்றும் மாறாத தண்ணிய வண்டு செறிந்தமலரா ஒளிபொருந்தியமுகத்திலேயுடைய குருக்கத்தியே! நீயொருகாரியஞ்செய்யவேண்டுமே. அஃதென்னையெனின், தெளிவில்லாத பகையை வென்ற வாணனது தென்மாறை நாட்டகத்துச் செந்தேன் கலந்த அருவியாறு ஊறாத வேனிற் காலத்தும், நீ ஊறப்பட்ட குளிர்மலையினிடத் திருக்கின்றனை யாதலால், எனக்கொதுங்குமிடங் கொடுத்து இவரது ஆறாத சோகமும் ஆற்றுதல்வேண்டும். எ-று

இவரது சோகத்தை யாற்றுந்தன்மை பெண்டன்மை யாகலின், நினக்கு அப்பெண்டன்மை சிலேடைவகையாற் றோன்றிநின றனையென்று கூறினானென்பது அஃதென்னையெனின், நீசோகமின்றி அசோகமெய்தினை:

அன்றி, தண்ணளியையு முடைய மலர்போலும் வாண்முகத்தையு முடையை; அன்றியும், மாதவியென்றொரு பெண்பெயரினையு முடையை; ஆதலான், இவர் சோகத்தை யாற்றல் வேண்டுமென்பதனுன் நீயோர் கருமஞ் செய்யவேண்டுமென வருவித் துரைக்கப்பட்டது. மாதவியை நோக்கி நீ செய்கென்று கூறினமையான் தலைவி மறுத்தமை தோன்றிற்று. இங்ஙனங் கூறத் தலைவன் நெருங்கிவருதலால் நாணிக்கண் புதைத்தாளென்க. இஃது இச்செய்யுளில இல்லையாற் கூறியவாறெனனையெனின், மேல்வருங் கவியுள் கண்புதைத்து வருந்தல்கூறுகின்றாராதலான், இச்செய்யுளிற் கண்புதை கூறவேண்டுமெனறுணர்க.

தேருத - தெளியாத தெவ்வு - பகை. அருவியூறுதகாலம் - வேனிற் காலம். உம்மை - சிறப்பு சாரல் - மலைப்பக்கம். உம்மை—அசைநிலை. குருக்கத்திமே லேற்றுங்கால்,—அசோகம்-ஓர்மரமாம். அளி-வண்டு. மலர் வாண்முகமாதவி - மலரொடொருநதிய முகத்தையுடைய குருக்கத்தி. பெண் மேலேற்றுங்கால்,—அசோகம் - துன்பமின்மை தண்ணளி - அருள். மலர் வாண்முகம் - மலாபோலும ஒளிபொருந்திய முகம மாதவி - மாதவி யென்னும்பெண். (கக)

## இடையூறுகிளத்தல்.

இடையூறுகிளத்தல எ-து. தலைவிநாணிக்கண்புதைத்ததினுனெழுந்த துன்பததைக் கூறுதல.

சிதையா முளரித் திருமா ளிகையிற் சிறநததெனறென்
இதயார விநதத தினிதிருப பீரிரு கோடடொருகை
மதயானை வாணன வருநதஞ்சை சூழவையை நாட்டுறைவோர்
புதையார் தனமென்ப தோமதர் வேற்கட புதைததுவே.

இ-ள். கேடில்லாத தாமரைாத திருமாளிகையுஞ் சிறந்ததென்று என் னிதயதாமரை வீட்டில் கன்றாக விருக்கினறவரோ! இருகொமபையும் ஒரு கையையுங்கொண்ட மதயானையையுடைய வாணன் வரபபட்ட தஞ்சை யைச் சூழ்ந்துவரும் வையைநாட்டின்க ணுள்ளோரா தனமபுடைக்கின புதையாரொன்னும நாட்டுவழககமோ? தனததைப்புதையாது, நீ மதாத்த வேல்போலுங கண்ணைப்புதைத்தது. எ - று.

இதனைத் திருமகளெனப பாவித்துக் கூறினமையான் தாமரை மாளிகை யாயிற்று. இதயாரவிந்தம் வடசொன் முடிபு. 'வையைநாட் டுறைவோர் தனத்தைப் புதையார்' என்றது தினந்தோறுந் தருமத்தின் பொருட்டும், புகழின் பொருட்டும் வழங்குவரென்று கூறியவாறுணர்க. ()

## நீடுநினைந் திரங்கல்.

நீடுநினைந் திரங்கல் எ-து. புணர்ச்சி யெய்தாமையான் இவளுள்ளம் எஞ்ஞான்றியையுங்கொல்லோவெனக் காலநெடிதாகத் தலைவியை நோக்கி நினைந்திரங்கிக் கூறல்.

தமிழ்தங் கியதஞ்சை காவலன் வாணனா டன்னசிலம்பில
குமிழ்தங் கியமதிக் கொம்பரன் னீர்குளிர் வெண்ணிலவூ
டுமிழ்தண் டரளப் பவளச்செங் கேழ்வள்ளத் துள்ளிருக்கும்
அமிழ்தந் தருவதென் றோபெரு வேட்கையெ னாருயிர்க்கே.

இ-ள். 'தமிழ் நிலையாய்த்தங்கிய தஞ்சைக்கு வேந்தாகிய வாணன், பெரிய மலையிடத்தில் குமிழ்தங்கிய மதியையுடைய கொம்புபோல்வீர்! பெருவேட்கைகொண்ட என்னாருயிர்க்குக் குளிர்ந்த வெள்ளிய நிலவினை உள்ளே கால்பட்ட தண்ணிய தரளம்பொருந்திய பவளத்தினாற் செய்த சிவந்தநிறம்பொருந்திய கிண்ணத்தி னுள்ளிருக்கும் அமிழ்தம் நீர் தருவதென்ஞான்றோ! என்று நீடுநினைந்திரங்கிக் கூறினான். எ-று.

'குமிழ்தங்கியமதிக் கொம்பரன்னீர்' என்றது நாசிபொருந்திய முகத்தையுடைய கொம்புபோல்வீ ரென்றும், 'குளிர்வெண் ணிலவூடுமிழ்தண் டரளம்' என்றது முறுவலென்றும், 'பவளச்செங்கேழ் வள்ளம்' என்றது வாயென்றும் பொருளைக்கூறாது உவமத்தினாற் கூறினார், ஆகுபெயரென்னு மிலக்கணங்கொண்டென்றுணர்க. (௧௬)

## மறுத்தெதிர்கோடல்.

மறுத்தெதிர்கோடல் எ-து. முன் வழிபாடு மறுத்ததனை மறுத்துத் தலைவன் கூறிய சொல்லை யேற்றுக்கோடல்.

ஏற்றுக்கோட லாமோவெனின், போரேற்றானென்றால் போரெதிர்ந் தானென்று பொருள் கூறுதல்போலுமென்றுணர்க. வழிபாடுமறுத்ததனை மறுத்தலென்றது வழிபாடுமறுத்தல் இக்கிளவியைத் தொடர்ந்தன்றே. இடையூறு கிளத்தல், நீடுநினைந்திரங்கல் என்னும் இரண்டுகிளவியும் இடையிட்டு நிற்க, வழிபாடுமறுத்ததனை மறுத்தெதிர்கோட லெங்ஙன மியையு மோவெனின் இயையும். என்னையெனின், வழிபாடு மறுத்தல் தலைவி கூற்றாகலின், அக்கூற்றுக்கு மறுத்தெதிர்கோடலும், தலைவிகூற்றாகலின் அடுத்த கூற்றாய் இயைந்தவாறு காண்க. இவ்வியையுடைமை ‡"மறைந்தவற்காண்டல்" என்னுந் தொல்காப்பியச் சூத்திரத்தில் கிளவிகோக்கு முறைமையில் தலைவிகூற்றெல்லாம் ஒருவகைப்படத் தொகுத்துக்கூறுமிடத்து வழி

‡ தொல். பொருள். களவியல், சூ. ௨௦.

பரிமேறுத்தல, மறுத்தெதிர்கோடல் எனத் தொடர்ச்சியாய்க் கூறியவா றுணர்க.

---

கறையா ரிலங்கிலை வேலனபா காமக் கடற்கெதிர்ந்த
நிறையாம் வரம்பினி நிற்பதன் றானிறை நீருலகை
மறையாமல் வன்கலி மாற்றிய வாணன்றென் மாறையினும்
பொறையார் தவஞ்செய்தி லேனெஞ்ச மேயென் புகல்வதுவே.

இ-ள். நெஞ்சமே! குருதியாரநிலங்கிய இலைபோலும் வேலையுடைய அனபரது காமக்கடல கரைபுரண்டுவர, அக்கடற்கெதிராய் நமதுடைய நிறையாகிய வரம்பு தடுக்குமெனக் குறுகிடின நிற்பதன்று. நிறைந்த நீர் சூழ்ந்த வுலகை மறைக்கவந்த வன்கலியை மறையாமல் மாற்றியிடுந் தன்மையையுடைய வாணனது தென்மாறை நாடடுக்கண வேட்கையைப் பொறுக்கத்தக்க நிறைதவஞ்செய்திலேம், நாமினிப்புகல்வதென? எ - று.

கறை - குருதி. ஆல் - அசை. கடலெழுந்துவரின் குறுக்கே தடுக்க நினைப்பார் உலகத்திலலையென்பது குறிப்பாற் பெறப்பட்டது. நிறை - மறை பிறரறியாமை நிறை யெனப்படுவது மறை பிறரறியாமை யென்றா பிறரும். அன்றியும,

† "காமக் கணிச்சி யுடைக்கு நிறையென்னு
நாணுத்தாழ் வீழ்த்த கதவு." — என்று கூறியவாற்றானு முணர்க. (௧௪)

## வறிதுநகைதோற்றல்

வறிதுநகைதோற்றல் எ-து. தலைவி முகத்தே சிறுநகை தோற்றல். என்னை, ‡‡"வறிதுசிறி தாகும்" என்னுஞ்சூத்திரத்தா னுணர்க. நகைதோற்றல - நகை வெளிப்பாயத்தோன்றிய தென்னின பொருந்தாது. என்னை, தலைவன்முன் நாணுடைய ளாதலின் பலதோன்றச் சிறுமுறுவற் றோன்றலு மமையாது. அமையாதாயின, வறிது நகைதோற்றலென்னுங் கிளவிபொருள் பொயக்குமே யெனின், அற்றன்று †† "முகைமொக்கு ளுள்ளது நாற்றம்போற் பேதை-நகைமொக்கு ளுள்ளதொன் றுண்டு." என்பதனான் நகை வெளிதோன்றா தென்பது கூறியவாறுணர்க. நகைதான், தோன்றுமாறெனனையெனின், தலைவன்சொற்கு வேட்கையுள் ளுடன்பட்டு மகிழ்ச்சியான் முகமலர்ந்து அமழ்லாசசிக குறிப்பினை நகையெனத் தோற்றுவித்தவா றுணர்க.

---

† திருக்குறள், செ. ௧௨௫௧. ‡‡ தொல். சொல். உரியியல், சூ. ௩௦.
†† ஷை செ. ௧௨௭௪.

எறிதே னலம்புஞ் சிலம்பினெப் போது மிரந்திவள்பின்
வெறிதே திரிந்து மெலிந்தன நாமுள்ள மெல்லியற்குப்
பிறிதேகொ லென்னும் பெருந்தகை தேறப் பெரிதுயிர்த்து
வறிதே முறுவல்செய் தாடஞ்சை வாணன் வரையணங்கே.

இ-ள். இறகாற் காற்றை யெறியும் வண்டுகள் எப்போதும் ஆரவாரிக்குஞ் சிலம்பிடத்தில குறையிரந்து இவள்பின்னே பயனின்றியே திரிதலைச்செய்து நாம் மெலிந்தனம, இம்மெல்லியற்கு உள்ளம் வேறென்று சொல்லும பெருந்தகை தேறுமாறு பெரிதாய நெட்டுயிர்ப்பெறிந்து தஞ்சைவாணன் வரையணங்குபோல்வாள வறிதே முறுவல்செய்தாள். எ - று.

**எறிதேன்** என்பது ஒற்றுமை நயத்தால் சினைவினை முதன்மே னின்றது. அலம்பல - ஆரவாரித்தல **எப்போதும்** என்பதனை வண்டுகளோடு கூட்டுக. **பெரிதுயிர்த்தல்** எற்றுக்கோவெனின், நிறையால் தடுக்கரிதாயிற் றென்னும் எண்ணததினால் நெட்டுயிர்ப்புத தோன்றிற்றெனக்கொள்க.

இக்கவி யார் கூற்றெனின, உரைப்பாருங் கேட்பாரு மின்மையான் கவிக்கூற்றென்று கொள்க. அகப்பாட்டுறுப்புப் பன்னிரண்டினும துறை யென்னும் உறுப்பு இக்கவியெனக்கொளக. தலைவன்கூற்றாய்க கூறாது கவிக்கூற்றாய்க கூறவேண்டுவ தெனனையெனின், இது தலைவன் கூற்றாயின் மேல் முறுவற்குறிப் புணாதலெனனும் தலைவன் கூற்றுத தோன்றாதாதலான் இது கவிக்கூற்றாயிற்று. (௧௫)

**முறுவற்குறிப்புணர்தல்.**

முறுவற்குறிப்புணர்தல என்-து. அம்முறுவலின் குறிப்பைத தலைமக னுணர்தல்.

---

வின்மலை வேலன்ன நன்னுதல் வாட்கண்ணி வேட்கையென்னாள்
என்மலை வேனென்னு மென்னுயிர் தாங்கு மெதிர்ந்தவொன்னார்
மன்மலை வேழந் திறைகொண்ட சேய்தஞ்சை வாணன்மஞ்சார்
தென்மலை வேய்நிக ருமபெருந தோளி சிறுநகையே

இ-ள். போரிலெதிர்ந்த பகைவரது நிலைபெற்ற மலைபோன்ற யானையைத் திறையாகக்கொண்ட முருகவேளை யொக்குந் தஞ்சை வாணனது முகிலார்ந்த பொதியமலையிலெழுந்த வேயைநிகரும பெரிய தோளினையுடையாளது சிறியநகையானது, வில்லும் பொருகின்ற வேலும் போன்ற நன்னுதலும் வாட்கண்ணுமுடையாள் எனது வேட்கையினை யென்னுளாயின், யான் இனி யாதுசெய்வேனென்னும் என்னுயிரைத் தாங்காநிற்கும். எ - று.

'வின்மலைவேல்' என்புழியும், 'நன்னுதல் வாட்கண்ணி' என்புழியும் உம்மைத்தொகை நிரனிறை. மலைவேல்-பொருவேல். என்மலைவேன்-யார்த்து செய்வேன். மலைவேழம் - உவமைத்தொகை. என்னுயிர் தாங்காதிற்கு மென்பதனால், தலைவிவேட்கைக்குறிப்பை முறுவலின் னுணர்ந்தானென்று கொள்க. கைக்கிளையிற் 'குறிப்பறிதல்' என்பது தன்னவாவினாற் கூறிய தல்லது வேட்கைக்குறிப்பு நிகழ்ந்ததன்றென்பது இக்கிளவியாற்றெளியப் பட்டதெனவுணர்க. (கசு)

## முயங்குத லுறுத்தல்.

முயங்குதலுறுத்தல் எ-து. தலைவி முயங்குதற்கு உடன்பட்ட அருமையை வலியுறுத்திக் கூறுதல்.

---

வானக் கதிரவன் மண்ணக மாதை மணந்ததன்றோ
நானக் குழலியை நானின்று பெற்றது நாவலர்க்குத்
தானக் களிறு தரும்புயல் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
கானக் கடிவரை வாய்விரை நாண்மலர்க் காவகத்தே.

இ - ள். நாவலர்க்கு மதம்பொழியும் யானையைக் கொடுக்கும் புயல் போன்ற வாணனது தஞ்சைசூழ்ந்த காடுமிகுந்தவரையிடத்து, மணநாறும் நாட்கொண்ட மலர்செறிந்த சோலையிடத்து, மான்மதமார்ந்த குழலினை யுடையாளை நான் இன்று முயங்கப்பெற்ற அருமை, வானத்தை யிடமாக வுடைய ஆதித்தன் மண்ணிடத்து மாதைவந்து கூடியதாம். எ - று.

வானம் - ஆகாயம். நானம் - மானமதம். தானம் - மதம். **புயல் வாணன்** - உவமைத்தொகை. கானம் - காடு. கடி - மிகுதி. நாண்மலர் - முறுக்கவிழ்மலர். அன்றோ என்னும் ஓகாரம் எதிர்மறை. 'நானின்றுபெற்றது' என இறந்தகாலத்தாற்கூறியது, கூடும் விரைவுபற்றியெனக்கொள்க. என்னை,—

‡ "வாராக் காலத்து நிகழுங் காலத்து
மோராங்கு வரூஉம் வினைச்சொற் கிளவி
யிறந்தகா லத்துக் குறிப்பொடு கிளத்தல்
விரைந்த பொருள வென்மனார் புலவர்." — என்னுஞ் சூத்திர விதியாற் கண்டுகொள்க. (கஎ)

## புணர்ச்சியின்மகிழ்தல்.

புணர்ச்சியின் மகிழ்தல் எ-து. தலைவன் புணர்ச்சியான் மகிழ்தல்.

---

‡ தொல். சொல். வினையியல், ௩ சஃ.

மலைநாடு கொண்ட வழுதிகண் போலபவன் வாணனெண்ணெணை
கலைநாடு தஞ்சையா காவலன் மால்வரைக் கன்னிபொன்னுணை
முலைநா முயன்று முயங்கின மான்முயன் றுலினியைந
தலைநாக நன்மணி யும்பெற லாமித் தரணியிலே.

**இ - ள்.** நெஞ்சமே! சேரமானுடாகிய மலைநாட்டை வெற்றியாற் கவர்ந்த வழுதிக்குக் கண்போன்றவன, அறுபத்துநான்குகலைகளும இருப பதற்கு நாடிய தஞ்சைநகரிலுள்ளாாக் கரசனுகிய வாணனது பெரிய மலை யிடத்து, பெறுதற்கரிதாகிய இக்கன்னியினுடைய பொன்னு ணணிந்த முலையினிடதது நாம முயற்சியான் முயங்கினம; ஆதலால், இன்று இத் தரணியிற் கிடைபபதற கரிதாகிய ஐந்தலை நாகததினது நல்ல மணியும பெறவேண்டுமென்று சிந்தித்தலை முயன்றாற் பெறலாம எ - று.

தவஞ்செய்து முயனறார்க்கும் எய்துதறகரிதாகிய இவளை நமமுயறசி யாற் பெற்றமையான, நாகமணியும பெறலாமெனறு தன முயறசியின் பெருமை கூறினனெனக. என்னை,—

† "ஊழையு முப்பக்கங் காண்ப ருலைவின்றித
தாழா துஞற்று பவர்." — இக்குறளில் ஊழில ஒருவறகுப் பேறில்லாவிடினும், முயற்சி ஊழைப் புறங்கண்டு நினைத்தது முடிக்கு மெனக்கூறினாராகலி னென்க. இவன் முயற்சி யாதெனின,

* "காடசி முதலாச் சாக்கா டீறாக்
காட்டிய பததுங் கைவரு மெனினே
மெய்யுறு புணாசசி யெய்துதற குரித்தே"— என்னுஞ் சூத்திர விதியால் இப்பத்தவத்தைக் கணனும, மடியின்றி முயன்றுசெய்தலெனக் கொள்க.

ஆயின், **சாக்காடு** என்ப தென்னையெனின், உணாவிலனுதல். மலை நாடு - சேரமானுடு. வழுதி - பாண்டியன். எணணெண்கலை - கல்வி. சீர்ல் - பெருமை. வரை - மலை. பொன்னுண் - பொன்னினுற் செய்த நாண். முயனறு - முயற்சிபபட்டு. முயங்கினம் - புணர்ந்தனம. இனி - இன்று. (௧௮)

## புகழ்தல்.

புகழ்தல் எ-து., தலைவியது நலததைப்பாராட்டல்.

---

திரண்மா மரகதச் செய்குன்று காளின்றுஞ் செவ்வனீர்
முரணமா தவஙகண் முயன்றுசெய் தாலு முளரிமங்கை
சரண்மாறை வாணன் றமிழ்த்தஞ்சை நாட்டென் றனியுயிர்க்கோர்
அரண்மா னனையகண் ணுள்கொங்கை போற லரிதுமக்கே.

---

† திருக்குறள், சே. ௬௨௦.
* அகப்பொருள்விளக்கம, அகத்திணையியல, சூ. ௩௬.

**இ - ள்.** திரண்ட பெரிய மரகதத்தாற்செய்த செய்குன்றுகாள்! நீர் செவ்விய வனத்தின்கண்ணிருந்து இரவுபக லெப்பொழுதும் முலைக்கு நிகராகவேண்டுமென்று மாறுபட்ட பெருந்தவத்தை முயன்று செய்கின்றீர்; செய்யினும் திருமக ளடைக்கலமாக விருக்கும் மாறையென்னும் வாணனது தமிழ்த்தஞ்சை நாட்டகத்துத் துணையில்லாத எனதுயிர்க்கு அரணும் மானும் அனையகண்ணாள் கொங்கையை யொப்பாதல் உமக்கரிது. எ - று.

**செய்குன்று** - வினைத்தொகை. செய்குன்றாவது, மாதர் விளையாடுவதற்கு மரகதமணியாற் செய்யும் மேடை. **செவ்வனம்** என்புழி ஏழாம் வேற்றுமைத்தொகை. முரண் - மாறுபாடு. மாறுபாடாவன,—மழையில் நனைதலும், வெயிலில் உலர்தலும், பனியில் குளிர்தலும், காற்றில் அலைபட்டும் நிலையிற் பிரியாதிருத்தல். மா - பெருமை. முயன்று - வருந்தி. முளரிமங்கை - திருமகள். சரண் - அடைக்கலம். தனி - துணையின்மை. **அரண்மான்** என்புழி உவமைத்தொகை. மதன்போர்க்கு அரணாயிருத்தலின் **அரண்** என்று கூறியது. போறல் - போலுதல்.

‡ "நெடியதன் முன்ன ரொற்றுமெய் கெடுதலும்" — என்பதனான் நிலைமொழி லகரங்கெட்டு, a‡ "லனவென வருஉம் புள்ளி முன்னர்த் - தநவெ னவரிற் றனவா குமே." —என்பதனான் வருமொழித் தகரங்கெட்டு றகரமாய்ப் **போறல்** என முடிந்து நின்றது. செய்தாலும் என்புழி **உம்மை** அருமைதோன்ற நின்றது.

'இரந்துபின்னிற்றற்கெண்ணல்' முதல் 'நீடுநினைந்திரங்கல்' ஈறாகிய ஒன்பதினுள், 'வழிபாடு மறுத்தல்' ஒன்றும் ஒழித்தொழிந்த எட்டும் வேட்கை யுணர்த்தற்குரியன. வழிபாடுமறுத்தல் ஒன்றும் மறுத்தற்குரித்து. மறுத்தெதிர் கோடலும், வறிதுநகை தோற்றலு மாகிய இரண்டும் உடன்படற்குரியன. முறுவற்குறிப்புணர்தலும், முயங்குத லுறுத்தலும், புணர்ச்சியின் மகிழ்தலும், புகழ்தலுமாகிய நான்கும் கூட்டத்திற்குரியன வாம்.

இங்ஙனம் புணர்ந்த தலைவன், புணர்ச்சியால் வேட்கையிற் குறைபாடுளனே, முன்போலும் வேட்கையுடையனே என்னும் இரண்டில், வேட்கையிற் குறைபாடுடையனெனின், தலைவியிடத்தில் அன்பிலனாம். என்னை, வேட்கையினாற் பிறந்த அன்பாதலான். அன்றி முன்னின்ற வேட்கையிற் குறைபாடிலனெனின், புணர்ச்சியாற் பயனின்றெனவாம். மற்றென்னையெனின், அன்பும் இயற்கையன்பென்றும், செயற்கையன்பென்றும் இரண்டுவகைப்படும். அவற்றுள் இயற்கையன்பாவது, ஊழ்வினை வயத்தான

‡ தொல். எழு. தொகைமரபு, சூ. ௧௮.
a‡ ஷை ஷை. ஷை சூ. ௭.

ஒருவனிடத்து ஒருவர்க்குப் பற்றிய அன்பு. செயற்கையன்பாவது, புணர்ச்சிக்கண் தலைவியிடத்துப் பிறந்த குணங்களாற் றோன்றும் அன்பு. ஆதலால், புணர்ச்சிக்கண் குறைந்த வேட்கை இயற்கையன்பினானும், செயற்கையன்பினானும் அக்குறைவு நிறையுமாதலான், புணராத முனனின்றவேட்கையும் அன்பும் புணர்ந்த பின்னும் ஒத்து நிற்குமென்றுணர்க. என்னை,—

‡ "அதுவே, தானே யவளே தமியர் காணக்
காமப் புணர்ச்சி யிருவயி னொத்தல்" — என்னும் இறையனார்

அகப்பொருட் சூத்திரத்தில், இருவயினொத்தல் என்பதற்குப் பொருள் புணராத முன்னும புணர்ந்தபின்னுமாகிய இரண்டிடத்தும் வேட்கையும் அன்பும் ஒத்திருக்குமென்பது அவ்வுரையாற் கண்டுகொள்க. (கக)

இயற்கைப்புணர்ச்சி - முற்றும.

---

## வன்புறை.

அஃதாவது, தலைவி ஐயுறறவழி ஐயுறவுதீரத் தலைவன் வற்புறுத்திக் கூறல்.

அஃது *"ஐயந் தீர்த்தல் பிரிவுறி வுறுத்தலென் - றெய்திய வன்புறை யிருவகைத் தாகும்." என்னுஞ் சூத்திரவிதியால் வன்புறை இரண்டுவகைப் படும்.

### அணிந்துழி நாணிய துணர்ந்து தெளிவித்தல்.

அணிந்துழி நாணிய துணர்ந்து தெளிவித்தல் எ - து. புணர்ச்சியிடத்துத் தலைவியணிந்த முத்துமாலை முதலிய கொங்கையணி குழலணி இவைகள் வேறுபட்டதனைத் தலைவன் தன் கையினால் வேறுபாடு தீரவணிந்துழி, தலைவி பாங்கியாலணியப்பட்ட வணி இவர் கையாலணியும்போது வேறுபடுமென்றும், இவ் வேறுபாட்டைப் பாங்கியறியின ஐயம் பிறக்குமென்றும், நாணினளாகி முகம் வேறுபட்டாளாக, அவ்வேறுபாடு தலைவனறிந்து தலைவியைத் தெளிவித்தல்.

---

நாவியுங் காரகி லாவியுந் தோய்குழ லணியஞ்சேல்
வாவியுஞ் சோலையுஞ் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவயற்
காவியுஞ் சேலுங் கமலமுங் காடுநின் கண்மலரும
ஆவியும் போலினி யாரணி யாக வணிந்தனனே.

இ - ள். மான்மதமுங் கரிய வகிற்புகையுந் தோய்ந்த குழலையுடையாய்! யானணிந்த அணியால் ஐயுற்று நாணியஞ்சலை; வாவிகளுஞ் சோலை

---

‡ இறையனார் அகப்பொருள், சூ. உ.
அகப்பொருள்விளக்கம, களவியல, சூ. கஉ.

கனாஞ் சூழ்ந்த தஞ்சைவாணனது தென்மாறைநாட்டு வயலிடத்துண்டாகிய நீலப்போதுங் கயலுங் கமலப்போதும் ஒப்புக்காட்டும் நினது கண்மலரும், நினது ஆவியும்போன்ற தோழிமாரணிந்த அணியாக வணிந்தனளாதலால். எ - று.

நாவி - மான்மதம். [புழுகு - புழுகு] தோய்குழல் - ஆகுபெயர். தாழ்குழல் என்பதுபோல அன்மொழித்தொகை யாகாவோ வெனின், ஆகா. என்னை, தாழ்குழல் என்பது வினைத்தொகைப்புறத்துப் பிறந்த அன்மொழித்தொகை. தோய்குழல் அவ்வண்ண மாகாது மற்றுமோர் சொல்லை நோக்கி நிற்றலான் ஆகுபெயராயிற்று. காவி - நீலப்போது. சேல் - கயல். இனியார் - ஈண்டுத் தோழிமார். (உ௦)

## பெருநயப்புரைத்தல்.

பெருநயப்புரைத்தல் எ - து. மீண்டும் இவன் வருவன்கொல்லோ! வாரான்கொல்லோ! என்றெண்ணி முகம்வேறுபட்டாளாக, அவ்வேறுபாட்டைத் தலைவன் குறிப்பானுணர்ந்து தனது மிகுந்தகாதலை யுரைத்தல்.

---

மன்னா வுலகத்து மன்னிய சீர்த்தஞ்சை வாணன்வெற்பில்
என்னாவி யன்ன விவளிடை மேலிணை கொண்டெழுந்த [டோ
பொன்னா ணணிகொங்கை போலவண் டேருங்கள் பொய்கையுண்
நன்னா ளரும்பொரு தாளிரண் டீனு நளினங்களே.

இ - ள். நிலையில்லாத உலகத்தினிடத்து நிலைபெற்ற சீர்த்தியையுடைய தஞ்சைவாணனது வெற்பிடத்து வண்டுகாள்! என்னாவியையொத்த இவளிடைமேல் இரண்டென்னும் எண்ணைக்கொண்டெழுந்த பொன்னாணென்னும் பூணையணிந்த கொங்கைபோல, நலநாட்கொண்ட அரும்புகள் ஒருதாள் இரண்டீனுந் தாமரைகளை உங்கள் பொய்கைக்கண் கண்டதுண்டோ? எ - று.

வண்டுகாள்! நீர் எவ்விடத்து வாவிகளினுஞ்சென்று எல்லாப் பூக்களையுங்கண் டறிதிரன்றே? அவ்வாவிகளில் ஒருதாள் இரண்டரும்பீனுந் தாமரையைக் கண்டதுண்டேல் சொல்லுவீராகவென்று கூறியது, வயிற்றுரோமரேகை ஒரு தாளாகவும், முலையிரண்டும் அத்தாளிலே பிறந்த அரும்பாகவும், தன் காதலாற் றோன்றியதென்று தன்னயப்புரைத்தவா றுணர்க. அன்றியும், 'என்னாவியன்ன விவள்' என்பதனான் இவள் நீங்கும் போதில் உயிர்நீங்கும், [ உடம்பாகுவேன் என்பது தோன்றலானும், தன்னயப்புணர்த்தியவா றுணர்க.

சீர் - கீர்த்தி. **பொய்கையுண்டோ** என்புழி ஏழனுருபு தொக்கு நின்றது 'வெற்பகத்து வண்டீர்' எனக்கூட்டுக. இக்கிளவிக்குஞ் செய்யுளை வண்டு முன்னிலையாகப் பாடவேண்டுமென்பது. (௨௧)

## தெய்வத்திறம்பேசல்.

தெய்வத்திறம்பேசல் எ-து. இங்ஙனங் கூறியுந் தெளிந்திலளால் ஊழ்வலியினது திறத்தைக் கூறல்.

---

*மன்னிய பார்புகழ் வாணன்றென் மாறையின் மாந்தளிர்போல*
*மின்னிய மாமை விளர்ப்பதென்னே விதி கூட்டநம்மிற்*
*பின்னிய காதற் பிரிப்பவர் யாரினிப் பேரருவி*
*இன்னிய மாக விளமயி லாடு மிரும்பொழிற்கே.*

இ-ள். பாரிடத்து நிலைபெற்ற புகழையுடைய வாணனது தென்மாறைவெற்பில் வரும் பேரருவி தண்ணுமையாக இளமயிலாடும் இப்பெரிய சோலையிடத்து, இன்று மாந்தளிர்போல் ஒளிவிடப்பட்ட அழகை விளர்த்துக் காட்டுவதென்னே? விதியானது கூட்டுவிக்க நம்முட் பிணித்த காதலைப் பிரிப்பவர் யார்? ஆதலால், நீ ஐயுறேல் எ-று.

'அருவி இன்னியமாக இளமயிலாடும்' என்பதனை **வெற்பு** வருவிக்கப்பட்டது. 'பார்மன்னிய' என இயையும். மாமை-அழகு; நிறமுமாம்.

† "தம்மி லிருந்து தமதுபாத் துண்டற்றா
லம்மா வரிவை முயக்கு." —என்னுங் குறளில் **அம்மா அரிவை** என்பதற்கு அழகிய மாமைநிறத்தையுடைய அரிவையென்று **பரிமேலழகர்** எழுதிய வுரையாற் கண்டுகொள்க.

விளர்த்தல் - மனக்கவற்சியால் வெளுத்தல். விதி - ஊழ்வினை. பின்னிய - பிணித்த. இனி-இன்று. இன்னியம்-ஈண்டுத்தண்ணுமை. இருமை-பெருமை. **பொழிற்கே** என்புழி வேற்றுமைமயக்கம். ஏகாரமிரண்டும் ஈற்றசை. தலைவி-முன்னிலையெச்சம். (௨௨)

## பிரியேனென்றல்.

பிரியேனென்றல் எ-து நீர்க்கரைப்பசுங்கொடி வேனில்வெப்பத்தால் நிறம் வேறுபடல்போல, புணர்ச்சியின்பத்தாற் பெற்றவழகு எம்பெருமான் பிரிவென்னுங் கவற்சியால் விளர்த்த வெளுப்பு நீங்காமைகண்ட தலைமகன் நின்னிற் பிரியேனென்று வற்புறுத்திக் கூறல்.

---

† திருக்குறள், செ. ௧௧௦௭.

வண்கொடி யேய்மதின் மாறைவ ரோதயன் வாணனொன்றா
எண்கொடி யேனெய்த விவ்வண்ண நீயிரங் கேலிரங்கேல
நுண்கொடி யேரிடை வண்டிமிரா பூங்குழ னூபுரத்தாள்
பெண்கொடி யேபிரி யேனறி யேனிறப் பிரியினுமே

இ - ள் கொடைசெருந கொடையாற் கட்டிய கொடிபொருந்திய மதில் சூழ்ந்த மாறைநாட்டில், வரத்தினை துதையஞ்செய்த வாணனுக்குப பகைவராயுள்ளா ரெய்து மெண்ணத்தைக் கொடியேனாகிய யான் எய்த நீனைக்கின், விளாப்புவண்ணமாக நீ யிரங்கற்க விரங்கற்க, நுண்ணிய கொடிபோலழகையுடைய இடையையும், வண்டுகளிமிரும பூவணிந்த குழலையும், பரிபுரமணிந்த தாளையுமுடைய பெண்கொடியே! நினனிற் பிரியேன்; அன்றிப பிரியினுங் கணப்போதுந் தரியேனென்று அணங்கினமுணர்ந்கூறுற்றான்.

வண்மைக்கொடி - வண்கொடியென நின்றது. நன்மைநெறி - நன்னெறியென நின்றாற்போல வண்மை, நன்மை யென்பன பண்புப்பதமாகலின், ஈற்றுயிர மெய்கெடுதல அபபதத்திற கியலபெனக்கொளக. வண்மை - கொடை. ஏய்தல - பொருந்துதல. 'வாணனொன்றா' என்பது,

‡ "அதுவென் வேற்றுமை யுயர்திணைத் தொகைவயி
னதுவெ னுருபுகெடக் குகரம வருமே."—எனனும வேற்றுமை
மயங்கியற் சூத்திரத்தால, அது என்னும ஆறனுருபு 'வாணனுக்கு ஒன்றா' என நான்கனுருபாகப் பொருள்கொள்க.

எண் - எண்ணம். இவ்வண்ணம் எனபுழி சுட்டு முற்கவியில் 'விளர்ப்பதென்னே' என்று கூறினமையான் அவவிளாபபு வண்ணத்தைச் சுட்டிற்று. 'இரங்கே லிரங்கேல' எனறது அடுக்குமொழி. என்னையெனின்,—

"கொல்லல கொலலல் செயநலங் கொல்ல லெஞ்ஞான்றுஞ்
சொலலல சொலலல பொய்ம்மொழி சொலல லெஞ்ஞானறும்
புலல்ல புல்லல் பிறெறி புல்ல லெஞ்ஞான்றும். — என்னும்
இம்மூவடி வெளிவிருத்தத்துள் அடிதோறும் அசசபபொருண்மைகக்ண் விரைவுபற்றி அடுக்குமொழி வந்தவாறுபோலக் கொளக. ஏர் - அழகு. இமிர்தல்-முரலுதல. எனனை, —

‡‡ "வேங்கை தொலைத்த வெறிபொறி வாரணத்
தேர்ந்து மருப்பி னிவண் டிமிர்பூதும" — என்னுங் குறிஞ்சிக்
கலியுள், இமிர்தல் வண்டொலிக்கு வந்தவாறு கண்டுகொள்க

'நுண்கொடியேரிடை' உவமைத்தொகை. 'நுண்கொடி யேரிடை வண்டிமிர் பூங்குழ னூபுரத்தாள்' என்புழி உமமைத்தொகை. 'பிரியேன்'

‡ தொல. சொல, வேற்றுமைமயங்கியல, ௲ ௧௧.
‡‡ கலித்தொகை, குறிஞ்சிககலி, செ. ௭.

என்னுங் கிளவியில் 'தரியேன் சிறபிரியினும்' என்று கூறியவா றென்னை யெனின், இங்ஙனங் கூறுவிடின் 'பிரிந்துவருகென்றல்' என்று அடுத்த கிளவி வருதலின், பிரியேனென்று முன்சொல்லி உடனே பிரிந்து வருவே னெனக் கூறின், தலைவன் பொய்யனெனத் தோன்றி தலைவி யிறந்துபடும். அதனால் பிரியேனென்றல் உடனே பிரிவையும் அறிவுறுத்திக் கூறின னென்பது. இக்கிளவிக்குப் 'பிரியேன் பிரியினுந் தரியேன்' என்று கூறுவ திலக்கணம். என்னை, —

§ "மின்னிற் பொலிந்தசெவ் வேல்வலத் தான்விழி ஞத்தெதிர்ந்த
மன்னர்க்கு வானங் கொடுத்தசெங் கோன்மன்னன் வஞ்சியன்னாய்
நின்னிற் பிரியேன் பிரியினு மாற்றே னெடும்பணைத்தோள்
பொன்னிற் பசந்தொளி வாடிட வெனனீ புலம்புவதே" — எனவும்,

§ "பொன்னார் புனைகழற் பூழியன் பூலந்தைப் பூவழிய
மின்னா ரயிலகொண்ட வேந்தன் விசாரிதன் வெண்டிரைமேல்
முன்னாண் முதலறி யாவண்ண நின்ற பிரான்முசிறி
அன்னாய பிரியேன் பிரியினு மாற்றே னழுங்கற்கவே." — எனவும்

கூறிய சான்றோர் செய்யுட்களா னுணர்க.

இக்கிளவியில் அணங்கொடு சூளுற்றுக் கூறினானென்பது. சூளுறல் செய்யுளிற் கூறிய தில்லையாலெனின், வரைவியலில் ¶ 'துதித்தே னணங்கொடு சூளுமுற்றேன்' என்பதனானும், * 'தெய்வம் பொறைகொளச் செல்குவம்' என்பதனானும் உணர்க. இஃது இக்கிளவிக்கணல்லது கூறுதற்கு வேறோரிட மின்மையான் இங்ஙனங் கூறியதென்றுணர்க.

‡ "இலங்கு மருவித் திலங்கு மருவித்தே
வானி னிலங்கு மருவித்தே தானுற்ற
சூள்பேணான் பொய்த்தான் மலை." — எனனுங் குறிஞ்சிக்கலியுள்

சூளுறவு கூறியவா றுணர்க. (௨௩)

## பிரிந்துவருகென்றல்.

பிரிந்துவருகென்றல் எ-து. வெளிப்படை. பிரிந்துவருகேன் என்னுஞ் சொல் விகாரப்பட்டதெனக்கொள்க.

---

சென்றே பகைவென்ற திண்படை வாணன் செழுந்தஞ்சைசூழ்
நன்றே தருவையை நாடனை யாய்நம தாருயிர்போல்
ஒன்றே யெனத்துணை யூங்குயர் சோலையி னூடொளித்து
நின்றே வருவலிங் கேவினை யாடுக நீசிறிதே.

---

¶ தஞ்சைவாணன்கோவை, செ. ௨௯௦.
* அகப்பொருள்விளக்கம், வரைவியல், சூ. ௯.
‡ கலித்தொகை, குறிஞ்சிக்கலி, செ. ௫.

இ - ள். மேற்சென்று பகையைவென்ற திண்ணிய சேனையையுடைய வாணனது வளவிய தஞ்சையைச் சூழ்ந்துவந்து நன்மை தரப்பட்ட வையைநாடு போன்றவளே! யான் ஒருசொல் சொல்லுகின்றேன், அது கேட்பாயாக; நம்மிருவர்க்கும் அரியவுயி ரொன்றாயதுபோல வென்சொல்லும் ஒன்றே; யாதெனின், உவ்விடத்துயர்ந்த சோலையினுள் ஒளித்து நின்று வருவேன், இவ்விடத்து நீ சிறிதுபோது விளையாடுக. எ - று

'சென்றே பகைவென்ற' என்றது வஞ்சித்திணைப்பொருள், அது மேற்சென்று பகைபொருதல்.

"வெட்சி நிரைகவர்தல் மீட்டல் கரந்தையாம்
வட்கார்மேற் செல்வது வஞ்சியாம் — உட்கா
தெதிரூன்றல் காஞ்சி யெயில்வளைத்தல் நொச்சி
யதுவளைத்த லாகு முழிஞை." — என்னும் வெண்பா மாலையானும்,

‡ "வஞ்சி தானே முல்லையது புறனே." —

‡‡ "எஞ்சா மண்ணசை வேந்தனை வேந்த
னஞ்சுதகத் தலைச்சென் றடல்குறித் தன்றே" — என்னுஞ் சூத்திரங்களானும், பகைவேந்தனை வேந்தன் மேற்சென்றுபொருவது வஞ்சித்திணை மேற்சேறலெனினும், தலைச்சேறலெனினும் ஒக்குமாதலான், 'சென்றே பகைவென்ற திண்படைவாணன்' என்றார்.

நன்று - நன்மை. ஆருயிர் - அரிய வுயிர். ஓங்கு - சுட்டுநீண்டது.

'சிறிது' என்றது காலத்தின்மே னின்றது. காலத்திற்சிறிது கணமாதலின் கணப்போது விளையாடுகவென்றவாறாயிற்று. ஆயின், இங்ஙனம் பிரியின், இவன் அன்பிலனும், தலைவியாற்றாளாம், மற்றென்னை பிரிந்தவாறெனின், பிரியாவிடின் களவு பிறாக்குப் புலனாம், புலனாகவே, இவள் பெருநாணின ளாதலால் இறந்துபடுமாதலின், பிரியவேண்டுமென்று கருதிப் பிரிந்தானென்பது. தலைமகள் பிரிவுக்கு இங்ஙன் ஆற்றுமோ வெனின், ஆற்றும். எங்ஙனமெனின், ஆற்றாமையான் இறந்துபடின் எம்பெருமானும் இறந்துபடுமென்று கருதிப் பிரிவினை ஆற்றல் வேண்டுமென்று ஆற்றினளாம். (௨௪)

## இடமணித்தென்றல்.

இடமணித்தென்றல் எ - து. தலைவனூர் சேய்த்தோ அணித்தோ என்று தலைமகள் கவலைப்பட்ட வதனைக் குறிப்பினாலறிந்த தலைவன் இடம் அணித்தென்று கூறுதல்.

---

‡ தொல். பொருள் புறத்திணையியல், ௬ ௯

‡‡ ஷை ஷை ஷை ௬ எ.

மணிபொன் சொரியுங்கை வாணன்றென் மாறை மருவினர்போல்
தணிபொன் சொரியுந் தடமுலை யாயுயர் சந்தமுந்தி
அணிபொன் சொரியு மருவியெஞ் சார லகத்ததர்தேங்
கணிபொன் சொரியுநின் சாரன்மென் காந்தளங் கையகத்தே.

இ-ள். எற்றோர்க்கு மணியும் பொன்னுஞ் சொரியப்பட்ட கையையுடைய வாணனது தென்மாறை நாட்டின்கண் உறைவார்போல, தணிவாகப் பொன்போற் பசலைநிறத்தைச்சொரியும் பெரியமுலையாய்! நீ இங்ஙனம் ஆற்றாமை கொள்ளவேண்டாம், நின்னூராக் கெம்மூர் சேய்த்தன்று, அணித்தாயிருக்கும், எங்ஙனமெனின், உயர்ந்த சந்தனத் தருக்களைத் திரையாலெறிந்து அணியணியாகப் பொன்னைச்சொரியும் அருவிபொருந்திய எஞ்சாரலகத்துத் தேனொடுகூடிய வேங்கை நின் சாரலிடத்திருக்கும் மெல்லிய காந்தட்போதாகிய கையிடத்திலே பொன்போல அலரைச் சொரியும். எ-று.

'சந்த முந்தி அணிபொன்சொரியு மருவி' என்றதனால் நீர் வருவிக்கப்பட்டது. 'மணிபொன்' என்புழி உம்மைத்தொகை. தணிதல்-நிறைதல். உந்தல்-எறிதல். 'பொன்போ லலரைச்சொரியும்' என மொழிமாற்றிக் கொள்க. ஆதலான், என்சாரலும் நின்சாரலும் அணித்தென்றவா றாயிற்று. என்சாரல் வேங்கைத் தருவால் நின்சாரற் காந்தள் பயன்பெற்றாற்போல, என்னால் நீயும் நீங்காது பயன்பெறுவையென உள்ளுறையுவமம் தோன்றிய வாறுணர்க. இவ்வாறு இடமணித்தென்று கூறித் தலைவனீங்கும். எவ்விடத்து நீங்குமோவெனின், தலைவியாற்றுவாள் கொல்லோ, ஆற்றாள்கொல் லோவென்பது அறிதுமென்று தலைவி காணாததோரணிமைக்கண் தான் மறைந்திருந்து தலைவியை நோக்கி யிருக்குமெனக்கொள்க. முன்னைய மூன்றும் 'ஐயந்தீர்த்தல்,' பின்னைய மூன்றும் 'பிரிவறிவுறுத்தல்' என்க. ()

வன்புறை - முற்றும்.

## தெளிவு.

அஃதாவது, *" தலைவன் மாற்றந் தலைவி தேற்றந்-தெளிவா மென்பர் தெளிந்திசி னோரே."— என்னுஞ் சூத்திரவிதியால் தலைவன்கூறிய சொல்லைத் தலைவி மெய்யெனத் தெளிந்தாற்றுவது.

எத்துந் தமதுரை தேறினின் றேனையிங் கேதனியே
வைத்தங் ககன்று மறைந்துறை யாவறி யோகவர
முத்துந் துகிரு மிரங்குந் தரங்க முகந்தெறிந்து
தத்துங் கரைவையை சூழ்தஞ்சை வாணன் றமிழ்வெற்பரே.

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. கச.

இ - ள். எத்திறத்துந்தரியேம் நிற்பிரியி னுமென்று கூறிய தமதுரையை மெய்யாகத் தேறுகின்றேனை இவ்விடத்துத் தனியாகவைத்து, அவ்விடத்து நம்மை மறந்து தரித்திரரா, வறியோர் கவர முத்தையும் பவளத்தையும் ஒலிக்குந் திரையாகிய கையினுன் மொண்டு வீசித் தத்துங் கரைபொருந் திய வையை சூழ்ந்த தமிழ்வெற்பர். எ - று.

வறியோர் கவர முத்துந் துகிருந் திரைக்கையாலே முகந்தெறிகின்ற அருளுடைய வையைநதி சூழ்ந்த நாட்டுவெற்பராதலான், இவரும் அருளுடையாராய் நம்மைத் தனியே இங்குவைத்து அங்ககன்று உறையாரென்பது தோன்றி நின்றது

எத்தும் - எத்திறத்தும். 'அகன்றங்கு' என்று இயையும். துகிர் - பவளம். இரங்குதல - ஒலித்தல. தரங்கம - அலை. தத்தல - தாவல். (உசு)

தெளிவு - முற்றும.

---

## பிரிவுழி மகிழ்ச்சி.

அஃதாவது, தலைவிபிரிந்து போகுழிப போகின்ற தன்மையைக்கண்டு தலைவன் மகிழ்தல்.

### செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தொடு சொல்லல்.

செல்லுங்கிழத்தி செலவுகண் டுளத்தொடுசொலலல எ - து. தலைவன் புணர்ச்சிக்களத்தினின்றும பெயாநது போகாநின்ற தலைமகளது செலவைக்கண்டு தன் நெஞ்சத்தொடு சொல்லுதல்.

---

அகிலேந்து கூநத லொருகையி லேந்தி யசைநதொருகை
துகிலேந்தி யேநதுந் துணைச்சிலம பாரப்பத் துளிகலநத
முகிலேநதீ பூம்பொழில சூழ்தஞ்சை வாணன்முந நீர்த்துறைவாய
நகிலேந்து பூங்கொடி போற்செலலு மானெஞ்ச நமதுயிரே.

இ - ள். நெஞ்சமே! நமதுயிராயதோர் வடிவு கொண்டு அகிற்புகையேந்திய கூந்தலை யொருகையி லேந்திக்கொண்டு, ஒருகையிற் றுகிலையேந்திக்கொண்டு அசைந்து, தாளிணையேந்துந் துணைசசிலமபு ஆரவாரிக்கத் துளிகலந்த முகிலையேந்திய பூவொடுகூடிய பொழில்சூழ்நத தஞ்சைவாணனது கடற்கரையிடத்து, முலையை யேந்து பூஙகொடி நடந்து செல்லல் போற் செல்லும, நீ காண்பாயாக. எ - று.

கூந்தல் முடியாமலும் துகிலுடாமலும் வந்த தென்னையெனின், புணர்ச்சிக்களத்து இருப்புழி ஆயக்கூட்டத்தார் வருவாரொன்றும், வந்தால் களவு புலனாமென்றும் கருதி, அவ்விடத்து நீங்கிக் குழல்முடிக்கவும் துகிலுடுக்கவும் நினைத்து வந்தானென்க. அகில் - ஆகுபெயர். துகில் - புடவை. துளி - தண்ணீர். நகில் - முலை. நெஞ்சம் - அண்மைவிளி. ஆல்-அசை. 'காண்பாய்' என்னுஞ்சொல் எச்சமாய் நின்று முடிந்தது. (உஎ)

## பாகனொடு சொல்லல்.

பாகனொடு சொல்லல் எ - து. தலைவன் தன்னைத் தேடிவந்த பாகனொடு தலைவி செல்வதைக்காட்டிக் கூறல்.

---

தென்பாற் றிலகமன் னான்றஞ்சை வாணன்றென் மாறைமுந்நீர்
வன்பாற் றிரண்முத்த வண்டலின் மேல்வரு மேதமஞ்சி
முன்பார்த்தென னெஞ்சம் வரும்வழி பார்த்து முறைமுறையே
பின்பார்த் தொதுங்குதல் காண்வல வாவொரு பெண்ணணங்கே.

இ - ள். வலவா! ஒரு பெண்ணணங்கு தென்றிசைக்குத் திலகம் போன்றவனாகிய தஞ்சைவாணனது தென்மாறைநாட்டுக் கடற்கரையில் வலியபாற்றிரள்போன்ற முத்தத்தினான் வண்டல்மபாவைசெய்து விளையாடும் ஆயக்கூட்டத்தார் மேலாகவருங் குற்றமஞ்சி முன்னே பார்த்து, நெஞ்சம்வருகிற வழியை முறைமுறையாய் இருபக்கமும் பார்த்து, யான் வருகின்றேனோ வென்று பின்பார்த்து நடந்தேகல் காண்பாயாக. எ - று.

'பாற்றிரண்முத்தம்' என்புழி உவமைத்தொகை. வண்டலின் மேல் வருமேதம் - ஆயக்கூட்டத்தார் தான்வருகின்ற கோலங் கண்டு ஐயுறுவரொன்னுங் குற்றம்.

வலவன் - தேர்ப்பாகன். 'பெண்ணணங்கு' என்றது பின்மொழி நிலையல். 'அணங்குபோலும்பெண்' என்று பொருள் கூறுக, இதனை முன்மொழி நிலையல் எனபாருமுளர். (உஅ)

பிரிவுழிமகிழ்ச்சி - முற்றும்

---

## பிரிவுழிக்கலங்கல்.

அஃதாவது, தலைவிபிரிந்தவிடத்தில் தலைவன் கலங்கிக் கூறல்.

* "மருளுற றுரைத்த றெருளுற றுரைத்தலென்
றிருவகைத் தாகும் பிரிவுழிக் கலங்கல்." — என்னுஞ் சூத்திர விதியால் பிரிவுழிக்கலங்கல் இரண்டுவகையாகும்.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல். சூ ௧௬.

### ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோவென்றல்.

ஆயவெள்ளம் வழிபடக் கண்டு இது மாயமோ வென்றல் எ - து. தலைவியை ஆயக்கூட்டம்வந்து வழிபடுதலைக்கண்டு, இவ்வாயத்துள்ளான் எனனைத் தனித்துக்கூடியது எனனமாயமோ வென்று மயங்கிக்கூறுதல்.

---

சீயங்கொ லோவெனத் தெவ்வென்ற வாணன்றென் மாறைவையைத்
தோயங்கொ லோவெனு நேயநம பாலவைத்துச சோலைமஞ்ஞைத்
ஆயங்கொ லோவெனு மாயத்துள் ளாளிவ் வரிவையென்ன
மாயஙகொ லோநெஞ்ச மேமணம போலிங்கு வந்துற்றதே.

இ - ள். நெஞ்சமே! தெவ்வாபோாககளத்திற் பொரும்போது இவன் சிங்கமோ வெனறு சொலலுமபடி வெறறியடைநத வாணனது தென் மாறைநாட்டில் வரும் வையையாறறினது நீரோவெனறு சொல்லப்பட்ட அனபை நமமிடத்திலேவைத்து, சோலையிடத்துலாவும மயிற்கூட்டமோ வென ஐயஙகொடுக்கும இவ்வாயககூட்டம வழிபட நடுவே விளஙகுகின் றுளாகிய இவ்வரிவை மணஞ்செய்ததுபோல இஙகுவநது கூடியது யாது மாயமோ! எ - று.

சீயம் - சிஙகம். தெவ்வு - பகை. தோயம - நீர். நேயம் - அன்பு. மஞ்ஞை - மயில. கோல் நானகும் ஐயம ஓகாரம் நான்கும அசை நிலை. அன்றி, ஓகாரம ஐயமெனின, கோல் - அசைநிலை.

இஙஙனம தலைவிகாணுததோ ரணிமைக்கண நினற தலைமகன் ஆயக் கூட்டததில தலைவிசோநதவுடன, அவா குறுஙகண்ணியும நெடுங்கோதை யும தளிருஙகொணடுவநது வழிபடுவாரும, குறறேவலசெயவாரும, பல் லாணடுகூறுவாருமாயச சூழ, தாரகை நடுவண தணமதிபோல இவள் வீற் றிருபபதைக்கண்டு கூறியவாறெனறுணாக (உ௯)

### வாயில்பெற்றுய்தல்.

வாயில்பெற்றுயதல எ-து தலைவி ஆயக்கூட்டததிற செலலுமபோது உயிாபபாஙகி முகததை நோககிச செலல அறிநது அவ்வுயிாபபாஙகியைத் தலைவன தூதாகபபெறறு உயவதாகக கூறல். வாயில் எனினும, தூது எனினும ஒக்கும். பக்கததிற் பிரியாதிருததலான பாஙகி யென்று பெயரா யிற்று

இடநதலைபபாடும, பாஙகறகூட்டமுங கூறி, மதியுடமபாடடில் அறி யும பாஙகியை ஈணடறிநததாகக கூறவேணடிய தெனனையெனின், மதி யுடமபாட டில வாயிலபெறறு இரவுவலியுறுததிக கணணியுந தழையும ஏந் திச சென்று ... பெயா முதலிய வினாவுழிப பாஙகியை யறிதற்கெனக்

கொள்க. சண்டடியாவிடின், இடக்தலைப்பாடு பாங்கற்கூட்டத்தில் அறியு மிடமின்று. ஆதலான், இவ்வாயில்பெற் றுய்தற்கும், அவ்வாயில்பெற்று இரவுவலியுறுத்தற்கும் மாட்டேற்றுப் பூடுடென்றுணர்க.

---

பெருமான் மருந்தொன்று பெற்றனம் யாநெஞ்சம் பேதுறல்பார்
மருமான் வரோதயன் வாணன்றென் மாறை மணங்கமழ்பூந்
திருமான் முகமலர்ச் சேயரி பாய்கயல் சென்றுசென்றவ்
வொருமா னைகமுக மாமல ரோடை யுலாவருமே.

இ - ள். நெஞ்சமே! பாரின்வழித தோன்றி வரத்துதித்தவனாகிய வாணனது தென்மாறைநாட்டு மணநாறும் பூவிலிருக்கப்பட்ட திருமகள் போன்ற தலைவியது முகமலரின்கணுள்ள செவ்வரிபரந்த கயல்போன்ற கண்கள் போய்ப் போய்ப் பாங்கியது ஒளிபொருந்திய முகமாகிய மலரோடையுள் உலாவிக்கொண்டு வருதலான், நமது பெரிய மாலாகியநோய்க்கு மருந்தொன்று யாம் அறியப்பெற்றனம இம்மருந்தினுன் அந்நோய்தீரும், மயங்கல்வேண்டாம். எ - று.

எனவே, தலைவிநோக்குத் தலைவறகு உயிர்ப்பாங்கியை அறிவித்தவாறு கண்டுகொள்க. 'மருநதொன்று யாம அறியப்பெற்றனம்' என இயையும். பேதுறல் - மயங்கல. நெஞ்சம் - அண்மைவிளி. மருமான்-வழிததோன்றி யோன். அவ்வழியை வளஞ்செய்தல் இயல்பாதலான் பாரை வளஞ் செய்வான் எனப்பட்டது. பூமி பாலகன் எனினும அமையும். 'மருமான்' என்னும் வினைமுற்று வினையெச்சமாய் நின்றது. திருமானும் கயலும் ஆகு பெயர். 'சென்று சென்று' என்பது அடுக்கு. அவ்வொருமான் - உயிர்ப் பாங்கி. அதிகாரம 'பிரிவுழிக்கலங்கல்' எனவைத்துக் 'கலங்கல' கூறாது 'உய் தல்' கூறியது என்னையெனின், 'மருளுற்றுரைததல்,' 'தெருளுற்றுரைத் தல்' என்றிருவகையாற் கூறப்படுமென்று இலக்கணம் சூத்திரத்துட் கூற லான், 'தெருளுற்றுரைததல' என்னும் இலக்கணததாற் கூறப்பட்டது. ()

பண்புபாராட்டல்.

பண்புபாராட்டல எ - து. தலைவியதழகைப் பரிந்துகொண்டாடல். பண்பென்று அழகிற்குப் பெயரோவெனின், அழகும் பணபும் பல்வற்றி னுள்ளும் ஓர் பண்பாதலான அழகு பண்பெனப்பட்டது.

---

மயலார் களிற்றண்ணல வாணன்றென் மாறையில் வாய்த்தவர்கண்
கயலா மெனிற்கயல் கள்ளங்கொள் ளாகருந் தாழளகம்
புயலா மெனிற்புயல் போதுகொள் ளாவிபு புனையிழையார்
இயலா மதித்தையும வேறென்ன பேரிட் டியம்புவதே.

இ - ள். நெஞ்சமே! மயக்கமார்ந்த யானைப் பெருமையையுடைய வாணனதுதென்மாறைநாட்டில் நமக்கு நல்வினைப்பயத்தான்வாய்த்த மடவாரது கண்களைக்கண்களன்று, கூபேலயாமெனச்சொல்லின், அக்கயல்கள் கள்ளப்பார்வைகொள்ளா, கரிதாய்த் தாழ்ந்த அளகத்தை அளகமன்று,புயலாமெனின், அப்புயல் அலங்காரமாகப் போதுகளைப் புனையா; இவ்விரண்டுறுப்பிற்கும் அழகின் பெருக்கத்தான் உவமைப்பொருள்களைப் பெயரிட்டுக்கூற இயையாமையான் புனையிழையாரது இலக்கணமாகிய அவ்விரண்டுறுப்பையும் உவமப்பெயர்களில் வேறாக என்னபெயரிட் டியம்புவது?

எனவே, அழகின் பெருக்கத்தான் அவ்வுறுப்புகள் தமக்குத்தாமே உவமை கூறவேண்டுவ் தல்லது வேறு பொருள்கள் ஒப்புக் கூறப்படா ...

மயல்-மயக்கம் வாய்த்தல - முயற்சியான் எய்தற் கரிதாகிய பொருள் ஓர் காலத்து ஓரிடத்து நல்வினைபயத்தான் தானேவந்து எய்துதல். அளகம் - குழல். இயல - இலக்கணம். இயம்புவது - சொல்லுவது. நெஞ்சம் முன்னிலையெச்சம். (கூ

## பயந்தோர்ப்பழிச்சல்.

பயந்தோர்ப்பழிச்சல் எ - து. தலைவியைப் பெற்றாரைத் தலைவன் வாழ்த்தல்.

---

அணியுஞ் சுடாவிரி சங்குபங் கேருக மாடகமும
மணியுந தரமனனி வாழிய ரோதஞ்சை வாணன்வெற்பில்
தணியுந தொழிலொழித இனபமுந துன்பமுந தன்பதமே
பணியும பணியெனக குப்பயந தாளைப பயந்தவரே.

இ - ள். நெஞ்சமே! ஒளிவிரியப்பட்ட சஙகநிதியும் பதுமநிதியும் பூணாரமுஞ்செம்பொனனும நவமணியுந கொடுகக மாறாத நிலைபெற்றுத் தஞ்சைவாணன்வெற்பில், மற்றதொழிலகளெலலா மினபமுந்துன்பமு மாதலின் தாழுந்தொழிலென்று அவற்றை யொழித்து, எஞ்ஞான்றும் இனபந்தருவதாய தன்னுடைய பாதத்தைப் பணியுநதொழிலை எனக்குக் கொடுத்தாளைப் பெற்ற தாயுந்தந்தையும என்னு மிவாகள் பன்னாளும வாழியா. எ-று

அணி - பூணாரம. சுடர் - ஒளி. சங்கு - சஙகநிதி. பங்கேருகம் - பதுமநிதி 'சஙகுபங்கேருகம' என்புழி உமமைத்தொகை. ஆடகம் - பொன். மணி - நவமணி. ஏகாரம - அசைநிலை. தணிதல - தாழ்தல. பணியும் பணி - வணங்குநதொழில. பயதல் - கொடுத்தல். பயந்தவர் - இருமுதுகுரவர். 'இன்பமுந துன்பமுந தணியுநதொழில்' எனவும், 'அணியுமாடகமு மணியும்' எனவும் இயையும. உம்மைகள் எண்ணின்கண வந்தன.

### கண்படைபெறாது கங்குனோதல்.

கண்படைபெறாது கங்குனோதல் எ - து. அன்றிரவில் தலைவிதந்த வேட்கையான் துயில்பெறாது கங்குற்காலத்து நொந்துகூறல்.

---

வாமக் கலையல்குல் வாணுத லாதஞ்சை வாணன்வெற்பில்
நாமக் கலவி நலங்கவர் போது நமக்களித்த
காமக் கனலவர் கையகல் காலைக் கடும்பனிகூர்
யாமக் கடலகத் தூந்தணி யாதினி யென்செய்துமே

இ - ள். நெஞ்சமே ! தஞ்சைவாணன் வெற்பில், நாம் முன் இயற்கைப் புணர்ச்சியில் இன்பங்கொள்ளும்போது, அழகுபொருந்திய மேகலை சூழ்ந்த அல்குலையும், ஒளிபொருந்திய நுதலையுமுடைய குழலார் நமக்குக்கொடுத்த வேட்கைக்கனல் உள்ளடங்கியிருந்து, அவர் பிரிந்தவிடத்து கடிய பனி மிகுந்த இரவாகிய கடலின்கண் மூழ்கியுந் தணியாது, இன்று என்செய்யக் கடவோம் ! எ - று.

வாமம் - அழகு. கலை - மேகலை. நலம் - ஆகுபெயர். கவர்தல் - கொள்ளுதல். கையகல் - பிரிதல். யாமம் - இடையிரவு. உம்மை - சிறப்பு. இனி - இன்று. நெஞ்சம் - முன்னிலையெச்சம். (௩௩)

'ஆயவெள்ளம் வழிபடக்கண்டு இது மாயமோவென்றல்' ஒன்றும் மருளுற்றுரைத்தல்', ஏனைய நான்கும் 'தெருளுற்றுரைத்தல்.'

பிரிவுழிக்கலங்கல் - முற்றும்.

---

காட்சி' முதலாகக் 'கண்படைபெறாது கங்குனோதல்'
ஈறாகக்கூறிய கிளவி முப்பத்து மூன்றும் முதனாள்
நிகழ்ந்ததெனக் கொள்க.

---

## இடந்தலைப்பாடு.

அஃதாவது, இயற்கைப்புணர்ச்சி புணர்ந்த தலைவன் மற்றைத்தினத்தில் அவ்விடத்தேவந்து தலைமகளைக் கூடுதல்.

* "தெய்வந் தெளிதல் கூடல் விடுத்தலென்
றிவ்வோர் மூவகைத் திடந்தலைப் பாடே."— எனுஞ் சூத்திர வகையால் இடந்தலைப்பாடு மூவகைப்படும்.

### தந்ததெய்வந் தருமெனச்சேறல்.

தந்ததெய்வந்தருமெனச்சேறல் எ - து. முன் இயற்கைப்புணர்ச்சியில் அவளைத்தந்தவிதி இன்னும் அவ்விடத்திற் சென்றால் தருமெனச்சேறல்.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ ௧௮.

மன்றும் பொதியினு மாமயில் சேர்தஞ்சை வாணன்வெற்பில
துன்றும் புயலிளஞ் சோலையின் வாய்ச்சுற வுக்குழையைச்
சென்றுந்து சேலவிழி மின்னை முன்னூட்டந்த தெய்வநமக்
கின்றுந் தருநெஞ்ச மேயெழு வாழியிங் கென்னுடனே.

இ - ள். மன்றினிடத்தும பொதியினிடத்தும் பெரிய மயில்சேருந் தஞ்சைவாணன் வெற்பிடதது,புயல நெருஙகிய இளஞ் சோலையினிடதது, மகரக் குழையைடபோய்த தள்ளுங கெண்டைபோலும விழியையுடைய மின்னை நெருநல தந்தவிதியானது நமக்கின்றுஞ்செனறுல் தருமாதலான், என்னுடன் ஒருப்பட் டெழுவாயாக. எ - று.

மன்று - ஊாக்கு நடுவாய் எலலாருமிருககத திணணைபோட்டிருக்கும் மரத்தடி. பொதி-அம்பலமாய எலலாருஙகூடியிருக்குஙகூட்டம.எனனை,— திருமுருகாறறுப்படையுள் ‡"மன்றமும பொதியினுங கநதுடை நிலையினும" என்பதனுற் காணக.

மாமயில் - ஊரில்வளாந்த பெரியமயில். 'புயல்துன்றும்' என இயையும் சுறவுக்குழை - மகரக்குழை உந்தல - தள்ளுதல. சேல்விழி - உவமைதொகை. மின் - ஆகுபெயா தெயவம - விதி வாழி - முன்னிலையசை. (௩௪)

**முந்துறக்காண்டல்.**

முந்துறக்காணடல எ - து. முந்துபோலக்காண்டல்.

மருவாய நாப்பண் மயிலுரு வாய்நென்னல் வாணன்றஞ்சைத்
தருவாய்த் தழைகொய்து தணபுனங் காத்துத் தடங்குடைந்து
திருவாய் மலர்ந்து சிலம்பெதிா கூயினரோர் தெய்வதபபெண
உருவா யொருதனி யேநின்ற தாலென் னுயிர்க்குயிரே.

இ - ள். நெஞ்சமே! நெருநல் பொருந்திய ஆயக்கூட்டத்து நடுவே மயிலின்வடிவாக இற்றைப்பொழுது வாணனது தஞ்சைச் சோலையிடத்துத் தழைகொய்து, மழைபெய்தலாற் குளிாநத புனஙகாத்து, வாவியில் நீராடி, திருவாயதிறநது மலையெதிாகூவி, ஒபபற்ற தெய்வப்பெண்ணுருவாய், ஒப்பற்றதனியே யென்னுயிாகுயிா நினறது, காணபாயாக. எ - று.

ஆயநாப்பண் - ஆயக்கூட்டத்து நடு. தரு - சாதியொருமை. தடம் - வாவி. சிலமபெதிர் கூவுதல் - ஓர்விளையாட்டு. ஆல் - அசை. நெஞ்சம் - முன்னிலையெச்சம. (௩௫)

‡ திருமுருகாற்றுப்படை, பழமுதிாசோலை.

## முயங்கல்.

முயங்கல் எ - து. புணர்தல்.

மானு கரன்றஞ்சை வாணன் வரோதயன் மாறையன்னாள்
தானுவி னின்றலர் தாமரை யேய்த் தடமலர்வாய்
ஆனு தொழுகுசெந் தேனல்லி மேவு மரசவன்னம்
பானு கிடைப்பது வேயன்ன பான்மை யிருவர்க்குமே.

இ - ள். மானத்துக்குப் பிறப்பிடமாய் வரத்திலுதித்த தஞ்சைவாணனது மாறைநாடுபோலவாள் வாவியினின்று மலர்ந்த தாமரை ; அவ்வாவித் தாமரையிடத்து நீங்காமலொழுகுஞ் செந்தேனையுடைய அகவிதழின்கண் மேவியிருக்கும் அரசவன்னம் யானுயினேன ; இத்தன்மை யிருவர்க்குங் கிடைக்கத்தக்கதோ ! எ - று.

எனவே, ஊழ்வினைப்பயத்தானன்றி முயற்சியாற் கிடைக்கத்தக்கதோ வென்றவாறாயிற்று. 'மானுகரன்' 'வரோதயன' இவ்விரண்டும் வடசொன் முடிபு ; வினைமுற்று வினையெச்சமாய்த் திரிந்தது தான் - சந்தவின்பப் பொருட்டு. ஆவி-வாவி. ஆனுது - நீங்காது. அல்லி-அகவிதழ். ஆ-அதிசயக் குறிப்பு. கிடைப்பது-அரிதாகிய பொருள்வாய்ப்பது. ஏகாரம்-ஈற்றசை. ()

## புகழ்தல்.

புகழ்தல் எ - து. தலைவன் தலைவியைப் புகழ்ந்துகூறல்.

அரும்பா மளவிற் றனத்தொடொவ் வாயல ராமளவில்
கரும்பா மொழிவத னத்தொடொவ் வாய்களி யானைசெம்பொன்
தரும்பாரி வாணன் றமிழ்த்தஞ்சை யான்றரி யாரின்முன்செய்
பெரும்பாவ மலலது நீரின்ற பேறல்லி பெற்றிலையே.

இ - ள். அகவிதழையுடைய தாமரையே ! நீ அரும்பாகுங்காலம் கரும்பையொத்த மொழியையுடையாளது தனத்துக்கொப்பாகாய் , அலராகுங் காலத்து முகத்தோடொப்பாகாய் ; களித்தயானையுஞ் செம்பொன்னும் காவல் கருத்தரும் பாரியென்னும் வள்ளலுக் கொப்பான தமிழ்த்தஞ்சை நகரையுடைய வாணனுக்குப் பகைவரைப்போல முன்செய்த பெரும்பாவ மலலது, நீரிலே தவப்பேறுபெற்றிலையாயினை. எ - று.

எனவே, தலைவியைப் புகழ்ந்தவாறாயிற்று. தனம் - முலை. வதனம் - முகம். ‡ பாரி - ஓர்வள்ளல். தரியார் - பகைவர். அல்லி - அன்மைவிளி ; ஆகுபெயர். (௬௭)

‡ பாரி இன்னுனென்பதனைச் சிறுபாணாற்றுப்படையுள் " கரும்புண - நறுவீ யுறைக்கு நாக நெடுவழிச் - சிறுவீ முல்லைக்குப் பெருந்தேர் நல்கிய - பிறங்குவெள் ளருவி வீழுஞ் சாரற் - பறம்பிற் கோமான் பாரியும் " என்றதனுனும், அதற்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையானு முணர்க.

# இடந்தலைப்பாடு.

## ஆயத்துய்த்தல்.

ஆயத்துய்த்தல் எ-து. ஆயக்கூட்டத்துத் தலைவியைச் செலுத்தல்.

---

மேவிக் கலைக்கட லென்புலன் மீனுண்டு மீண்டுவந்தென
ஆவிக் கமலத் தமரன்ன மேநின் னயில்விழிபோல்
வாவிக் கயலுக ளுந்தஞ்சை வாணன் வரையினுடன்
கூவிக் கயங்குடை நின்குயி லாயங் குறுகுகவே.

இ-ள். கலையாகிய கடலின்மேவி, என்னறிவாகிய மீனையுண்டுபோய் மீண்டுவந்து, என்னுயிராகிய கமலத்திற் குடியாக வமர்ந்திருக்கும் அன்னமே! நின்னுடைய கூரிய கண்போல வாவியிற் கயல்கள் புரளுந் தஞ்சைவாணன் மலையில் எதிர் கூவிக் கயத்துட்குளித்து விளையாடும் நின்னுடைய குயிற்கூட்டம்போன்ற ஆயக்கூட்டத்திற் கூடுக. எ-று.

'கலைக்கடல்மேவி' என மாறுக. புலன் - அறிவு. கலையைக் கடலாகவும், புலனை மீனாகவும், அதனை யுண்ணுந் தலைவி அன்னமாகவும், அவ்வன்னமிருக்கும் உயிர்கமலமாகவும் உருவகஞ்செய்யப்பட்டது. 'மீண்டு வந்து' என்பதனால் போய் என்றசொல் வருவிக்கப்பட்டது. இயற்கைப் புணர்ச்சி புணர்ந்து, இடந்தலைப்பாட்டில் வந்தமையால் போய் மீண்டு வந்தெனக் கூறியது.

அயில் - கூர்மை. விழி - கண். 'வாவி' என்புழி ஏழனுருபுத்தொகை. கயல் - மீன். 'கயல்போலவிழி' என்னாது, 'விழிபோற்கயல்' என்றது,

"பொருளது புணர்வே புணர்ப்போன் குறிப்பின
மருள வரூஉ மரபிற் றென்ப."— என்னும் உவமவியற்சூத்திரத்தான் இன்னதுபொருளென்றும், இன்னது உவமையென்றுங் கூறத்தக்கதில்லை. பொருளும் உவமமும் புணர்க்கும்புலவனால் எவ்வாறு செய்யப்பட்டதோ அவ்வாறியையுமென்று கொள்க. இதனை இயலுடையார் விபரீதவுவமையென்ப. உகளுதல் - பிறழ்தல். 'அலர்ந்தேன் குதிக்க வாவிக் கயலுகளும்' என்று பாடமோதுவாருமுளர். வரை - மலை. உடன்கூவுதல் - எதிர்கூவுதல். குடைதல் - குளித்தல். குயிலாயம் - உவமைத்தொகை. குறுகல் - கூடுதல்.

'தந்ததெய்வந் தருமெனச் சேறல்' ஒன்றும் தெய்வந் தெளிதற் குரித்து. 'காண்டல்,' 'முயங்கல்,' 'புகழ்தல்' மூன்றும் கூடற்குரிய. ஆயத்துய்த்தல்' ஒன்றும் விடுத்தற்குரித்து. (௧௮)

இடந்தலைப்பாடு - முற்றும்.

---

**இரண்டாநாள் இடந்தலைப்பாட்டிற் கூடினோன்றுணைக்க.**

## பாங்கற் கூட்டம்.

அஃதாவது மூன்றாநாள் பாங்கனாற் கூடுங் கூட்டம்.

* “சார்தல் கேட்டல் சாற்ற லெதிர்மறை
நேர்தல் கூடல் பாங்கிற் கூட்டலென்
றாங்கெழு வகைத்தே பாங்கற் கூட்டம்.”—என்னுஞ் சூத்திர வகையாற் பாங்கற்கூட்டம் எழுவகையினையுடைத்தென்பது.

### தலைவன் பாங்கனைச் சார்தல்.

தலைவன் பாங்கனைச்சார்தல் எ - து. தலைவன் இவ்வேட்கைநோய் பாங்கனாலன்றித் தீராதென்றெண்ணிப் பாங்கனைச்சார்தல்.

---

புனையாழி யங்கைப் புயலவளார் பாற்கடற் பூங்கொடிவாழ்
மனையா கியதஞ்சை வாணனொன் னாரென மற்றிங்ஙனே
இனையா தெழுமதி நன்னெஞ்ச மேநமக் கின்னுயிரோ
அனையா னருட்புன லாலனங் கானல மாற்றுதற்கே.

இ - ள் நல்ல நெஞ்சமே! நமக்கினிய உயிர்போன்ற உயிர்ப்பாங்கன் அருட்புனலால் காமாக்கினியை யவித்தற்கு, சக்கரத்தை யணியும் அழகிய கையினையுடைய புயல்போன்ற திருமால் கணவளரும் பாற்கடலைப் பிறந்தகமாக வுடைய பூங்கொடிபோன்ற திருமகட்கு வாழ்க்கை மனையாகிய தஞ்சைமாநகரையுடைய வாணனுக்கு ஒன்னார்போல இவ்விடத்தில் வருந்தாது, அவன் பக்கற்சேர எழுவாயாக. எ - று.

‘ஆழி புனை’ என மாறுக. புயல் - மேகம். ‘ஆழியங்கைப்புயல்’ என்பதும், ‘பாற்கடற் பூங்கொடி’ என்பதும் சிறப்புருவகம். ‘பூங்கொடி வாழ்மனை யாகிய தஞ்சை’ எனவே திருமகள் பிரியாத் தஞ்சையென்றாயிற்று. ஒன்னார் - பகைவர். மற்று - அசை. இனைதல் - வருந்துதல். மதி - முன்னிலையசை. அருட்புனல் - அருள் நீர். அனங்கானலம் - காமாக்கினி; வடசொன் முடிபு. (௩௧)

### பாங்கன் தலைவனை உற்றது வினாதல்.

பாங்கன் தலைவனையுற்றது வினாதல் எ - து. பாங்கன் தலைவனதுள்ள முந் தோளும் வாடிய வேறுபாட்டைக்கண்டு நினக்கு இவ்வேறுபாடுற்ற காரண மென்னவென்று வினாதல்.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. ௨௦.

வலம்புரி போற்கொடை வாணன்றென் மாறை மஞ்சுவளர்பூஞ்
சிலம்புறை சூர்வந்து தீண்டின போலொளி தேம்பியிவ்வா
றுலம்புனை தோளுநின் னுள்ளமும் வாடி யுருகின்று
புலம்புவ தென்னைகொல் லோசொல்ல வேண்டும் புரவலனே.

இ - ள். புரவலனே ! சங்கினைப்போற் கொடுக்குங் கொடையையுடைய வாணனது தென்மாறை நாட்டினகத் துள்ள முகில் கண்வளரும் பொலிவினையுடைய சிலம்பி லுறையுஞ் சூரொன்னும் தெய்வப்பெண் தீண்டியது போல, நின் திருமேனி ஒளிதேய்ந்து திரண்ட கலனும் புனைந்தா லொக்கும் நின்னுடைய தோளும் உள்ளமும் வாடி யுருகின்று இவ்வாறு புலம்புவதென்னோ ? சொல்லவேண்டும். எ - று.

வலம்புரி - ஆகுபெயர். மழை - முகில். வளர்தல் - கண்வளர்தல். பூ - பொலிவு. சிலம்பு - மலை. சூர் - ஓர் தெய்வப்பெண். தேம்பல் - தேய்தல். ‡ " தேம்பலஞ்சிற்றிடை யீங்கிவ ளீங்கனிவாய் " என்றார் பிறரும். உலம் - திரண்டகல். 'இவ்வாறு,' 'கொல்லோ' என்பன அசைநிலை. (௪௰)

தலைவன் உற்றதுரைத்தல்.

தலைவன் உற்றதுரைத்தல் எ - து. இவ்வாறு வினவிய பாங்கற்குத் தலைவன் தனக்குற்ற வேறுபாட்டின் காரணத்தைக் கூறல்.

---

மலைமுழு துங்கொற்றம் வைக்கின்ற வாணன்றென் மாறைநண்பா
சிலைமுழு துஞ்சுற்று முற்றுமெய் யாநிற்பச் செங்கிறத்தே
கொலைமுழு துங்கற்ற கூரிய வாளி குளிப்பவின்றென்
கலைமுழு துமபட்ட தாலொரு மானமுடிக் கண்ணியிலே.

இ - ள். எண்டிசையின் மலைமுற்றும் வெற்றிக்கொடியை வைக்கின்ற வாணன் தென்மாறை நாட்டிலிருக்கின்ற பாங்கனே ! புருவமாகிய சிலை முழுதும் சுற்றிய திசைமுற்றும் எய்யாநிற்ப, கொலைத்தொழின் முற்றுங் கற்ற கண்ணாகிய கூரியவாளிகள் எனது செவ்விதாகிய நெஞ்சிடத்திலே மூழ்க, அப்போது என்னெஞ்சி லிருக்கின்ற கலையறிவு முற்றும் ஒரு பெண் வைத்த தலைக்கண்ணியிற்பட்டது. எ - று.

'மலைமுழுதுங் கொற்றம்.' எனவே எண்டிசைக்கும் அவ்வாங்கிலையான் வந்தது. கொற்றம் - ஆகுபெயர். சிலை - ஆகுபெயர். உலகிற் சிலை நடுநிலையி லெய்யும் ; இச்சிலை அவ்வாறன்றிச் சிலைமுற்று மெய்யா நின்றதென்று கருவிகருத்தாவாகக் கூறியது, விற்றோன்றுந் திசையிலன்றித் திசையெட்டினும் எய்கின்றமையான். சுற்றிய திசைமுற்றும் என்றது, எண்திசையினும் இருந்தவரினூந் தைப்பது நெஞ்சிடத்தேயெனக்கொள்க.

‡ திருக்கோவையார், செ. கக.

செங்கிறம் - மார்பு. கொலை முற்றும் - கொலைத்தொழின் முற்றும். வாளி - ஆகுபெயர். குளிப்ப - சூழ்க. கலை - ஆகுபெயர். ஒரு மானுக்கு முடிபோட்ட கண்ணியிலே கலையெல்லாம் பட்டதென ஒருபொருள் தோன்றியவாறு காண்க. ஆல்-அசை. கண்ணி - விலங்குகள் புட்கள்முதற் படுத்துங் கருவிக்கும், மாதர் குழலிற்சூடுங் குறுங்கோதைக்கும் பொதுவாக லான், இவ்விரண்டுவகைப் பொருளுந் தோன்ற நின்றது. (சக)

### கற்றறிபாங்கன் கழறல்.

கற்றறிபாங்கன் கழறல் எ - து. வேதாகம புராணம் யாவுங்கற்றறிந்த பார்ப்பனப் பாங்கன் இடித்துக்கூறல். இடித்துக்கூறல் - உறுதிச்சொல் லுரைத்தல்.

---

தருகற் பகமன்ன சந்திர வாணன் றடஞ்சிலம்பில்
முருகக் கடவு ளனையவெற் பாமுகி லும்பிறையுஞ்
செருகக் கிளர்வரை வந்தவோர் பேதைக்குன் சிந்தையெல்லாம்
உருகக் கலங்கினை நீதகு மோமற் றுனக்கிதுவே.

இ - ள். இரவலர் யார்வந்து கேட்பினும் கேட்பவை யெல்லாங் கொடுக்குங் கற்பகத் தருவையொத்த சந்திரற்கு மகனாகிய வாணனது சிலம்பிலிருக்கும் முருகக்கடவுளை யொக்கும் வெற்பனே! நீமுகிலும் பிறையுஞ் செருகும்படி யெழுந்த வரையிடத்தில் வந்த ஓர் பெண்ணுக்கு நின் சிந்தையெல்லாம் உருகக் கலங்கினை, உனக்கிது தகாது. எ - று.

சந்திரன் - வாணனுக்குத் தந்தை. தடஞ்சிலம்பு - பெரியமலை. செருகல்-செருகுதல். ‡"துவரமுடித்த துகளறுமுச்சிப் பெருந்தண் சண்பகஞ் செரீஇக் கருந்தகட்-டுளைப்பூ மருதின்." எனத் திருமுருகாற்றுப்படையுள் செரீஇ என்பதற்குச் செருகி யென உரைகூறியவாறு கண்டுகொள்க. கிளர்தல் - எழுதல். வரை - மலை. ஓகாரம் - எதிர்மறை. மற்று - அசை. 'இது தகுமோ' என இயையும். (சஉ)

### கிழவோன் கழற்றெதிர்மறுத்தல்.

கிழவோன் கழற்றெதிர் மறுத்தல் எ - து. பாங்கன்கூறிய கட்டுரை யைத் தலைவன் மறுத்துக்கூறல்.

---

மாலாய் மதம்பொழி மாதங்க வாணன்றென் மாறையன்னார்
சேலார் கருங்கணு நுஞ் செங்கனி வாயுஞ் சிறியநுண்ணோ
லாலார் மருங்கும பெருந்தன பாரமு நும்மையன்றி
மேலா னவருங்கண் டாலுரை யாரிந்த வீரங்களே.

---

‡ திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம்.

இ - ள். மயக்கமாய் மதத்தைப்பொழியும் வாரணத்தையுடைய வாணனது தென்மாறைநாடு போல்வாராது சேல்போன்ற கருங்கண்ணும் செங்கனிபோன்ற வாயும், சிறுமையாகிய நுண்ணிய வழகாகிய நூல்போன்ற இடையும், பெரிய தனபாரமும், கண்டார் நெஞ்சினையுருக்குந் தன்மையில் வலியவென்பதினை யெளியவாகக் கூறினீர் ; நும்மையன்றி மேலானவருங் கண்டறிலாயார்கள் இத்தன்மையாகிய வீரமொழிகள். எ - று.

எனவே, நீருங் காணாததன்மையால் இவ்வாறு கூறினீரென்று கூறியவாறாயிற்று. மால் - மயக்கம். வாரணம் - யானை. சேல் - கயல். 'செங்கனிவாய்' என்புழி உவமைத்தொகை. ஏர் - அழகு. 'மேலானவரும்' என்புழி உம்மை சிறப்பும்மை, ஏனைய எண்ணினகண் வந்தன. நூல் என்பது ஒப்பு. பாங்கன் - முன்னிலையெச்சம். (௬௧)

## கிழவோற் பழித்தல்.

கிழவோற்பழித்தல் எ - து. அவ்வாறு கூறிய தலைவனைப் பாங்கன் பழித்துக் கூறல்.

---

சூரார் சிலம்பிற் சிலம்பிமென் னூல்கொண்டு சுற்றவெற்றிப்
போரார் களிறு புலம்பினைந் தாங்கொரு பூவைகொங்கை
வாரா லிணைப்ப வருந்தினை நீதஞ்சை வாணன்வெற்பா
ஓராழி சூழுல கத்தெவ ரேநின்னை யொப்பவரே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பிலிருப்பவனே ! சூர்பொருந்திய மலையினிடத்துச் சிலம்பியானது மெல்லிய நூலைக்கொண்டு சுற்ற, மாற்றார் படையிலே வெற்றிப்போர் செய்கின்ற யானையானது புலம்பினைந்தாற் போலும், ஒரு பெண்ணினது வார்பொருந்திய கொங்கையாலிணைப்ப நீ வருந்தினை ; ஆதலால், ஒப்பற்ற ஆழிசூழ்ந்த வுலகத்தில் நின்னை யொப்பாவார்யார் ? எ - று.

சூர் - தெய்வப்பெண்களிலோர்சாதி. சிலம்பு - மலை. சிலம்பி - சிலந்தி. களிறு - யானை. ஆங்கு-உவமையுருபு. பூவை - பெண். 'வார்க்கொங்கை.' என மாறுக. ஆழி - கடல். 'சிலம்பி மென்னூல கொண்டு சுற்றவெற்றிப் போராகளிறு புலம்பினைந் தாங்கு'-அந்நூற்றளையை நீங்கிவருதற்கரிதாய்ச் சங்கிலித்தளைக்கு நில்லாது அதன் வலியிழந்து புலம்பி னைந்தாற்போல. கடல்போல் வருகின்ற நால்வகைப் படையும் வென்று மனத்திற் கலங்காத வீரம் ஒரு பெண்வேட்கையாற் கலங்கி வருந்தினை, நின்னை யொப்பார்யார்? — எனக்குறிப்பினாற் பழிப்புத்தோன்றியவாறுணர்க. (௬௨)

### கிழவோன் வேட்கை தாங்கற் கருமைசாற்றல்.

கிழவோன் வேட்கைதாங்கற் கருமைசாற்றல் எ - து. தலைவன் நீ பழிக்கின்ற என்னுள்ளந் தேறுதற்கு வேட்கை என்னால் தாங்கமுடியாதென்று கூறுதல்.

---

பொறைகொண்ட தாமரைப் போதன்ன கொங்கையும் பொங்கரிசேர், கறைகொண்ட வாளன்ன கண்களுங் கொண்டொரு கன்னிதெவ்வைத், திறைகொண்ட வாணன் செழுந்தஞ்சை சூழுஞ் சிலம்பிலின்றென், நிறைகொண்ட வாறறி யாதிக ழாநிற்றி நீயு நின்றே.

இ - ள் பாரங்கொண்ட தாமரை முகையன்ன கொங்கையும், மிகுந்த வரிபொருந்திய மாற்றாரைப் பொருது அவருடற்குருதிக் கறைகொண்ட வாளையொத்த கண்களுங்கொண்டு ஒரு கன்னியானவள், பகையைத் திறைகொண்ட வாணனது செழுமையாகிய தஞ்சை மாநகரைச்சூழுஞ் சிலம்பிடத்து, இன்று என்னுடைய நிறையைக் கவர்ந்தவாறறியாது, நீயும் என்முன்னின்று இகழாநின்றாய், யானென்செய்வேன்! எ - று.

பொறை - பாரம். போது - முகை.

‡ "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்." — என்பதனு னுணர்க.

பொங்குதல் - மிகுதல் அரி - செவ்வரி. கறை - இரத்தம். தெவ்வு - பகை. திறை-வெற்றி நிறை-அறிவு. நிறையோர்ப்புக்கடைப்பிடியென்னும் மேன்மக்கள் குணங்களுள் ஓர்குணம்.

அஃதாவது, மனத்தின்கண் பிறரறியாமை யடக்கத்தக்க காரியத்தை யடக்குதல். நிறை யெனப்படுவது மறை, பிறரறியாமை யென்றார் பிறரும். நீயும் என்னும் உம்மை - சிறப்பும்மை. பாங்கன் - முன்னிலை யெச்சம். (௬௫)

### பாங்கன்தன்மனத்தழுங்கல்.

பாங்கன் தன்மனத்தழுங்கல் எ - து. அதுகேட்ட பாங்கன் எம்பெருமான் ஆற்றானாய் இவ்வாறு கூறினால் யான் அதற்குத்தான் என்சொல்வே னென்று தன்னுள்ளே யிரங்குதல்.

---

சீதள வாரங் கமழ்தஞ்சை வாணன்றென் மாறையன்னாள்
காதள வாவெங் கடுவள வாவொளி ர் காவியந்தண்
போதள வாவிழி யெனனுமென னாசைப புறத்தளவா
சூதள வாமுலை யெனனுமென் னுமினிச் சொலலுவதே.

---

‡ திருக்குறள், செ. ௧௨௨௭.

இ - ள். எம்பெருமான் ! குளிர்ச்சிபொருந்திய சந்தனங் கமழப்பட்ட தஞ்சைவாணன் தென்மாறை நாடுபோல்வாளது கண்களைக் காதினும் அளவிட்டறியப்படா, வெவ்விய விடத்தினும் அளவிட்டறியப்படா, விளங்கப்பட்ட அழகிய குளிர்ந்த நீலப்போதினும் அளவிட்டறியப்படா, என்று சொல்லும்; முலையை மலைபோல் வளர்ந்த என்னுசையிடத்தும் அளவிட் டறியப்படா, வல்லினும் அளவிட் டறியப்படா, என்று சொல்லும் ஆதலால, நெஞ்சமே ! நாம இன்று சொல்லுவதென் ? எ - று.

ஆரம் - மைந்தரும் மாதரும் மார்பினும் முலையினும பூசுஞ் சந்தனம். கடு - விடம். காவி - நீலம். 'அந்தண காவி' என மாறுக. புறம் - இடம். சூது - வல். இனி - இன்று. அளத்தல் - அறிதல். அளவா - அறியப்படா.

காதைக் கடந்துபோதலான் 'காதளவா' என்றும், கடு உண்டாரைக் கொல்லும் அவ்வாறன்றிக் கண்டாரைக் கொலலுதலான 'கடு வளவா' என்றும, காவிப பூவிறகுப் பார்த்தறியுங குணமின்மையின் 'காவியந்தண போதளவா' என்றுங் கூறியது.

‡ "காணிற் குவளை கவிழ்ந்து நிலனோக்கு
மாணிழை கண்ணொவ்வே மென்று."— என்னுங் குறளினுங்

காவிக்குக் கண்டறியுங குணமின்மை யுணாக.

ஆசையினும முலைபெரிதாகலான் 'ஆசைப்புறத்தளவா' என்றும, வட்டங்கொண்டு குவிந்து வணணம பொதிந்திருததலான் 'சூதளவா' என்றுங கூறியது. 'என்னும்' என்ப திரண்டும இறுதிவிளக்கு நெஞ்சம்-முன்னிலை யெச்சம. (சக)

பாங்கன் தலைவனோடழுங்கல்.

(இது வெளிப்படை.)

---

என்மே லறைவதி யானிங்கு நின்செவிக் கெனசொலெல்லாம்
வன்மே லடாகொங்கை காரண மாய்த்தஞ்சை வாணனவெற்பா
கன்மே லறைகின்ற மென்முளை போலுங் கடல்வெதுப்பில
தன்மேல விளாவவுண் டோதனை மேலொரு தண்புனலே.

இ - ள். தஞ்சைவாணன் வெறபனே ! பேரின்பத்திற்குரிய நீ இச்சிற் றின்பத்திற்கு இத்தன்மையனாதல் தகாதென்று, சூதினமேறபகை நெருங குங கொஙகையினை யுடையாள் காரணமாக, இங்குக்கூறும என்சொல லெல்லாம நின் காதுக்குக் கல்லினமே லறைகின்ற மெலலியமூங்கிலின் முளை போலு மாயின, யான மேற்சொலலுமா றியாது ? கடல வெப்பமுறின்

‡ திருக்குறள், சே. கககச.



+ திறை ப சரு

அவ்வெப்பம் ஆற அக்கடன்மேல் விளாவுதற்குப் பாரிடத்து ஒரு தண்ணீருண்டோ ? எ - று.

அறைதல் - சொல்லுதல். 'யானென் மேலறைவது' என மாறுக. வல் - சூது. அடாதல் - நெருங்குதல். கோங்கை - ஆகுபெயர். அறைதல் - அடித்தல். முளை - மூங்கில். வெதும்பல் - வெப்பமுறல். அள் - அடிச்சந்த நோக்கிவந்தது. தரை - பார். புனல் - நீர். (௪௭)

## எவ்விடத்தெவ்வியற்றென்றல்.

எவ்விடத்தெவ்வியற்றென்றல் எ - து. எம்பெருமான் இவ்வாறுகூறியும் ஆற்றானாய் இன்னந் தலைவியைக் கூடாதொழியின் இறந்துபடுமென்றுதேறி, தலைவனை நோக்கி நின்னாற்காணப்பட்ட உரு எவ்விடத்து எவ்வியல்புடையதென்று வினவுதல்.

முகத்திற் பகழி யிரண்டுடை யாக்கிட மூரிமுந்நீர்
அகத்திற் பிறந்த வரவிந்த மோவடை யார்தமக்கு
மகத்திற் சனியன்ன சந்திர வாணன்றென் மாறைவெற்போ
நுகத்திற் பகலனை யாய்தன்மை யேது நுவலெனக்கே

இ - ள். நின்னாற் காணப்பட்ட முகத்தில் அம்புபோன்ற கண்ணிரண்டுடையார்க்கு இருப்பிடம், பெருமை பொருந்திய கடலகத்திற் பிறந்த தாமரையோ ? பகைவர் தமக்கு மகநாளில்வந்த சனியையொக்கும் சந்திரவாணன் தென்மாறை வெற்போ ? உழும் ஏர்ப்பெயலிற் பிணித்த நுகத்தின் நடுப்போன்ற தலைவனே ! அவர்க் கிலக்கணம் யாது ? அறிய எனக்குச் சொல்வாயாக. எ - று.

**பகழி** - ஆகுபெயர். மூரி - பெருமை. முந்நீர் - கடல். அரவிந்தம் - தாமரை. அடையார் - பகைவர்

மகத்திற் சனிவருங்கால் உலகிற் றீமைபயத்தலால் 'அடையார்தமக்கு மகத்திற் சனியன்ன, சந்திரவாணன்' எனக்கூறியது, ‡"மகத்திற்புக்கதோர் சனியெனக்கானாய" என்று **சுந்தரமூர்த்தி சுவாமிகள்** ஓதியவாறுணர்க. 'நுகத்திற் பகலனையாய்' என்றது நடுவன்றி யோர்பக்கஞ்சாயின் அவ்விடத்திற் பாரமுறைக்கும், நடுவாகின் சமனாயிருக்குமாதலான், இவனும் நடுவு நிலைமையை யுடையவனென்று கூறப்பட்டது.

தன்மை - இலக்கணம். நுவலல் - சொல்லுதல். ஓகாரம் இரண்டும் வினா. (௪௮)

---

‡ திருவொற்றியூர்த் தேவாரம், செ கூ. [illegible]

### அவனஃ திவ்விடத் திவ்வியற்றென்றல்.

அவனஃ திவ்விடத் திவ்வியற்றென்றல் எ - து. தலைவன் என்னாற் காணப்பட்டவுரு இவ்விடத்து இவ்வியல்லையுடையதென்று பாங்கற்குக்கூறல்.

கனமே குழலசெங் கயலே விழிமொழி காக்குயிலே
தனமே முகையெனத் தனிநெஞ்ச மேயிடை தன்பகைக்கு
முனமே யருளிய வாணன்றென் மாறை மணிவரைசூழ்
புனமே யிடமிங்ங னேயெனை வாட்டிய பூங்கொடிக்கே

இ - ள். இவ்வாறு என்னைவாட்டிய பூங்கொடிபோல்வாட் கிருப்பிடம், தன் பகைவர்க்குக் காட்டை யிடமாகக் கொடுத்த வாணனது தென்மாறை நாட்டு முத்தத்தையீனும் மூங்கில்சூழ்ந்த தினைப்புனமே, குழல், முகிலே; விழி,செவ்வரி பொருந்திய கயலே, மொழி,கருங்குயிலே, தனம்,முகையே; இடை, எனதனிமையாகிய நெஞ்சமே. எ - று.

கனம் - முகில். கயல் - மீன் தனம் - முலை. முகை - மொக்குள். மணி-முத்தம். வரை - மூங்கில். புனம் - தினைப்புனம் இங்ஙனம் - இவ்வாறு. **பூங்கொடி** - ஆகுபெயர்.

'காக்குயிலேமொழி' எனவும், 'முகையேதனம்' எனவும் மாறுக. 'இங்ஙனே' என்புழி ஏகாரமும், 'பூங்கொடிக்கே' என்புழி ஏகாரமும் ஈற்றசை, ஏனையதேற்றம்.

'தனிநெஞ்சம்' என்றது வேட்கைப் பாரத்தைச் சுமந்து நைந்த தனால், நெஞ்சம் முலைப்பாரத்தைச் சுமந்து நைந்த இடைக்கு உவமமா யிற்று. வரைகணக்களை யுடைமையின் ஆகுபெயரான மூங்கிற்குப் பெய ராயிற்று. வரைமலையாகாதோவெனின், ஆகாது. என்னை, மேற்கூறும் பாங் கன் இறைவனைத் தேற்றுஞ் செய்யுட்கண் 'கழைவளர் சாரல்' என்றமை யான இவ்விடத்து மூங்கிலென்றே பொருள்கூறவேண்டுவதாயிற்று ‡"மால் வரை நிவந்த சேணுயர்வெற்பின்." எனக் கூறியதனானுணர்க. (௫௧)

### பாங்கன் இறைவனைத்தேற்றல்

பாங்கன் இறைவனைத் தேற்றல் எ - து. இவ்வாறு நீ வருந்தாதொழிக நீசொன்ன குறியிடத்துச் சென்று தலைவியைக்கண்டு யான் வருகின்றே னென்று தேற்றுதல்.

மழைவளர் மாளிகை மாறைவ ரோதயன் வாணன்வெற்பின்
இழைவளர் வார்முலை யேரிளந் தோகையை யிக்கணம்போய்க்
கழைவளர் சாரலிற் கண்டுநின் யான்வந்து காண்பளவுந்
தழைவளர் தாரண்ண லேதணி வாயினி நகவினமைபே.

‡ திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம்

இ - ள். மலரோடுந் தழைகலந்து நீண்ட மாலையையுடைய இறைவனே! முகில் துஞ்சும் மாளிகை நெருங்கிய மாறைநாட்டு வீரோதயனாகிய வாணனது வெற்பில், அணிக்கியலுங் கச்சுப் பொருந்திய முலையழகுடைய இளந்தோகை போல்வாளை நீகூறிய குறியிடமாகிய மூங்கில் வேலியாய் வளர்ந்த புனத்தில் இக்கணம் போய்க்கண்டு உனை யான்வந்து காணுமளவும் வருத்தமொழிவாய். எ - று.

மழை - முகில். இழை - ஆபரணம். வார் - கச்சு. ஏர்-அழகு. தோகை- ஆகுபெயர். சாரல் - ஆகுபெயர்.

என்னை,—தலைவன் குறிகூறியது 'புனமேயிடம்' என்றதனு லென்றுணர்க. இங்ஙனம் மூங்கில் வேலிபுனமென்று அதிகாரப்படக் கூறியவா றென்னை யெனின், இக்கிளவிக் கடுத்த கிளவி "குறிவயிற்சேறல்" என்றலின், தலைவி யிருக்குமிடமுங் குறியென்றலின், அக்குறியிற் குறியிடமெல்லா மொன்றாய் வருதல் விதியாதலான் 'மூங்கிற்புனம' என்றதிகாரப் பட்டவாறுணர்க. அன்றியும் வரைவுகடாவுதலில் இரவு வருவானைப் 'பகல் வருகென்றல்' என்னுங் கிளவிச செய்யுளில் 'கழைவிளையாடுங் கடிபுனங் காத்தும்' என்று பாங்கி கூறியவதனுனும், இச்செய்யுளில் புனங் கூறுமிடமெல்லாம் மூங்கி லடையாளமன்றி வேறோரடையாளங் கூறுவதின் றென வுணர்க.

தார் - மாலை. மலராற் கட்டுதல் மாலையாகலான் மலர்கூறாது, தழை யிடை யிடையே கட்டுதலின் தழை கூறினர். அண்ணல் - இறைவன. தணிதல் - ஒழிதல் தகவின்மை-வருத்தம. முன்வள ரிரண்டுங் கண்வளர்தல். பின்வளரிரண்டும் நீடல். 'கழைவளர் சாரலிக்கணமபோய்' என மாறுக. 'மீண்டு' என்பது அவாய் நிலையான் வந்தது. (௩௦)

## குறிவயிற் சேறல்.

குறிவயிற்சேறல் எ - து. தலைவன் கூறிய குறியிடத்துத் தலைவியைக் காணப் பாங்கன்போதல்.

---

பாரித்த திண்மையெம மண்ணலுண் ணீரைப் பருகின்று
பூரித்த செவ்விள நீர்களுந் தாங்கியப பூங்கொடிதான்
வாரிதத வ்மபுகழ் வாணனறென் மாறை வரைப்புனஞ்சூழ்
வேரித்த டமபொழில் வாய்விளை யாடுங்கொன் மேவிநின்றே.

இ - ள். தலைவன் கூறிய அப்பூங்கொடிதான் கடல்சூழ்ந்த நிலவுலகம புகழும் வாணனது தென்மாறைநாட்டு மூங்கிலவேலியை யுடைய தினைப்புனஞ் சூழ்நத மணமபொருந்திய பெரிய சோலையிடத்துப் பொருந்தி நின்று, வீரமில்லா தாரக்கும வீரதனைப் பிறப்பிதத எம அண்ணலது

உள்ளத்துள்ள கலையறிவாகிய நீரைப்பருகி, நிலைகொண்டு விம்மிய செவ்விள நீர்போன்ற முலைகளையுந் தாங்கி, விளையாடுமோவென எண்ணிக்கொண்டு சென்றான். எ - று.

பாரித்தல் - பிறப்பித்தல். திண்மை - வீரம். உண்ணீர் - உள்ளத்துள்ள கலையறிவு. பூரித்தல - விம்முதல். உம்மை - அசை. வாரி - கடல். தலம் - நிலவுலகம். வரை - மூங்கில். வேரி - மணம். தடம்பொழில் - பெரியசோலை. கொல் - ஐயம. நெஞ்சம் - முன்னிலையெச்சம. 'வரைப்புனம்' என்பது வரைகட்புனமென அமையாதோ வெனின, இவவிடத்து இவ்வியறறென் னுஞ் செய்யளில 'மணிவரை சூழ்புனம' எனவும, பாஙகன் இறைவனைத் தேற்றுஞ் செய்யுளில் 'கழைவளாசாரல்' எனவும், இச் செய்யுளில் 'வரைப்புனம்' எனவும மூங்கிலே யதிகாரப்பட்டு வருதலின் மலையாகா தென்க. (௫௧)

இறவிவையக்காண்டல்.

(இது வெளிப்படை.)

---

கானே யளகங் கருமபுய லேயியல கார்மயிலே
மானே விழிமுக மாமதி யேதஞ்சை வாணன்வெற்பில்
தேனேய் தொடையலச் சேயனே யானசொனன சேயிழையாள்
தானே யிவளிது வேயிட மாகிய தணபுனமே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பிடத்திருக்கும் முருககடவு ளனைய வண்டுபொருந்திய மாலையை யுடைய எமமிறைவன் சொன்ன இடமாகிய தண்புனம் இதுவே, இபலாகியபுயலே, மணமபொருந்திய அளகபாரமாயிருக் கினறது, கார்காலதது மயிலே, இயலா யிருககின்றது, மானே, விழியாயிருக கின்றது, நிறைமதியே, முகமா யிருக்கினறது; ஆதலால், அச் சேயிழை யாள்தானிவளே. எ - று.

கான் - மணம. ஏய்தல - பொருந்துதல். இயல் - சாயல். கார் - கார் காலம. விழி - கண். மாமதி - நிறைமதி. தேன் - வணடு. தொடையல் - மாலை. சேய் - முருகக்கடவுள்.

கரும்புயலே கானேயளகம எனவும், 'கார்மயிலே யியல்' எனவும், 'மதியே முகம்' எனவும, 'தஞ்சைவாணன வெறபிறசேய' எனவும மாறுக ஈற்றசை ஏகாரமொனறு மொழிதது ஏனைய ஏகாரமெல்லாந தேற் றததின்கண் வநதன. நெஞ்சம் - முனனிலை யெசசம. 'அசசேயனே யான் சொனன' எனபது இடைநிலை விளக்கு. (௫௨)

## இகழ்ந்ததற் கிரங்கல்.

இகழ்ந்ததற் கிரங்கல் எ - து. தலைவி பேரழகைக்கண்டு பாங்கன் காணா முன்னம் எம்பெருமானை அறிவின்றி இகழ்ந்தனமென்று இரங்கிக்கூறல்.

---

கொலைகா லயிற்படை நேரியர் கோனகங் கோடவங்கைச்
சிலைகால் வளைத்துத் திருத்திய வாணன்றென் மாறைவெற்பில்
முலைகால் கொள்க்கண் டிளைத்தநுண் ணூலிடை முற்றிழைகண்
வலைகால் பிணிப்பவந் தாவருந் தாரல்லா மாலுழந்தே.

இ - ள். கொல்லுந் தொழிலை உமிழுகின்ற வேற்படையையுடைய சோழனது உள்ளம் மாறுபட அழகிய கைச்சிலையைக் காலால்வளைத்து, அம் மாறுபாட்டைத் திருத்திய வாணனது தென்மாறை வெற்பிடத்து, முலை யிடங்கொள்ளக் கண்டதனால் இளைத்த நுண்ணிய நூல்போன்ற இடையை யும், அணியும் அணியினிற் றாழ்வின்றி முற்றுப்பெற்ற அணியையு முடையா ளது கண்ணாகிய வலை காலிற் பிணிப்ப வந்தவா ஆசைநோயை அநுபவித்து வருந்தாரல்லா. எ - று.

எனவே,— வருந்துவா ரென்றவா றாயிற்று. **கொலை** - ஆகுபெயர். காலுதல் - உமிழ்தல். அயிற்படை - வேற்படை. நேரியர்கோன் - சோழன். அகம் - உள்ளம். கோடல் - மாறுபடல். அம் - அழகு. 'கால்வளைத்து' என் புழி வேற்றுமைத்தொகை. திருத்தல் - செவ்விதாக்கல். கால்கொளல் - இடங்கொளல். **முற்றிழை** - அன்மொழித்தொகை. பிணித்தல் - கட்டல். உழத்தல் - அனுபவித்தல்.

† "கடலன்ன காம முழந்து மடலேறாப்
பெண்ணிற் பெருந்தக்க தில்." — என்னுங் குறளானு முணர்க.

**நெஞ்சம்** - முன்னிலையெச்சம். (௬௫)

## தலைவனை வியத்தல்.

தலைவனை வியத்தல் எ-து, பாங்கன் தலைவி கண்வலையிற் சிக்கி அத்தடையோடுந் தலைவன் நடமிட்டது வந்தது வியப்பென்று அதிசயித்துக் கூறல்.

---

தலங்கா வலன்றஞ்சை வாணன்முந் நீர்பொருந் தண்பொருந்தத்
திலங்கா வலவடக் கொங்கைவெற் பாலிணை நீலவுண்கண்
பொலங்காம வல்லி கடைந்தவப் போதுபுடைபெயர்ந்து
கலங்கா திருந்ததெவ் வாறெம்பி ரான்றன் கலைக்கடலே.

---

† திருக்குறள், செ. ௧௧௩௭.

இ-ள். இரண்டு நீலம்போன்ற உண் கண்ணையுடைய பொன்மய மாகிய காமவல்லிக் கொடிபோன்றவள், உலகிற்குக் காவலனாகிய தஞ்சை வாணனது கடலை யெதிருந் தண்ணிய பொருநையாற்றினகண பிறந்தொளிரும முத்துக்கலைக்கோத்த வலிய வடம்பூண்ட கொங்கையாகிய வெற்பினாலே கடைந்த அப்போது, அசைநது எமபிரான்றன கலைக்கடலானது கலஙகாதிருநத தெவ்வாறு. எ - று.

எனவே,— எனககிது வியப்பாயிருநததென்றவா றாயிற்று. தலம் - உலகு. பாதலநீா, பூதலநீா, மீதலநீா, இமமூனறு நீருங கூடியதால் கடல்- ‡ முந்நீர் எனப பெயராயிறறு. பொருதல் - எதிாதல.

பொருநதம் - பொருநையாறு; பொருந் என்னும தொழிற்பெயா அஃறிணை யாதலின் ஐகாரவீறுபெறறது. ஆரம - முதது. பொருநையாறுங் கடலும எதிாநது கலநதவிடததுப் பிறததலான் பொருநையிற் பிறநத முததென்றா. பொலம - பொன்.

‡‡ "பொன்னெனகிளவி யீறுகெட முறையின
முன்னாத தோன்றும லகார மகாரம
செயயுண மருஙகிற றொடரிய லான"— என்பதனாலறிக

காமவல்லி - கறபகததிற படருங கொடி, ஆகுபெயா. கடைதல ஈணடு அறிவைச சுழலசசெயதல. புடைபெயாதல - அசைதல. கலைக கடல — கலவியறிவாகிய கடல (ருச)

## தலைவியைவியத்தல்.

தலைவியைவியததல் எ - து தலைவியைப பாஙகன் வியநது கூறல.

---

வெஙகோன மழைபொழி வானவா போாவெனற மீனவாதம
செஙகோன முறைமை செலுத்திய வாணனறென மாறைவெறபில
நஙகோன மெலிய நலிகினற காமவெந நஞசினையிப
பைஙகோன மணிவளை யாாதணி யாரலலா பாாவைகொணடே.

இ - ள். வெவ்விய அமபுமாரியைப பொழிகினற சேராது போாை வெனற மீனவருடைய நீதிமுறைமையை எணடிககுஞ் செலுததிய வாணனது தெனமாறை வெறபிடததிருககினற நம பெருமான் மெலிவடைய் வருததஞ் செயயாநினற காமமாகிய வெவவியவிடததை இநதப் பசிய கோலுடைய நலல வளையையுடையாா தமது அருட்பாாவைகொணடு தணிபபாா. எ - று.

---

‡ "நிலததைப படைததலும காததலும அழிததலுமாகிய மூனறு தொழிலு முடைமையின" இவவாறு கூறபபடடதெனபா.— நச்சினார்க்கினியர்.

‡‡ தொல. எழு. புளளிமயஙகியல, ௬ ௬௩.

வெங்கோல் - அம்பு. வானவர் - சேரர். மீனவர் - பாண்டியர். இறைமைத்தன்மை யுடையராதலால் உயர்த்துக் கூறியது. செங்கோல் - செவ்வியநீதி. நலிதல் - வருத்தல். கோல் - வளையிற்புள்ளி. கோலம் என்பது இடைக்குறையாய்க் கோல் என நின்றதெனபாருமுளர். நெஞ்சம் - முன்னிலையெச்சம்.

இச் செய்யுளில வியததற்பொருண்மை வந்தது எங்ஙனமெனின், எம்பெருமான் இறந்துபடாமற காதது இன்றுங குறியிடத்துத் தனித்து வந்து நிற்றலின், இவர் பார்வைகொண்டு தணிப்பாரெனக் கூறியது வியப்பின்மேனின்றது. (௫௫)

**இவ் வைந்துபாட்டும் பாங்கன் தன்னுட் கூறியது.**

---

**தலைவன்றனக்குத் தலைவி நிலைகூறல்.**

தலைவன் றனக்குத் தலைவிநிலை கூறல் எ - து. பாஙகன தலைவி குறியிடத்துத தனிதது நிற்கின்ற நிலையைக் கண்டுவநது தலைவற்குக் கூறல்.

---

வளங்கனி மாறை வரோதயன் வாணன் மலயவெற்பா
உளங்கனி காத லுடனின்ற தாளின் னுடலமெலலாம்
களங்கனி போலக் கருகிவெண கோட்டுக் களிறுணடதோர
விளஙகனி போலவறி தாகிறை வாஙகிய மெனகொடியே.

இ - ள். வளமைபழுதத மாறைநாட்டு வரோதயனாகிய வாணனது மலயவெற்பனே! நின்னுடலமெலலாங களம்பழமபோலக் கருக, வெண்ணிறக் கோட்டையுடைய யானை யுண்டதோர விளஙகனிபோல இல்லாமையுடையதாகி நினறு, நிறையாகிய குணததைககொணட மெல்லிய கொடியானது,நீசொனன குறியிடதது உளஙகனிநதகாதலுடன் நின்றதாதலால், நீ அக்குறியிடத்துச செலவாயாக எ - று.

கனிதல - பழுததல. கருக எனபது கருகி யெனத திரிந்து நின்றது. என்னை, —

‡ "செயிரத்தவள் சிவநது நோக்கிச சிறடி சென்னி சேரத்தி
யயிரப்பதென் பணிசெய் வேனுக் கருளிற்றுப் பொருள தென்ன
வுயிர்ப்பது மோமபியொனறு முறையாலே யாகி மற்றிப
பயிர்ப்பில்லும் பள்ளிவைகு பகட்டெழின மாரப வென்றாள்." —

என்னுஞ் சிநதாமணிச செய்யுளில நோக்கி என்பது நோக்க எனத் திரிந்து நின்றதுபோலக் கொளக 'மின்கொடியே' என்று பாடமோதுவாருமுளர் வறிதாய் - இல்லாமையை யுடையதாக செறிபின்

---

‡ சிந்தாமணி, விமலையாரிலம்பகம், செ. ௯௦௯

என்று பாடமோதி, இறைவா என்னும் முன்னிலை யெச்சமென்று பொருள் கூறுவாருமுளர். (௩௬)

**தலைவன்சேறல்.**

தலைவன் சேறல் எ - து. பாங்கன் சொற்படி தலைவன் குறியிடத்துப் போதல்.

---

புறங்கூ ரிருட்கங்குல் போன்றக நண்பகல் போன்றபொங்கர்
நிறங்கூர் படைக்கண்ணி நின்றன ளேநிழ லைச்சுளித்து
மறங்கூர் களிற்றண்ணல் வாணன்றென் மாறையில வாணுதலாள்
அறங்கூர் மனத்தரு ளானின்ற தாமென தாருயிரே

இ - ள். தன்னிழலைப் பிறிதோர யானையெனக் கருதித் திரும்பிக் கோபமிகுங் களிற்றையுடைய அண்ணலாகிய வாணன் தென்மாறை நாட்டுப் புறத்தில், மிகுந்த இருண்ட கங்குலையொத்து அகத்தின் மாணிக் கங்களி னொளியான் நல்ல பகல்போன்ற சோலையிடத்து, வாணுதலாளா கிய வொளிமிகுந்த படைக்கண்ணி நின்றனளே! அங்நின்ற தோற்றம் முறைமைகூர்ந்த மனத்தருளினாலே என தாருயிர்நின்றதாம். எ - று.

கூர்தல் நான்கும் மிகுதல் தழைகளினது செறிவால் புறங்கூர் இருட் கங்குல் போன்றது. பொங்கர் - சோலை. நிறம் - ஒளி. படைக்கண்ணி - உவமைத்தொகை. சுளித்தல் - திரும்பல். மறம் - கோபம். களிறு - யானை. அறம - முறைமை. நெஞ்சம் - முன்னிலையெச்சம. (௩௭)

**தலைவியைக் காண்டல்.**

(இது வெளிப்படை.)

---

பாகையுந் தேனையும் போன்மொழி யார்தமிழ்ப் பைந்தொடையும்
வாகையுஞ் சூடிய வாணனறென் மாறை வளமுமவன்
ஈகையும போலு மெழிலியை நோக்கி யிரங்குபுள்ளுந்
தோகையுமபோனின்ற வாதனி யேயிந்தச் சோலையிலே.

இ - ள். இந்தச் சோலையிடத்துத் தனியே என்வரவை நோக்கிப் பாகையுந் தேனையும்போன்ற மொழியார் நின்ற முறைமை, தமிழ்மாலையும் வாகைமாலையுஞ் சூடிய வாணனது தென்மாறைநாட்டு வளமும் அவன் கொடையுமொக்கும், மேகத்தைநோக்கி யிரங்குஞ் சாதகப்புள்ளையும மயிலையு மொக்கும். எ - று.

'மொழியார் நின்றவா' என மாறுக. தமிழ்ப்பைந்தொடை - தமிழ் மாலை. வாகை - ஆகுபெயர். வளம் - செழுமை; வளம் எல்லாருக்கு

முபகரித்தலால். வளமும், ஈகையும் எல்லாருக்கு முபகரித்தலான் மேகம் ஒப்பாயிறறு. ஈகை - கொடை. எழிலி - மேகம். நோக்கி - வரவுகருதி. இரஙகல - ஒலித்தல. புள் - சாதகப்புள். தோகை - மயில. நெஞ்சம் - முன்னிலையெச்சம் வாகை மாலை - வென்றோா சூடுவது. 'பாகையுந் தேனை யும போன்மொழியாா' என்றவாறு 'இரஙகு புளளுந தோகையும' ஒப் பென்று பயனிலைகொணடவா றுணாக. (ருஅ)

**கலவியின் மகிழ்தல்.**

*கலவியின மகிழ்தல எ - து. புணாசசியின மகிழதல்.*

யாருமபா தமபத மென்போல வெய்தின ரிமபரமபொன
வாருந துறைவையை சூழ்தஞ்சை வாணன மலயவெறபில
தேருந தொறுமினி தாநதமிழ் போனறிவள் செங்கனிவாய்
ஆருந் தொறுமினி தாயமிழ் தாமென தாருயிாககே.

இ - ள். அழகிய பொன்னையொக்குந் துறைகளையுடைய வையை யாறு சூழந்த தஞசைவாணனது பொதியவெறபில, ஆராயுநதோறு மாராயுந தோறுந தெவிட்டாத இன்பமாந தமிழையொததவளது செஙகனி வாயி னூறிய நீா நுகருநதோறும தெவிட்டாமல இனபமாய, என தாருயி ரிறந்து படாமைக்குக் காரணமாகிய வமிழதாகினற தாதலால, இவ்வுலகில உமபா தம் பததநதை எனபோல வெயதினா யாா? யானொழிய ஒருவரு மில்லை. எ - று.

உமபா - தேவா இமபா - இவவுலகு. வாாதல - ஒழுகுதல. தோ்தல் - ஆராயதல செங்கனிவாய் - ஆகுபெயா. ஆாதல - நுகாதல. ஆருயிா - அரிய வுயிா. மலய வெறபு - பொதியவெறபு. 'மலய வெற்பிற றமிழ' எனறது அவவெற்பில நமிழபிறததலா னெனக. இறபைத தீாத தலால் அமிழ்தம் என்றது 'வாணன மலயவெற்பு' என்புழி ஆற னுருபு நிலபிறிதினகிழமைப பொருளாயத் தொக்கது. நெஞ்சம் - முன னிலை யெச்சம. (ருக)

**புகழ்தல்**

*புகழ்தல் எ - து. புகழநது கூறல்.*

---

தழலகணட தனன கலிவெமமை யாறறதன றணணளியால
நிழலகணட சநதிர வாணனறென மாறை நிழலபொலியுங்
கழலகணட தனன கதிரமுதத மாலிகைக காரிகைநின
குழலகண்ட பினனலல வோவற னீருட் குளிததததுவே

இ - ள். தழலைக்கணடதுபோன்ற கலியினது வெப்பந தணியத் தன தருளாகிய நிழலாக்கிககணட சநதிரவாணனது தெனமாறை நாட்டிற

றோன்றும் ஒளிமிகுந்த கழற்காய்போல, பரிதாகிய கதிரொறிக்கும் முத்து மாலிகையையுடைய காரிகை! நினது கூந்தலைக் கண்டபின்னல்லவோ முன் வெளிப்பட்டிருந்த அறலானது நாணி இப்போது நீருட்குளித்திருக்கின்றது. எ - று.

தழல் - நெருப்பு. கலி - கலியுகம். வெம்மை - வெப்பம். அளி - அருள். நிழல் - ஒளி. பொலிதல் - மிகுதல். புகழ் - ஆகுபெயர். கதிர் - ஒளி. காரிகை - அணங்கிவிளி. குழல் - கூந்தல். அறல் - கருமணல். குளித்தல் - மூழ்கல். 'நின் குழல்' என்புழி ஆறாம்வேற்றுமை யுருப்புத் தொக்கிழமைக்கண் வந்தது. 'அல்லவோ' என்புழி ஓகாரம் எதிர்மறை.

### பாங்கியோடுவருகெனப்பகர்தல்.

பாங்கியொடு வருகெனப் பகர்தல் எ - து இனி நீவருங்கால் நின் உயிர்ப்பாங்கியொடு வருகவெனக் கூறல்.

---

என்காதலிற்றென றியம்புகின் றேனிங் கினிவருங்கால
நின்காதலியொடு நீவரல் வேண்டு நிலமடந்தை
தன்காதலன்றஞ்சை வாணன்றென் மாறைத்தண் டாமரைவாழ்
பொன்காதல் கொண்டு தொழுஞ்சிலம் பாரடிப் பூங்குயிலே.

இ - ள். நிலமடந்தை தனக்குக் கணவனாகிய தஞ்சைவாணனது தென்மாறைநாட்டிலிருக்கும் தண்ணிய தாமரையில் வாழுந் திருமகள் ஆசைகொண்டு பணியுஞ் சிலம்பார்ந்த வடிகளையுடைய பூங்கொடிபோல்வாய்! எனது காதல் மிகுதியால் ஒருசொல் சொல்லுகின்றேன், இக் குறியிடத்து இனிமேல் வருங்கால் நின்னிடத்திற் காதலுடையவளாகிய உயிர்ப்பாங்கியொடு நீ வருதலைச் செய்யவேண்டும். எ - று.

காதல் - ஆசை. இயம்பல் - சொல்லல். காதலி - உயிர்ப்பாங்கி. காதலன் - கணவன். பொன் - திருமகள். காதல் - ஆசை. பூங்கொடி - ஆகுபெயர். 'நிலமடந்தைதன் காதலன்' என்றது பூவைநிலை யென்னும் புறப்பொருளிலக்கணத்தால் வாணனை மாயோனுக்குக் கூறியவா றுணர்க. என்னை,—

‡ "மாயோன் மேய வன்பெருஞ் சிறப்பிற்
றாவா விழுப்புகழ்ப் பூவை நிலையும்" — எனனும் வேட்சிக்கரந்தையிற் கூறிய சூத்திரத்தா னுணர்க. (௯௧)

---

‡ தொல். பொருள். புறத்திணையியல், சூ. ௫.

### பாங்கிற்கூட்டல்.

பாங்கிற்கூட்டல் எ - து. தலைவன் தலைவியை ஆயத்துச் செறுத்தல்.

என்னூடு நின்ற விளங்கொடி யேபங்க யேந்துசூழாந்
தன்னூடு செல்லுஞ் சலஞ்சலம் போற்றஞ்சை வாணன்வெற்பில்
பொன்னூடு செல்லும் புகழ்மணி போனின் புடையகலா
மின்னூடு நுண்ணிடை யாருட னீசென்று மேவுகவே.

இ - ள். என்னுள்ளே நிலையாய்நிற்கின்ற இளங்கொடிபோல்வாய்! சங்கக்கூட்டத்துள்ளே பொருந்திச்செல்லாநிற்குஞ் சலஞ்சலமென்னுஞ் சங்குபோலவும், தஞ்சைவாணனது பெரியவெற்பிடத்துப் பொன்னுள்ளே செல்லும் மாணிக்கம்போலவும், நின்பக்கம் அகலாத மின்பிணங்கும் நுண்ணிய இடையாராகிய ஆயக்கூட்டத்துடன் நீபோய்ப் பொருந்துக. எ - று.

இளங்கொடி - ஆகுபெயர். 'சூழாந் தன்னூடேந்து' எனமாறுக. இப்பியாயிரஞ் சூழ்ந்தது இடம்புரி; இடம்புரியாயிரஞ் சூழ்ந்தது வலம்புரி; வலம்புரி யாயிரஞ்சூழ்ந்தது சலஞ்சலம். புகழ்மணி-மாணிக்கம். சலஞ்சலம் சங்குகளிற் சிறத்தலானும், மாணிக்கம் மணிகளிற் சிறத்தலானும் உவமை கூறியதென் றுணர்க. புடை - பக்கம். ஊடல்-பிணக்கல். மேவுதல் - பொருந்தல்.

இக்கிளவியில் மாலைசூட்டித் தலைவியை விடுத்தானென்ப தாயின், இச்செய்யுளில் முல்லைமாலைசூட்டி விடுத்தானென்ப தில்லையாலெனின், தலைவி ஆயக்கூட்டத்திற் சார்ந்தவுடன் தலைவியைநோக்கி நினக்கு முல்லை மாலை சுனைப்புனல்சூட்டியவாறு நன்றாலென று பாங்கி கூறியவதனான் இங் ஙனங் கூறப்பட்டது. வரைவியலில் தலைவனைப் பாங்கிவாழ்த்தற் செய்யுளில் † 'சங்கநிரக்காட்டு நீயன்றுசூட்டலரோ' என்றதனானுமறிக.

இவற்றுள் முன்னைய மூன்றும் சார்தல், கேடடல், சாற்றலென்னும் மூன்றற்குரிய; 'பாஙகன்கழறல்' முதல் 'கிழவோன்வேட்கை தாங்கற்கருமைசாற்றல்' ஈறாகக்கூறிய நான்கும எதிமறைக்குரிய; 'பாங்கன்தன்மனத்தழுங்கல்' முதல் 'தலைவன் தனக்குத்தலைவி நிலைகூறல்' ஈறாகக்கூறிய பதினொன்றும் நேர்தற்குரிய, 'தலைவன்சேறல' முதல் 'புகழ்தல்' ஈறாகக் கூறியநான்குங் கூடற்குரிய; தலைவன் தலைவியைப் பாங்கியொடுவருகெனப் பகாதலும், தலைவன் தலைவியைப் பாஙகிற்கூட்டலு மாகிய இரண்டும் பாங் கிற்கூட்டற்குரிய வெனக்கொள்க. (௩௨)

பாங்கற்கூட்டம் - முற்றும்.

---

† வரைவியல், சே. உ௮௫.

அஃதாவது, தலைவி வேறுபாட்டைக்கண்டு புணர்ச்சியுண்மை யறிந்தாராய்ந்து தன்மதியை யுடன்படுத்தல்.

" முன்னுறவுணர்தல் குறையுறவுணர்த
லிருவரு முளவழி யவன்வர வுணர்தலென்
றாங்குமூ வகைத்தே பாங்கிமதி யுடன்பாடு" — என்னுஞ் சூத்திரவிதியால் பாங்கிமதியுடன்பாடு மூவகைப்படும். அவற்றுள், —

முன்னுறவுணர்தலாவது - தலைவி பாங்கற்கூட்டத்தின்கண்பாங்கியை நீங்கிச்சென்று தலைவனைப்புணர்ந்து மீண்டுவந்து பாங்கிமுன்னுற்றவழி, பாங்கி தலைவியது வேறுபாடுகண்டு அதனானே கூட்டமுண்மையறிதல்.

குறையுற வுணர்தலாவது - பாங்கி தலைவன் தழையுங் கண்ணியுங் கொண்டு தனபாற் குறையுற்று நிற்பக்கண்டு அதனானே கூட்டமுண்மை யறிதல்.

இருவரு முளவழி யவன்வர வுணர்த லாவது - தலைவியும் தானும் ஒருங்கிருந்துழி, தலைவன் அவ்வாறுவரககணடு அதனானே கூட்டமுண்மை யறிதல்.

** " நாற்றமுந் தோற்றமு மொழுக்கமு முண்டியுஞ்
செய்வினை மறைபபுஞ் செலவும பயிலவுமென்
றிவ்வகை யேழினு மையுமுற் றோர்தலும." — எ - து

நாற்றமாவது - தான் பண்டு பயின்றறியாததோர் நாற்றம். தோற்றமாவது - கூடடத்தாற்பிறந்த தோரழகு. ஒழுக்கமாவது - தெய்வந்தொழாமை முதலியன. உண்டியாவது - ஊண்பணடையிற் சுருஙகுதல். செய்வினை மறைததலாவது-தான்செயயும் வினையைப் பாஙகிக்குமறைத்தல். செலவாவது - ஆயத்தைநீஙகித் தனியேசேறல. பயிலவாவது - எப்பொழுதும் ஓரிடததே நிற்றல. இவவேழினுனும பாங்கி தலைவியை ஐயமுற் றாராய்தல். இவ்வேழினுள இசசெயயுள தோற்றததாலாராயகின்றது.—

முன்னுறவுணர்தல்.

**தோற்றத்தாலாராய்தல்.**

(இது வெளிப்படை)

வண்டலை யாயத் துடனயாந தோவன்றி வண்டிமிர்பூந
தண்டலை யாரத் தழைகள்கொய தோதஞ்சை வாணன்வெற்பில்
புணடலை வேலினுங் கணசிவப் பாரப் பொலஞ்சுனைத்தேன்
கொண்டலை நீகுடைந தோவிவண மேனி குழைநததுவே.

---

* அகப்பொருள்விளககம, களவியல், சூ. ௨௨
** ஷை ஷை சூ. ௨௩.

இ - ள். இவள்மேனி குழைவுபட்டது, ஆயக்கூட்டத்துடன் வண்டலம் பாவையை வருந்திச் செய்தோ! அன்றி வண்டு ஆரவாரிக்கும் பூஞ் சோலையிடத்துச் சந்தனத்தழைகள் கொய்தோ! அன்றித் தஞ்சைவாணனது வெற்பிடத்துப் புண்செய்யும் தலையையுடைய வேலினும் கணசிவப் புப்பொருந்தப் பொன்விளையப்பட்ட சுனையினிடத்து மலைத்தேன்வந்து கூடக் கொண்டலையலையப்பட்ட நீருட்குளித்தோ! யாதோ! அறிகின்றிலேன். எ - று.

வண்டல் - வண்டலம்பாவை. அயர்தல் - செய்தல். அன்றி - வினையெச்சக்குறிப்பு. இமிர்தல் - ஆரவாரித்தல. தண்டலை-சோலை. ஆரத்தழை-சந்தனத்தழை. பொலம் - பொன். குடைதல - குளித்தல். குழைதல - இளகுதல். ஓகாரங்களனைத்தும் ஐயத்தின்கண் வந்தன. நெஞ்சம்-முன்னிலையெச்சம். அவ்வகையதனு லையாந்தீர்தல - அவ்வேழு வகையினுலும புணர்ச்சியுண்டென்று கருதித் தலைவியிடத்தையந்தீர்தல. (சுரு)

ஒழுக்கந்தாலையந்தீர்தல்.

(இது வெளிப்படை)

திளைக்கு நீராமே லுனக்குமுன் றோன்றலிற் செம்பொன்வெற்பை, வளைக்கும பிரான்முடி வைகுத லாற்றஞ்சை வாணனமண் மேல, விளைக்கும புகழ்போல விளங்குத லாற்செக்கர் விண்பிறைக்கா, தளைக்குங் குழற்றிரு வேதொழ வேதகுந் தன்மையதே.

இ - ள். காரைத்தனனிடத்து நின்று நீங்காமற் றளைசெய்யுங்குழலையுடைய திருவே! நீரமபுங்கடலினிடத்து நினக்குமுன்னே தோன்றலானும், செம்பொன் மலையை விலலாகவளைக்கும சிவனது திருமுடியிடத் திருத்தலானும், தஞ்சைவாணன புவியின்மேல விளையச்செய்யும் புகழ் போல நாடகுநாள் மிககாய விளங்குதலானும், செவ்வானத்திடைத் தோன்றிய பிறை திங்களோடுந் தொழுதலபோல் இன்றுந்தொழத்தகுந் தன்மைய தாதலான், நீதொழுவாயாக எ - று.

திளைத்தல் - நிறைதல. நீர் - ஆகுபெயர். செம்பொன்வெற்பு - மேருமலை. பிரான் - சிவன். முடி - சடைமுடி. வைகுதல-தங்குதல். செக்கர்விண் - செவ்வானம். கார் - கருநிறம், மேகமெனினும அமையும. தளைத்தல் - தளைசெய்தல்.

திரு இவ்வுருக்கொண்டுவந்து பிறந்தாளென்னும கருத்தால் திருவே யென்றுகூறியது. இவள் கற்புக்கடன் பூண்டவளாதலான்,

‡ "தெய்வந் தொழாஅள் கொழுநற் றொழுதெழுவாள்
பெய்யெனப் பெய்யு மழை." — என்னும விதியினன் தொழாளாயினளாகவே ஒழுக்கத்தினு லையந்தீர்ந்தவா றுயிற்று. (சுச)

‡ திருக்குறள், வ. ருரு.

இப்பால் பாங்கி தலைவியைநோக்கிக் கண்சிவந்தும் இதழ்வெளுத்தும் நுதற்குறுவெயர் வருமுயிரும் இருத்தலால், இவ்வேறுபாடு நினக்கெற்றினு லாயதென்று வினவுதலும், தலைவி சுனையாடிப்போந்தே னென்பதனால் வந்ததென்று விடுத்தலும் இசசெய்யுளில கவிகூறிற்றிலா, யாதினு லெனின், அகப்பொருட் சூத்திரத்தில் இவவிரணடிற்குங் கிளவிகூறிற்றில ராதலானென்க. அவா கிளவி கூறாததற்குக் காரணம் என்னையெனின், சுருககநுலாதலிற கூறிறறிலா. விரிநூலிற்கூறிய துண்டோ வெனின்; கூறியதுண்டு. என்னை,— தொல்காப்பியத்தில் ‡ ‘ நாற்றமுந் தோற்றமும்’ என்னுஞ சூததிரததில நச்சினார்க்கினியருரையில தலைவி வேறுபாடு பாஙகி வினயதறகுச செயயுள்—

> “ தொயயில் வனமுலையுந தோளுங கவினெய்தித்
> தெய்வங கமழுமா லைமபாலு — மையுறுவல்
> பொனனங கொடிமருஙகுற பூஙகயற கணணினுய்க்
> கெனனை யிதுவநத வாறு.”

இதற்குவிடை.—நினனை நீஙகி மேதகக சுனைகண்டு நெடுங்கால மாடி னேன, அதனுனயிறறெனனும.—

### அதற்குப் பாங்கி மெய்யினுற் பல வேறு கவர்பொருள் சொல்லிநாடலின்
### சுனைநயப் புரைத்தல்.

சுனைநயபபுரைததல எ - து மெயயாயின அதுகூறி யககூறும்பொரு ளிற் பலவேறு கவாபொருளசொலலி ஆராயதலின சுனை நன்மையைக் கூறல.

---

பூட்டிய வாாசிலை வீரரை வெனறெப பொருபபினுஞசீா
தீட்டிய வாணனறென மாறையன் னீரிதழச செமமையுமை
ஊட்டிய வாளின கருமையுந தானகொண டுமககிஙஙனே
சூட்டிய வாறுநன றுனமுலலை மாலை சுனைபபுனலே

இ - ள். நாண பூட்டிய வில்வீரரை வெற்றிகொணடு குலைமலைக் ளெட்டினுங கீாததியைபபொறிதத வாணனது தெனமாறை நாட்டை யொபபீா! நுமது இதழினசெமமையும மையூட்டியவாள்போன்றகண்ணின் கருமையுந் தாவென வாஙகிககொணடு உமககிவ்வாறு கைம்மாறாகச் சுனைப் புனலானது முலலைமாலையைசசூட்டியவாறு நன்று. எ - று.

‘வாாபூட்டிய’ எனமாறுக, வாா - நாண. பொருபபு - குலமலை சீா - கீாததி. தீட்டல் - எழுதல. ஊட்டல - உடகொளளவைததல. வாள் - பெயா. ஆல் - அசை.

---

‡ தொல. பொருள. களவியல, சூ. உரு.

தலைவன் பாங்கற்கூட்டத்தில் தலைவியைப் பாங்கிற் கூட்டும்போது இன்காதலியோடு நீ வருகவெனக்கூறிக் கற்புடையவ ளென்றெண்ணி, கற்புடையமகளிர் முல்லைமாலை சூடுவது இயல்பாதலான், முல்லைமாலை சூட்டி விடுத்ததனால், தலைவியுந் தலைவன்சொல்லைக் கடவாளாதலால், தன் கற்புடைமை தன்னுயிர்ப்பாங்கி யறியவேண்டுமென்று கருதி, தலைவன் சூட்டிய முல்லைமாலையை மறையாது வந்தாளாதலால் அதுகண்டு கூறினு ளென்றுணர்க.

தலைவன் சூட்டினன் என்பதென்னை யெனின்,

§ "ஆணெடுந் தானையை யாற்றுக் குடிவென்ற கோன்பொதியில்
சேணெடுங் குன்றத் தருவிநின் சேவடி தோய்ந்ததில்லை
வாணெடுங் கண்ணுஞ் சிவப்பசெவ் வாயும் விளர்ப்ப வண்டார்
தாணெடும் போதவை சூட்டவற் றோவத் தடஞ்சுனையே." — என்

னும் இறையனார் அகப்பொருளில் ‡'முனனுறவுணர்தல்' என்னுஞ்சூத்திர வுரையில் இக்கிளவிக்குப் 'போதவை சூட்டவற்றோ வததடஞ்சுனை' என்றமையான் தலைவன்போது சூட்டினனென்றுணாக.

முல்லைமாலை சூட்டிவந்ததைக்கண்டு வினவினளென்று தலைவிக்குத் தோன்றவும், இதழ் வெண்மைக்கும், கண் செம்மைக்கும் முல்லைமாலை யுவமையாகப் பாங்கி கருதிக்கவாபடுபொருளாய்ச சொலலலின்,மெய்யினாற் பல கவர்படுபொருள்சொல்லி நாடலாயிற்று. நாடல் - ஆராயதல. இதழ் வெளுத்தல் அதரபானத்தாலும், கணசிவநதல் இறுகத்தழுவுதலானுந் தோன்றியதென் றுணர்க. (௬௫)

### சுனைவியந்துரைத்தல்.

சுனைவியந்துரைத்தல் எ - து. அச்சுனை வியப்பை யானுமாடிக் காண்பேனென்று கூறல்.

---

மறலா யெதிர்ந்த மறமன்னர் வேழ மலையெறிவேல
திறலார் முருகன் செழுநதஞ்சை வாணனறென் மாறைவையை
அறலார் குழலாய் நுதற்குறு வேரவு மழகுநினபோற்
பெறலா யெனிறகுடை வேனடி யேனும பெருஞ்சுனையே

இ - ள். மதமயக்கமா யெதிர்ந்த வீரமனனரது யானையாகிய மலையை யெறியும் வேலால் முன்மலையை யெறிநத வெற்றியாாந்த முருகனையொக்குஞ் செழுந்தஞ்சைவாணனது தென்மாறைநாட்டிலவரும் வையையாற்றி லிருக்கும் அறல்போன்ற குழலையுடையாய்! நுதற்குறுவேர்வும் அழகும்

‡ இறையனார் அகப்பொருள், சூ. எ.

நின்னைப்போற் பெறலாமெனின், அடியேனும் பெருஞ்சுனையை யாடிக் காண்பேன். எ - று.

மறல் - மயக்கம். மறமன்னர் - வீரமன்னர். திறல் - வெற்றி. அறல் - கருமணல். குடைதல் - நீராடுதல். 'பெறலாமெனில்' என்பது பெறுதற் கருமைதோன்ற நின்றது. தான் குற்றேவல்செய்யு முறைமையால் 'அடியேன்' எனக் கூறினானென் றுணர்க. (௬௬)

## பொய்யினாற் பலவேறு கவர்பொருள் சொல்லி நாட்டலின்

## தகையணங்குறுத்தல்

தகையணங்குறுத்தல் எ - து. தலைவி யொற்றுமைக்கிழமையால் அவளைத் தெய்வப்பெண்ணாக வலியுறுத்திக் கூறல்.

---

குவளை சிவந்துங் குமுதம் வெளுத்துங் குறையல்லவேல்
அவளை மறைத்தனைக் காட்டலு மாமலர்த் தேன்குடிக்கத்
தவளை குதிக்குந் தடம்பொய்கை சூழ்தஞ்சை வாணன்வெற்பில்
இவளை வரக்கண்டு நீயணங் கேபின்னை யெழுந்தருளே.

இ - ள். குவளையொக்குங் கண்சிவந்து, குமுதமொக்கும் வாய்வெளுத்த குறைபாடல்லவாயின், எங்கள் தலைவி யொருத்தியைக் கண்டு, அவள் வடிவில் நினையொப்பவள், அவளை மறையவைத்து நினையவளென்று காட்டலாமென்று எல்லாருஞ்சொல்லுவர், அலரினின்றுந் தேன்குடிக்கப் புதுநீர் வந்ததென்று தவளைகுதிக்கும் பெரியபொய்கை சூழ்ந்த தஞ்சைவாணன் வெற்பிலிருக்கு மலையணங்கே! எங்கள் தலைவி வருமளவும் இருந்து அவளையொப்புக்கண்டு பின்னை நீயெழுந்தருள்வாய் எ - று.

‡ "கிளந்த வல்ல வேறுபிற தோன்றினுங்
கிளந்தவற் றியலா னுணர்ந்தனர் கொளலே." — என்னும் மயங்கியற் சூத்திரத்தில் அன்னம்போல்வாளை அன்னம் என்றும், யானை போல்வானை யானை யென்றுங் கூறினமையான், இவ்விடத்துங் குவளை போன்ற கண்ணைக் குவளை யென்றும், குமுதம்போன்ற வாயைக் குமுதம் என்றும் ஆகுபெயராகக் கூறியவாறுணர்க.

'அலர்த்தேன்' என்புழி ஐந்தனுருபு தொக்கது. தடம்பொய்கை - பெரியபொய்கை. அணங்கு - தெய்வப்பெண்.

மனத்தில் தலைவிதானென்றறிந்ததனைத் தன் வாயினால் அணங்காகக் கூறினமையின், பொய்யினாற் பலவேறு கவர்பொருள்சொல்லி நா

---

‡ தொல். சொல். வேற்றுமைமயங்கியல், சூ. ௩௪.

லாயிற்று. 'கவர்பொருள்' என்னாது 'பலவேறு கவர்பொருள்' என்றதென்னையெனின், ஒன்றல்லவெல்லாம் பலவாதல் தமிழ்நடையாதலி னென்றுணர்க. இவையிரண்டும் நாணநாட்டம். (சுஎ)

### நடுங்கநாட்டம்.

நடுங்கநாட்டம் எ-து. தலைவியை நடுங்கத்தக்கதாக நாடுதல.

பால்போன் மொழிவஞ்சி யஞ்சிநின் றேனிந்தப் பார்முழுதும
மால்போற் புரந்தவன் மாறை வரோதயன் வாணன்வென்றி
வேல்போற் சிவந்து நெறிமுறை கோடிய வேந்தன்வெய்ய
கோல்போற் கொடியன வாங்கொலை யானையின் கோடுகணே

இ-ள் பாலபோலும் மொழியையுடைய வஞ்சிக்கொம்புபோல்வாய்! இந்தப் பாருலகமுழுவதையுந் திருமாலபோ லிடையூறு நீக்கிக்காத்த மாறை நாட்டில வரோதயனை வாணனது வென்றிவேல்போற் குருதியளைந்து சிவந்து நெறிமுறைமைவழுவிய வேந்தனதுகொடுங்கோல்போல யார்க்கும் அச்சங்கொடுக்குங் கொடுமையவாகிய கொலைநதொழில செய்யும் யானையது கோட்டைக்கணடு அஞ்சிநின்றேன. எ-று.

வஞ்சி - ஆகுபெயர். மால - விணடு. புரத்தல் - காத்தல, கோடிய - வழுவிய கோடு - கொம்பு.

"நாணவு நடுஙகவு நாடடோழி
காணுங காலைத தலைமக டேதது." — என்பதனால நாண நாட்டமும நடுஙக நாட்டமுங்கூறியது அகப்பொருட்சிதைவாய்ப்பெருந்திணைப் பாறபடும. அன்றியும பாஙகி இவவாறு கூறவே, தலைவி குறிப்பறியாது கூறினளுமாம. அவமதிததாளுமாம, ஆசார மிலலாது கூறினளுமாம; மற்று இக்குற்றமெல்லாம நீஙகுமாறும, அகப்பொருட் சிதைவு வாராமற் போற்றுமாறும. என்னையெனின், நாணநாட்டத தின்கண தலைவிக்குயிர்ப் பாஙகி யாதலின, இவளுள்ளமே யவளுள்ள மாதலின், புணர்ச்சியுண்மை யுணடென்ப தறிந்து கூறுகின்றாளென்பது தலைவியறியும. அறிந்ததலைவி பாஙகியுடன் கூறாத தென்னையெனின், இவள்பெருநாணின ளாதலான் கூறலாகாதென் றிருந்தாள. தன்னுடன் உண்மைகூறவிலலை, தானுண் மைக்கயலாயினேன், அவ்வாறு அயலாகாது உடம்பட்டிருக்கத் தலைவி யாகத் தன்னோடு கூறவேண்டுமென்பது கருதி, பாஙகி யாராய்ச்சிசெய்த காரியமாதலான், நாணநாட்டத்தாற் குற்றமின்மையறிக.

இனி நடுஙக நாட்டம யானைக்கண்டஞ்சினே னென்றவழி தலைவி நடுஙகாம லிருந்தவழி யென்னையெனின,

## பூங்கொடியுடன்பாடு.

"மெய்யினும் பொய்யினும் வழிநிலை பிழையாது
பல்வேறு கவர்பொருணாட்டத் தானும்" — என்னும் சூத்திரத்தில் 'வழிநிலைபிழையாது' என்பதற்கு **நச்சினார்க்கினியர்** உரையிற் பாங்கி குற்றேவல் முறைமை தப்பாது, பெருநாணினள், பேரச்சத்தாள், தலைவியென்பதறிந்து, தானும் இறந்துபடாமற் கூறத்தகும் வார்த்தை கூறுமென்றுரைகூறினாராதலானென்பது. நடுங்கநாடிக் கூறும்போதும் பாங்கி, எம்பெருமாட்டி கவற்சியுறும்,கவற்சியுற்றபோதே யிறந்துபடினும் படுமென்பதறிந்து, முகமலர்ச்சியாய்,நகையாடுதல் போன்றுங் கூறுமாதலால், தலைவி இவள்முகக்குறிப்பு நோக்கியும், கவற்சியில்லாமை நோக்கியும் பொய்யென்றறிந்திருந்தாளென்க. அன்றியும சான்றோர் செய்யுட்களிற் பெரும்பாலும் பயின்றுவருதலானும குற்றமின்றென உணர்க. குற்றமாயின் சான்றோர் செய்யுட்களோதாரெனவுணர்க.

தொல்காப்பியச் சூத்திரத்தும் 'வழிநிலைபிழையாது' என்பதனாலே வழுவமைதிபெற்றும். திருக்கோவையாரில் நாணநாட்டம நடுங்க நாட்டத்தைப் பெருந்திணைபாற்படும் என்று **பேராசிரியர்** உரைகூறினாரெனின், **மாறுகோளக்கூறல்** என்னுங் குற்றமாம். என்னை, —

* "அளவையி வின்பத் தைந்திணை மருங்கிற்
களவுகற் பெனவிரு கைகோள் வழங்கும்" — என்னும் அகப்பொருளினும், a‡"அன்பி னைந்திணைக் களவெனப் படுவது" — என்னும் **இறையனார்** அகப்பொருளினும,

b‡ "இன்பமும் பொருளு மறனு மென்றாங்
கன்பொடு புணர்ந்த வைந்திணை மருங்கிற
காமக்கூட்டம" —

என்பதனான் தொல்காப்பியத்தினும், மற்றும பிற நூலகளினும ஐந்திணைகளவென்று கூறுவதல்லது பெருந்திணையை அகப்பொருளிற் கூறுவதொருநூலினுமில்லை

பெருந்திணையாவது

"ஒப்பில் கூட்டமு மூத்தோர முயக்கமும
செப்பிய வகப்பொருட் சிதைவும பெருந்திணை" — என்னுஞ் சூத்திரவிதியாற பெருந்திணைப்பாற படுமெனறல பொருந்தாது

---

‡ தொல. பொருள். களவியல, சூ. ௨௩.
* அகப்பொருளவிளக்கம, அகத்திணையியல, சூ. ௨௫
a‡ இறையனார் அகப்பொருள. சூ. ௧.
b‡ தொல். பொருள. களவியல, சூ. ௧.

"அகத்திற் சிதைந்தது புறத்தின் பாற்படும்" —
"மடலே றுதலொடு விடைதழா லென்று
குற்றிசை தன்னொடு குறுங்கலி யென்று
சுரநடை தன்னொடு முதுபாலை யென்று
தாபத நிலையொடு தபுதார நிலையென
புகன்றவை யியற்பெயர் பொருந்தா வாயி
னகன்ற வகப்புறப் பெருந்திணைத் தாகும்' — என்பதனால்

நாணநாட்டம் நடுங்கநாட்டம் இதனோ டொப்பதன்றி வழுவன்மைதியென்றுணர்க.

இவற்றுள் முன்னையதொன்றும் மெய்யினாற்சொல்லியது, பின்னைய மூன்றும் பொய்யினாற்சொல்லியது. (சுஅ)

**இத்துணையும் மூன்றுநாட் செய்தியென வுணர்க**

முன்னுறவுணர்தல் - முற்றும்.

---

குறையுறவுணர்தல்.

**பெட்டவாயில் பெற்றிரவுவலியுறுத்தல்**

பெட்டவாயில் பெற்றிரவு வலியுறுத்தல் எ - து. இயற்கைப்புணர்ச்சியின்பின் பிரிவுழிக்கலங்கலின் வாயில் பெற்றுய்தலென ஆண்டு விரும்பப்பட்ட பாங்கியைத் தூதாகப்பெற்றுக் குறையிரத்தலை வலியுறுத்திக் கூறல்.

பொருமணி வெண்டிரைப் பைங்கடல் வங்கம் பொருந்திமுன்பு
தருமணி பின்பெற் றணிபவர் போற்சென்று சார்ந்திரந்து
பருமணி நன்கலப் பாங்கியை நீங்கியப் பாவையைநாம்
மருமணி வண்டுறை தாரவாணன் மாறை மருவுதுமே.

இ - ள். வெண்டிரை முத்துக்களைப் பொரப்பட்ட பசியகடலிடத்து மரக்கலத்தை முன்புபொருந்திப் பின் அக்கடலதரப்பட்ட மணிகளைப் பூண்பவர்போல, நாம்போய்ப் பரியமணிகளாகச் செயிற்றிய நல்ல அணிகளையணிந்த பாங்கியைச்சார்ந்து நமது குறையையிரந்து, அவணோர்ந்தபின் பாங்கியைநீங்கி, அப்பாவைபோல்வாளை மணம்பொருந்திய கரியவண்டுறையப்பட்ட தாரணிந்த வாணன் தென்மாறைநாட்டுக் கூடுதும், நெஞ்சமே! அஞ்சல். எ - று.

'வெண்டிரைமணிபொரு' எனமாறுக. வெண்டிரை - வெண்மை நிறம்பொருந்திய அலை. மணி - முத்து. வங்கம் - மரக்கலம். நன்கலம் - நல்ல அணி. 'நாடிச்சென்று' எனவும், 'பாங்கியைச்சார்ந்து' எனவும் மாறுக.

மரு - மணம். மணிவண்டு - கருவண்டு. தார் - மாலை. நெஞ்சம் - முன்னிலை யெச்சம். மாறைநாடு கடலாகவும், பாங்கி மரக்கலமாகவும், தான் மரக் கலநாயகனாகவும், தலைவி அக்கடலிடத்திருக்கும் மணியாகவும் உவமித்த வதனால் இது தொழிலுவமம்.

‡ "நிரனிறை சுண்ண மடிமறி மொழிமாற்
றவைநான் கெனப மொழிபுண ரியல்பே." — என்னுஞ் சூத்திர

விதியால் மொழிகள் மாறிநின்றன (௬௯)

ஊர்வினாதல்.

ஊர்வினாதல் எ - து. தலைவன் கண்ணியுந் தழையுமேந்திக் குறையுற் றவன்போல வந்து நின்று ஊர்வினாதல்.

---

புதியேன் மிகவிப் புனத்திற்கி யானறனிப் போந்தனனும்
பதியேது செல்லும் படிசொல்லு வீர்படி மேற்படிந்த
மதியேய் சுதைமதில் சூழ்தஞ்சை வாணன்றென் மாறைவையை
நதியேய் சுழிநிக ரும்பழி தீருந்தி நல்லவரே.

இ - ள். புவியின்பேற படிந்த மதியை யொப்பாகிய சுதையினால் விளங்கிய மதில்சூழ்ந்த தஞ்சைவாணனது தென்மாறைநாட்டின்கண் வரு கின்ற வையைநதியிற்பொருந்திய சுழியையொக்குங் குற்றந்தீர்ந்தவுந்தியை யுடைய மடவாரே! யான் இப்புனத்திற்கு மிகவும் புதியேன், ஓராளும் வந்தறியேன், இப்போது தனியாகவந்தேன், நீரிருக்கும்பதியாது? யான் செல்லும்படிக்குச் சொல்லுவீர். எ - று.

படி - புவி. மதியேய் - ஒப்பு. சுதை - வெண்சாந்து ஏய - பொருந்துதல். உந்தி - கொப்பூழ். நல்லவர் - மடவார். (௭௦)

பெயர்வினாதல்.

(இது வெளிப்படை)

கரைத்தாவி யுந்திய காவிரி வைகிய காலத்தினுந்
தரைத்தாரு வன்னசெந் தண்ணளி வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
வரைத்தாழ் சிலம்பினும் வாழ்பதி யீதென் றுவஞ்சியன்னீர்
உரைத்தா லிழிவதுண் டோபெய ரேனு முமையினகளே.

இ - ள் கரையைத்தாவித் திரையைப்பெற்றந்த காவிரிவற்றிய காலத்தி னும் பூமியின்கண் கற்பகத்தருவையொத்த செவ்விய அருளையுடைய வாணனது இனிமைபொருந்திய தஞ்சையைச்சூழ்ந்த மலைகள்பணியப் பட்ட பொதியவெற்பில் நும்முடைய வாழ்வாகிய பதியீதென்றுரைத்தால் உமக்கிகழ்ச்சி வருவதுண்டோ, வஞ்சிக்கொம்புபோல்வீர்! பெயராயினும் உரைமின்களோ எ - று

‡ தொல். சொல். சொல்வியல் ௩. அ

தாவுதல் - கடத்தல். உந்தல் - எறிதல் காவிரி - காவேரி. வைகல் - வழங்கல். தனை - புலி. தாரு - கற்பகத்தரு. செந்தண்ணளி - செவ்விய அருள். தமிழ் - இனிமை. வரை - மலை; சாதியொருமை. தாழ்தல் - பணிதல். சிலம்பு - சண்டு பொதியவெற்பு. இழிவது - குறைவருவது.

வரைத்தாழ் சிலம்பின்' என்புழி, ஐகாரவீற்றுப் பெயராகலான் 'வரைதாழ்சிலம்பு' என இயல்பாய் முடியாது ஒற்றுமிக்கவா றென்னையெனின்,

‡ "வேற்றுமை யலவழி இ ஐ யென்னு
மீற்றுப் பெயர்க்கிளவி மூவகை நிலைய
வவைதா - மியல்பா குநவும் வல்லெழுத்து மிகுநவு
முறழா குநவு மென்மனார் புலவர்.—என்னுஞ்சூத்திரவிதியால் இகர ஐகாரவீற்றுப் பதங்கள் இயல்பாய்முடிவனவும், வல்லெழுத்து மிகுந்து முடிவனவும், உறழ்வாய் முடிவனவுமாகிய மூவகை முடிபினுள் தினைதுறிது, தினைக்குறிது என்றாற்போல, வரைதாழ், வரைத்தாழ் என உறழ்ச்சி முடிபாயினவென் றுணர்க. (௭௧)

## கேடுதீவினாதல்.

கெடுதிவினாதல் எ - து கெட்டபொருளை வினாவுதல்.

தண்பட்ட மேவும் வயற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பில
பண்பட்ட தேமொழிப பாவையன் னீர்பனை பட்டகையும
மண்பட்ட கோடு மதம்பட்ட வாயும வடிக்கணைதோய்
புண்பட்ட மேனியு மாய்வந்த தோவொரு போர்க்களிறே.

இ - ள். தண்ணியவோடையும பொருந்திய வயலுஞ்சூழ்ந்த தஞ்சைவாணனது பொதிய வெற்பிடத்துப் பணணுண்டாகப்பட்ட இனிய மொழியையுடைய பாவைபோல்வீர்! பனைபோலுண்டாகியகையும், தன் னிழலைச் சுளிதலுய்ப் பாய்தலான மண்பட்ட கோடும, கரடத்தானத்தி லிருந்து வடிந்தொழுகும மதம்பட்டவாயும, கூரிய என்கைக்கணை மூழ்கலால் புண்பட்டவுடலுமாய் ஒருபோர்க்களிறு நுமபுனத்தயலே வந்ததோ? கண்டீரேல் சொல்லுவீராக. எ - று.

பட்டம - ஓடை. பட்டமும் வயலும் என உம்மைத்தொகை. மேவுதல் - பொருந்துதல. தமிழ்ச்சிலம்பு - பொதியமலை. பண்-இசை. படுதல - உண்டாதல். தேம் - இனிமை பாவை - சித்திரப்பாவை. பனைபட்டகை - பனைபோலுண்டாகியகை; உவமைத்தொகை. வடி-வடித்தல். களிறு - யானை. உம்மை-எண்ணின்கண்வந்தன. கெடுதிவினாதல் வேழம்வினாதல், புனறிவினாதல், நாய்வினாதல, இனையவினாதல எனபபலவுமுள; அவற்றுள் இது வேழம்வினாதல். (௭௨)

‡ தொல். எழு. தொகைமரபு, சூ. ௬௫.

## ஒழிந்ததுவினாதல்.

ஒழிந்ததுவினாதல் எ-து. இவன் வினவியதற்கு விடையின்மையால், நீர் பேசாதொழிந்த தென்னென வினாதல்.

---

வனமார் குடிஞைப் பகைக்குர லாமென வாணன்றஞ்சைப்
புனமார் குளிரிப் புடைப்பொலி யாற்கிள்ளை போயினமீண்
டினமா மெனவந்திவ் வேனலெல் லாம வவுவு மென்பதற்கோ
கனமா நறுங்குழ லீர்மொழி யாதொழி காரணமே.

இ-ள். வாணனது தஞ்சைநாட்டில் முகில்போன்ற கருமையாகிய நறியகுழலீர்! மொழியாதொழிந்த காரணம் காட்டிலார்ந்த கூகைக்குப் பகையாகிய காக்கைக் குரலாமென புனத்திற் பொருந்திய குளிரியென்னுங்கருவியை நுங்கையாற் புடைத்திடுமோசையால வெருண்டுபோயின கிளிகளெல்லாம்; நீர்வாய்திறந்து மொழியின், நுமதுகுரலென் றறியாது கிளிக்குரலென் றெண்ணி மீண்டு வந்து, இவ்வேனற் கதிரையெல்லாங் கவருமென்பதனாலோ? சொல்லுவீர். எ-று.

'வாணன் தஞ்சைக்கனமா நறுங்குழலீர்' எனவும், 'பகைக்குரலாமெனப் புனமார்குளிரி' எனவும், 'போயினகிள்ளை' எனவும் மாறிக் கொள்க. என்னை,—

‡ "மொழிமாற் றியற்கை
சொன்னிலை மாற்றிப பொருளெதி ரியைய
முன்னும் பின்னுங் கொளவழிக் கொளாஅல." — என்னுஞ் சூத்திரவிதியால மொழிமாற்றிப் பொருளுரைத்துக்கொள்க.

'நல்லவரோசொல்லுவீர்' என்றும், 'வஞ்சியன்னீருரை மின்கள்' என்றும, 'பாவையன்னீர்' என்றும, 'கனமாநறுங்குழலீர்' என்றும், வினாதல் நான்கினும பன்மையாற்கூறிய சொற்கள் யாங்கி யொருத்தியை ‡‡ "ஒருவரைக் கூறும பன்மைக்கிளவி"—எனனுஞ் சூத்திரவிதியாற் கூறிய உயர்சொற்கிளவியென் றுணர்க. தலைவியுங்கூட இருந்தாளெனில் வருங்குற்றமென்னையெனின், குற்றமுண்டு. என்னை,—‡'இருவருமுளவழி யவன்வரவுணர்தல' என மேலே கூறப்படுதலின், இங்ஙனம் இருவரும் உடனிருந்தாரொன்று கூறலாகாதென வுணர்க.

வனம் - காடு. ஆர்தல் - பொருந்தல். குடிஞை - கூகை. பகை காக்கை. குளிரி - தினைப்புனத்திற் கிளியோட்டுவோர் மூங்கிலில வீணை போற்கட்டித் தெறிக்குங்கருவி.

---

‡ தொல். சொல். எச்சவியல, சூ. கரு.

‡‡ ஷை ஷை கிளவியாக்கம, சூ. உஎ.

‡ "தழலுந் தட்டையுங் குளிரும் பிறவுங் கிளிகடி மரபின்." — என்னும் பத்துப்பாட்டில் 'குளிரும்' என்பதற்கு நச்சினார்க்கினியர் கூறிய வுரையிற் கண்டுகொள்க. துளிர் எனினும், துளிரி எனினுமொக்கும்.

புடைத்தல் - விரலாற்றெறித்தல். கிள்ளை - கிளியெனல் ஆகுபெயர். கனம் - முகில். மா - கருமை. கனங்குழல் என்புழி உவமைத்தொகை. 'கனமாநறுங்குழல' பாரமாகிய நறிய குழலெனினும் அமையும் என்பதற்கு வேற்றுமை மயக்கம். ஓகாரம் - வினா. (எ௩)

**யாரோ யிவர்மனத் தெண்ணம் யாதெனத் தேர்தல்.**

யாரோ யிவர்மனத் தெண்ணம் யாதெனத் தேர்தல் எ - து இவ்வாறு கண்ணியுந் தழையுமேந்தி ஊர்பெயர் கெடுதியோ டொழிந்தவும் வினவி நின்றவர்யாரோ! இவர்மனத்தெண்ணம் யாதோ! வெனப்பாங்கி தன் மனத்தில் ஆராய்ச்சிசெய்தல்.

தரையார வண்புகழ் தேக்கிய வாணன் றமிழ்த் தஞ்சைசூழ்
வரையாது நும்பதி யாதுநும் பேரென்பர் வார்துளிக்கார்
புரையானை யம்பொடு போந்ததுண் டோவென்பர் பூங்கொடியீர்
உரையாத தென்னென்ப ராலென்கொ லோவிவ ருட்கொண்டதே.

இ - ள் தரைநிறைய வளவியபுகழை நிறைத்த வாணனது தமிழ்த் தஞ்சைசூழ்ந்த வரையிடத்து நும்முடைய பதியாது? நும்முடைய பெயர் யாது? என்றுஞ் சொல்லுவர், அல்லாமலும், நெடிய துளியைச் சொரியும் மேகத்தையொக்கும் யானையென் கையம்போடு வந்ததுண்டோ? என்றுஞ் சொல்லுவர், அன்றியும், பூங்கொடிபோல்வீர்! யாதும் உரையாததென்? என்றுஞ் சொல்லுவர், ஆதலால், இவர்யாரோ! இவருட்கொண்ட எண்ணமென்கொலோ! அறிகின்றிலேன்! எ - று.

தரை - பூவுலகம் ஆர் - நிறைய வண்புகழ் - வளவியபுகழ் தேக்கல் - நிறைத்தல். தமிழ் - இனிமை. வரை - மலை 'பதியாது,' 'பேர் யாது' என மாறுக. வார் - நெடுமை. துளிக்கார் - துளிசொரியுங்கார். புரை-உவமவுருபு.

'போந்தது' - 'வந்ததோ வொருபோக களிறே' என்று தலைவன் முன் வினவிய சொல்லையே பாங்கி யீண்டு 'யானை யம்பொடு போந்த துண்டோ' என்று அப்பொருளையே யெடுத்துக் கூறினமையால், 'வந்தது' என்னும் பெயராயினவாறு காண்க. அன்றியும், 'புதியேன் றகவிப் புனத் திற் கியானன்றணி போந்தனன்' என்பதனானு முணர்க.

**பூங்கொடியீர்** - ஆகுபெயர் உம்மை - இறந்ததுதழீஇய வெச்சவும்மை விகாரத்திற் றொக்கது. **கோல்** - ஐயம். ஓகாரம் - அசை. உட்கொண்டது - உட்கொண்ட வெண்ணம். (எ௪)

குறையுறவுணர்தல் - முற்றும்

---

‡ குறிஞ்சிப்பாட்டு.

## பாங்கிமதியுடன்பாடு.

### இருவரு முள்வழி யவன்வர வுணர்தல்.

### எண்ணந் தெளிதல்.

(இது வெளிப்படை.)

யாரோ யிவரொன் றறிகின்றி லேமெதிர்ந் தாரைவென்று
வாரேய் கழற்புனை வாணன்றென் மாறை வரையுறைவீர்
ஊரோ தெனமுன் வினவிப்பின் வேறொன் றுரைப்பதெல்லாம்
நேரோ யிவர்பொருட் டாலென்று தோன்றுமென் னெஞ்சினுக்கே.

இ - ள். கண்ணியுந் தழையுமேந்திக் குறையுற்றார்போல் வினவிய இவர் யாதொன் றறிகின்றிலேம்! போர்க்களத்தி லெதிர்ந்தாரைவென்று கயிறு பொருந்திய கழலைப்புனைந்த வாணன் தென்மாறைநாட்டில் வந்த இவர் நம்மைநோக்கி வரையுறைவீர், நுமதூரேதுவென முன் வினவிநின்று பின் வேறொன்றாகச் சொல்லும் வார்த்தையெல்லாம் ஆராய்ந்தெண்ணில், செவ்வனே இவள்பொருட்டென்று என்னெஞ்சினுக்குத்தோன்றும், இதற்கையமில்லை. எ - று.

யாரோ - ஏகாரம் ஈற்றசை. வார் - கயிறு. ஏய்தல் - பொருந்தல். கழல் - வீரக்கழல். புனைதல் - தரித்தல். நேர் - செவ்வை. ஆல் - அசை.

### தலைவன் கையுறையேந்திவருதல்.

தலைவன் கையுறை யேந்திவருதல் எ - து. தலைவியும் பாங்கியுஞ் சேர்ந்திருப்பது கண்டு தலைவன் கையுறை யேந்திவருதல்.

---

தண்டா மரைமலர்ப் பொன்னையும் பார்மங்கை தன்னையும்போல்
வண்டார் குழன்மட வார்மணந் தார்சென்று வாணன்றஞ்சை
நுண்டா தணிபொங்கர் நீழலின் கீழ் நுடங்கிடையார்க்
கண்டா தரவையெல் லாஞ்சொல்ல வேநல்ல காலமிதே.

இ - ள். வாணனது தஞ்சைசூழ்ந்த நுண்ணிய தாதுகள் பொருந்திய சோலைநிழற்றண்ணிய தாமரைமலரி லிருக்குந் திருமகளும், பார்மங்கையாகிய நிலமகளும்போல, வண்டார்குழலன மடவாராகிய தலைவியும் பாங்கியுஞ் சேர்ந்திருந்தா ராதலால், நாம்போய் அந் நுடங்கிடையாரைக்கண்டு நமது காதலெல்லாஞ்சொல்ல இது நல்லசெவ்வி. எ - று.

பொன் - திருமகள். பார்மங்கை - நிலமகள். மணத்தல் - சேர்தல். தாது - பராகம். பொங்கர் - சோலை. நுடங்கல் - ஒசிதல். 'இடையார்க் கண்டு' என்புழி இரண்டனுருபு தொக்கது. உம்மை - எண்ணும்மை. ஏகாரம் - ஈற்றசை. காலம் - செவ்வி. செவ்வி, பதம், அமையம், காலம் என்பன ஒருபொருட்கிளவி. (எசு)

### தலைவனவ்வகை வினாதல்.

தலைவ னவ்வகை வினாதல் எ - து. தலைவன் முன் கெடுதி வினாதல் போல மீண்டு கலைவந்ததோ வென்று வினாதல்.

---

வல்லா ரிளங்கொங்கை வஞ்சியன் னீர்தஞ்சை வாணனைக்கண்
டொல்லார் களத்தி னுடைந்தது போல வொருகலைபோர்
வில்லார் கணைதப்ப மெய்சோர்ந் தினம்விட்டு வெய்துயிர்த்துப்
புல்லார் வதுமின்றி யேவந்த தோநம் புனத்தயலே.

இ - ள். சூதுபோன்ற இளங்கொங்கையையுடைய வஞ்சிக்கொம்பு போல்வீர்! தஞ்சைவாணனைக்கண்டு பகைவர் போர்க்களத்தில் உடைந்தோரோடியது போலப் போர்செய்யும் எனது கையில் வில்லார்ந்த கணைதப்ப ஒரு கலைமான் மெய்சோர்ந்து இனத்தைப்பிரிந்து பெருமூச்செறிந்து புல்லருந்தலு மின்றி நம் புனத்தயலிலே வந்ததோ? கண்டீராயிற் சொல்லுவீர். எ - று.

வல் - சூது. ஆர் - ஒப்பு. ஒல்லார் - பகைவர். களம் - போர்க்களம். உடைதல் - படைகெட்டழிதல். சோர்தல் - மயங்கல். விடுதல் - பிரிதல். வெய்துயிர்த்தல் - பெருமூச்செறிதல். ஆர்தல் - அருந்தல். வினையெச்சங்கள் 'வந்ததோ' என்னும் வினாப்பொருண்மை வினைகொண்டு முடிந்தது. ஓகாரம் - வினா. (௭௭)

### எதிர்மொழிகொடுத்தல்.

(இது வெளிப்படை)

வாக்குந் திறத்து மதனையொப் பீர்தஞ்சை வாணன்மஞ்சு
தேக்குஞ் சுடுமிச் சிறுமலைக் கேதிரி கோட்டிரலை
யேகக்குஞ் சரமுங் குருதியுஞ் சோரக் கொடிச்சியரேங்
காக்கும் புனமருங் கேதனி யேவரக் கண்டிலமே.

இ - ள். மெய்த்திருத்தத்தினும் வெற்றியினும் மதனைப்போல்வீர்! தஞ்சைவாணனது முகில் நிறையும் உச்சியையுடைய சிறுமலையிடத்துத் திரித்ததுபோலிருக்கின்ற கொம்பையுடைய கலையும், யானைகட்குத் தலைமையாகிய குஞ்சரமும், குருதியொழுக்கக் கொடிச்சியராகிய யாங்கள் காக்கும் புனப்பக்கத்தே தனியேவரக் கண்டிலேம். எ - று.

வாக்குத்திருத்தம் - மெய் ; அவாய்நிலையான்வந்தது. ‡ "வாக்கணங் காமணி வீணை வல்லார்க்கும்" என்னும் கேமசரியாரிலம்பகத்துப் பாட்டில் வாக்குத்திருத்தமென்றுணர்க.

---

‡ சிந்தாமணி, கேமசரியாரிலம்பகம், செ. ௯௨.

திறல் - வெற்றி. மஞ்சு - மேகம். தேக்கும் - நிறையும். குடுமி - உச்சி. சிறுமலை - மலைப்பெயர். 'சிறுமலைக்கு' என்புழி வேற்றுமை மயக்கம். திரிதல் - முறுக்குதல். கோடு - கொம்பு. இரலை - கலைமான். குஞ்சரம் - யானை. குருதி - இரத்தம். சோர்தல் - ஒழுகுதல். கொடிச்சியர் - குறத்தியர். இரலைக்கு உம்மை கொடாது குஞ்சரத்திற்கு உம்மை கொடுத்தது என்னையெனின்,

‡ "எஞ்சு பொருட்கிளவி செஞ்சொ லாயிற்
பிற்படக் கிளவார் முற்படக் கிளத்தல்" — என்னும் விதியாற் கொள்க. குருதியும் என்னும் உம்மை அசைநிலை. (எ௪)

## இறைவனை நகுதல்.

இறைவனை நகுதல் எ - து. தலைவன் அப்பால் சென்றானாகப் பாங்கி தலைவியை நோக்கி அச்சதியாடி நகாநிற்றல்.

மைவா ளிலங்குகண் மங்கைநல் லாய்தஞ்சை வாணன்வெற்பில்
இவ்வாளி மொய்ம்பரின் றெய்தமெய்ம் மானிள மாந்தளிரின்
செவ்வாளி யுங்கொண்டு சேட்சென்ற தாலன்று சீதைகொண்கன்
கைவாளி யுங்கொண்டு போனபொய்ம் மானினுங் கள்ளத்ததே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பிடத்து மையெழுதிய வாள்போ லிலங்குங் கண்ணையுடைய மங்கைப்பருவத்து நல்லாய்! இந்த வாளி போலும் வலியையுடையார் இப்பொழுது எய்த மெய்யாகிய மான் இளமாந்தளிராகிய சிவந்த வாளியையுங் கொண்டு சேய்மைக்கண் சென்றதாதலால், பண்டைநாளில் இராமனது வாளியையுங் கொண்டுபோன பொய்யாகிய மானினுங் கள்ளத்தையுடையது. எ - று.

'பொன்மான்' என்று பாடமோதுவாருமுளர். இவர் எய்த மெய்ம் மானென்று கூறவே அம்மான் பொய்ம்மானென்றே கூறவேண்டுமாதலால் அது பாடமன்மை யுணர்க. 'மைவா ளிலங்குகண்' உவமைத்தொகை. 'ஆளி மொய்ம்பர்' என்பதுமது. மொய்ம்பு - வலி. 'இளமாந் தளிரின் செவ்வாளி' என்றது கையில் அம்பின்றித் தளிர் பிடித்து நிற்றலின் கையாடி கூறியது. சேண் - சேய்மை. அன்று - பண்டைக்காலம். சீதை கொண்கன் - இராமன். கைவாளி - கையம்பு. உம்மை - சிறப்பும்மை. (எ௫)

## பாங்கிமதியின் அவரவர் மனக்கருத்துணர்தல்.

பாங்கிமதியின் அவரவர் மனக்கருத்துணர்தல் எ - து. பாங்கி தன்னறிவினின் தலைவன் தலைவியென்றிருவரது மனக்குறிப்பை யாராய்ந்து கூறல்.

‡ தொல். சொல். இடையியல், ௫. ௩௫.

புனங்காவ லன்றிவள் பூண்டது மாண்டகை போந்ததுமான்
இனங்காவ லின்கலை யெய்யவன் றிக லாழிவிந்தை
தனங்காவ லன்றஞ்சை வாணனன் னாட்டிவர் தங்களிற்றும் [தே.
மனங்காவல் கொண்டதெல் லாங்கண்க ளேசொல்லும் வாய்திறந்

இ - ள். போர்செய்யும் நேமியையணிந்த வீரமகளுடைய தனத்துக்குக் காவலனாகிய தஞ்சைவாணனது நல்லநாட்டில், இவ்விருவருந் தங்களிற்று மனத்தைக்காவல்கொண்டதெல்லாம், இவர்கள் கண்கள் யாமறிய வாய்திறந்து சொல்லுதல்போல் அறிவிக்கு மாதலால், இவள் மனத்தின்கண் பூண்டிருப்பது புனங்காவலன்று, இவ்வாண்டகைவந்தது மானினங்கட்குக் காவலா யின்பத்தைக்கொடுக்குங் கலையெய்யவன்று. எ - று.

ஆண்டகை - அன்மொழித்தொகை. இகல் - போர். ஆழி - நேமி. விந்தை - வீரமகள். வாணன் தோளைப்பிரியாதிருத்தலின் 'தனங்காவலன்' என்று கூறியது. மனங்காவல் கொள்ளல் - வேறோரிடத்திற் செல்லாது காவல்செய்வதுபோலத் தம்மிடத்தில் மனத்தைவைத் திருத்தல். (௮௦)

இருவரு முளவழி யவன்வர வுணர்தல் - முற்றும்.

---

காட்சியில் தலைவி ஆயவெள்ளம புடைசூழ்ந்து குற்றேவல்செய்ய வீற்றிருந்தாளென்று கூறி, இங்ஙனந் தினைப்புனங் காததிருந்தாளென்று கூறியதும், தலைவனும பற்பல நூறாயிரங் கூர்வேலிளைஞர் புடைசூழத் தேரேறி வேட்டையாடவந்தானென்று கூறி, இங்ஙனந் தமியனாய்த் தழை யேந்தி வந்தா னென்றும், குறையிரந்தா னெனறுங் கூறியது மாறுபா டன்றோவெனின், மாறுபாடன்று. என்னை, — தலைவி ஆயக்கூட்டமும முன்போலே சூழ்ந்து பிரிந்து விளையாடாநிற்ப, இவளும் பற்பல விளையாட்டினுள் இதுவுமோர் விளையாட்டாகவும், தலைவன் குறியிடத்து வரின் எளித்து அவனைக் கூடவேண்டுமென்னுங் கருத்தாகவும் புனங்காததா ளென்றும், தலைவன் கூர்வேலிளைஞரும் வேட்டைவிருப்பாற் சூழ்ந்து பிரிந்துசெல்லாநிற்ப, இவனும் வேட்கை மீதூரப்பட்டுப் பாங்கியாற் கூட வேணடுமென்னுங் கருத்தினால், தலைவி குலமுறைமை யொருவர்க்கொருவர் தழையுங் கண்ணியுங்கொடுத்துக் காண்டலுள் இவா அவற்றையேற்றுக் கோடலுந தொன்றுதொட்டு நடந்துவரு மியல்பாதலால், தழையுங் கண்ணியுமேந்திவந்து நின்று குறையிறநதானென்றுங் கூறியது மாறுபாடன்றென வுணர்க. எனவே,—எளியளாய்ப் புனங்காத்தாளுமல்லள், எளியனாய்க் குறையுற்றிறந்தானு மல்லன் என்பது தோன்றியவாறுணர்க.

பாங்கிமதி யுடன்பாடு - முற்றும்.

---

## பாங்கியிற்கூட்டம்.

அஃதாவது, பாங்கி கூட்டுவிக்கத் தலைவன் கூடுங்கூட்டம்.

"இரந்துபின் னிற்றல் சேட்படை மடற்கூற்று
மடல்விலக் குடன்படன் மடற்கூற் றொழிதல்
குறைநயப் பித்த னயத்தல் கூட்டல்
கூட லாயங் கூட்டல் வேட்டலென்
றீரா று வகைத்தே யிருணையிற் கூட்டம்" — என்னுஞ் சூத்திர விதியால் பாங்கியிற் கூட்டம் பன்னிரண்டு வகைப்படும்.

### தலைவனுட்கோள்சாற்றல்.

தலைவனுட் கோள்சாற்றல் எ - து. தலைவன் தான் உள்ளத்தின்கண் கொண்ட காதலைக் கூறுதல்.

வாவுங் கலைவிந்தை காவலன் வாணன்றென் மாறையன்னீர்
ஏவுந் தொழிலெனக் கேதிய லாததிங் கேநுமக்கோர்
மேவுஞ்செய் குன்றமுஞ் சோலையு மாகப்பொன் வெற்பும்விண்ணோர்
காவுந் தரவும்வல் லேனெனை யாளுங் கடைக்கண்வைத்தே.

இ - ள். மேலெழுந்து தாவுதலைசசெய்யுங் கலையை யூர்தியாயுள்ள வீரமகளுக்குக் காவலனாகிய வாணனது தென்மாறை நாடுபோல்வீர்! நீர் என்னை யேவற்றொழில இவ்விடத்தெனக் கியலாததேது? எத்தொழில் செய்யவும் வல்லேன்; நுமக்கு விளையாடற்குப் பொருந்தும் ஒப்பற்ற செய் குன்றுஞ் சோலையுமாக மேருமலையுங் கற்பககாவும தரவும் வல்லமை யுடையேன்; என்னிடத்துக் கடைக்கண்வைத்தாளுமபடி செய்வீர். எ-று.

வாவுதல் - தாவுதல். விந்தை - வீரமகள். 'மேவுமோர் செய்குன்று' என மாறுக. 'தரவும் வல்லேன்' என்புழி உம்மை நீர் எத்தொழில் ஏவினும் அத்தொழில் செய்யவும் வல்லேனென்று தோன்றினமையால் இறந்தது தழீஇய வெச்சவும்மை. இதனுள் செய்குன்றமும், சோலையு மாகப் பொன் வெற்பும், விண்ணோர் காவும் என்பது நிரனிறையெனக் கொள்க. (அக)

### பாங்கி குலமுறை கிளத்தல்.

பாங்கி* குலமுறைகிளத்தல் எ - து. தலைவன் இவ்வாறு கூறியதற்குப் பாங்கி குலமுறைமையால இயையாதென மறுத்துக் கூறல்.

நீவே றுணாக்கின்ற தென்குற மாதெங்க ணேரிழைபோர்
மாவேழ வன்படை வாணன்றென் மாறை மணியையன்றித்
தாவேது மில்லாத் தமனிய மீது தலமபுரக்குங்
கோவே யழுத்துவ ரோவறி யோருங் குருவிந்தமே.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. உ௭.

இ - ள். இவ்வுலகைப் புரக்குங் கோவாகிய தன்மையைப் பெற்றோய! நீ யிவையுந் தன்மையைக் கூறாது இயையாது கூறியதென்னை? எங்கள் சேரிழை குறமாது, போர்செய்யும் பரியும் வேழமும் வலியபகையாக வுடைய வாணன் தென்மாறை நாட்டிற் பிறக்கும் மணியை யன்றிக் கேடேதுமில்லாத பசும்பொன்னின் மீது வறுமைபட்டோருங் குருவிந்தத்தை யழுத்துவரோ? எ - று.

'எங்க ணேரிழை குறமாது' என இயையும். 'மாவேழம' எனபுழி உம்மைத்தொகை. மணி - பதுமராகம். தா - கேடு. தமனியம் - பொன். தலமபுரத்தல் - உலகைக்காததல்.

வறியோர் - நல்குரவோர். அன்றி எனனும் வினையெசசக் குறிப்பு அழுததுவரோ' என்னும் முறறுவினைகொணடது. ஓகாரம எதிரமறை. வறியோரும்' என்னும் உம்மை இழிவுசிறப்பு.

'குருவிந்தம' என்பது ‡ "கதிர்கிளை பரபபு மணிமுடிதேவா" எனபுழி "குருவிந்தஞ சவுகநதி கோவாங்கு சாதகங குரமென்னுஞ சாதிகள் நான்கில்" என்று கூறிப் பின்னும அப்பாட்டிலே —

"செமபஞ் சரததந திலகமு லோததிரம
முபலின் சோரி சிநதுரங குனறிக்
கவிரல லொன்னக் கவாநிற மெடடுங்
குருவிந ததநிற குரிததன நிறமும" —எனறு கூறிய வதனால்,

குருவிநதம' எனபது பதுமராகமணிககு பொதுமணியாவதும், உசசிக் கதிரபோலக் கதிரொழுவதாங கதிரிலலாதது எடடுவகையி லொரு நிறங் கொண் டிருப்பதும குருவிநதக்கல்லென்று கணடுகொளக. (அஉ)

தலைவன் தலைவிதன்னை யுயர்த்தல்.

(இது வெளிபபடை)

மிக்கா ருளரலலா மெலலியன் மாதரின மேதினிமேல்
தக்கார புகழ்தஞ்சை வாணாபி ரானறமிழ் நாடனையாய்
மைக்கார நிகாகுழல வள்ளிசெவ் வேளுக்கு வலலவையாம
இக்கா ரணமுண ராதெனகொ லோாகின றியமபுவதே.

இ - ள். மேதினிமேல் தகுதியுடையோரால் புகழப்பட்ட தஞசையி லுள்ள வாணாபிரானது தமிழ்நாடுபோலவாய! மெலலிய இயலபினை யுடைய மாதரில மிகுதிததன்மையை யுடையா ருலலாரா? கரிய முகிலை

‡ கல்லாடம, செ. கஎ.

யொக்குங் குழலினையுடைய வள்ளி முருகக் கடவுளுக்கு வல்லவையாகிய இக்காரணமுணராது இயையாதென்று நீ சொல்லுவதென். எ - று.

'மிக்குள ரல்லார்' என மாறுக. மேதினி - புவி. தக்கார் - பெரியோர். செவவேள - முருகக்கடவுள். வாணர்பிரான் - அவன் குலத்தில் வாணனொன்று பிறக்குமவாகட் கெலலாஞ் சிறந்தோன். 'கொலை காலையிற் படைநேரியா கோன்' என்று முனனங கூறியதுபோலக் கொள்க. தமிழ் நாடு - பாணடிநாடு. வலலவை - தேவி. காரணம - கதை. கோலோ - அசைநிலை. (அரு)

## பாங்கி யறியாள்போன்று வினுதல்.

பாங்கி யறியாள்போன்று வினுதல எ - து. இவன் தலைவியிடத்துக் காதலகொணட தறியாளபோல நீ யெவவிடததுக காதல கொணடா யென வினுதல.

பொனனிய லூசலும பொய்தலு மாடியெப போதுநன்னீர
மன்னிய னீலமு நிததில முங்குறறு வாணன் றஞைசை;
இன்னிய லாரு மிளமரக காவி னிடமபிரியாக்
கனனியா தாமபலா யாநினனை வாட்டிய காரிகையே

இ - ள். பொனனுலியனற ஊசலும விளையாட்டுமாடி யெஞ்ஞான்றும நிலைபெறற நீலமுமமுததுங குறறுமவாணனதுதஞைசைநாட்டில இனிய இயல்பொருநதும இளமரசசோலையிடம பிரியாதகனனியாகள தாம் பலா, அவருள நினனைவாட்டிய காரிகையாா? யான அறிய வுரைப்பாயாக.

'பொனனியல' எனபுழி முனறனுருபு தொக்கது. பொயதல - விளையாட்டு நீலம - குவளை நிததிலம - முததது இனனியல - இனியசாயல். கா - சோலை காரிகை - பெண. [illegible]சலும விளையாட்டும இவ்விரணடையும ஒரு தொழிறபடுததி 'ஆடி' எனறும, நீலமும நிததிலமும இவவிரணடையும 'குறறு' எனனும பலபொருளகுறிதத வொருசொலலால் நீலப் பூவை 'கொயது' எனறும, நிததிலததை 'அவைதது' எனறும கூறினுரொனறுணாக

அவைததல - உரலில நெல்லு முதலியன பெய்து குறறுதல்.—

"துவைககுந துணிமுன்னீா கொறகை மகளீா
அவைப்பதம பலலிற கழகொவவா முததம்
மணஙகமழ தாரசசுதன மணகாககும வேலின்
அணஙகமுத மனனலாா பாடல்" — என இதனுள் பெண்களசிறுசோறடுதற்கு நிததிலங குறறுதறகு அவைத்தல் எனறு பொருள் வநதவாறு கண்டுகொளக. தலைவன் - முனனிலையெச்சம். (அச)

### இறையோன் இறைவிதன்மை யியம்பல்.

(இது வெளிப்படை.) தன்மை - இலக்கணம்.

தாளிணை மாந்தளி ரல்குல்பொற் றேரிடை சங்கைகொங்கை
கோளிணை கோலக் குரும்பைகை காந்தள் கொடிக்கரும்பார்
தோளிணை வேய்முகந் திங்கள்செவ் வாயிதழ் தொண்டையுண்கண்
வாளிணை வார்குழ லாய்வாணன் மாறையெம் மன்னுயிர்க்கே.

இ - ள். வார்குழலாய்! வாணனது மாறைநாட்டிலிருக்கும் எம் மன்னுயிர்போல்வாட்கு இலக்கணம்,—தாளிணை, மாவினது தளிர்; அல்குல், பொன்னி னலங்கரித்த தேர்; இடை, உண்டு இல்லையென்னுஞ் சங்கை கொங்கை, கொத்திலிரண்டிணைந்து அழ்கார்ந்த குரும்பை, கை, காந்தள் பூங்கொடியுங் கரும்புங் குங்குமம் வெளுத்தாலார்ந்த தோளிணை, வேய் முகம், திங்கள்; சிவந்த வாயிதழ், கோவைக்கனி, மையுண்டகண் வாளிணை; நீயறிவாயாக. எ - று.

சங்கை - ஐயம். † [illegible] கோள்கொத்துக் கோட்டெங்கின் குலைவாழை" என்புழி கோள்கொத்தினை யுணாத்தியவாறுணர்க. அன்றியும், †† [illegible] வண்கோட்பலவின்" என்புழியும் கோள்கொதகினையுணாத்தியவாறுணர்க. கோலம் - அழகு. கொடி — வல்லி. 'கொடிக்கரும்பு' என்புழி உமமைத் தொகை. தொண்டை - கொவ்வைக்கனி. மன்னுயிர் - ஆகுபெயர். (௮௫)

### பாங்கி தலைவியருமைசாற்றல்.

பாங்கி தலைவியருமை சாற்றல் எ - து. பாங்கி தலைவியை யறியாளாகிக் கூறல்.

---

புகழார் வரையெம் புரவலன் காதற் புதல்வியைநீர்
இகழா வெளியளென் றெண்ணப்பெ றீரெமக் கென்றுமவண்மை
திகழா பரணன் செழுந்தஞ்சை வாணன் சிலம்பினுள்ளீர்
அகழார் கலியுல கிற்புல னனை வணங்கவளே.

இ - ள். எமக்கென்ஞான்றும் வளமையொளிரும் ஆபரணம்போன்ற செழுந்தஞ்சை வாணனது சிலம்பிலிருப்பீர்! புகழ் நிறைந்த வரைக்கு இறைவனாகிய எம புரவலர்க்குக் காதற்புதல்வியாயுள்ளாளை யிகழ்ந்தெளியளென் றெண்ணப் பெறுந்தகுதி யுடையீரல்லீர; அவள் சகரரால் அகழப்பட்ட கடல்சூழ்ந்த வுலகில் அறிவுருவான தெய்வப்பெண். எ - று

வரை - மலை. புரவலன் - அரசன். ஆர்கலி - கடல். (௮௬)

---

† பட்டினப்பாலை [illegible] †† மலைபடுகடாம்.

### தலைவன் இன்றியமையாமை யியம்பல்.

தலைவன் இன்றியமையாமை யியம்பல் எ - து. இன்றியமையாமை ஓர் சொல் முடிந்த பொருளாய் துணிபுபற்றியசொல். என்னை,—

"நீரின் றமையா துலகெனின் யார்யார்க்கும்
வானின் றமையா தொழுக்கு." — என்பதுபோலத் தலைவி இன்றியமையாமை கூறல்.

வனைந்தா லனகொங்கை மாதரு வாய்த்தஞ்சை வாணன்வெற்பில்
புனைந்தா லனைய புனத்தயல வாய்வண்டு போதகத்தேன்
நனைந்தா லனையவென் னல்வினை தான்வந்து நண்ணிற்றென்று
நினைந்தா லணங்கனை யாய்தமி யேனுயிர் நிற்கின்றதே.

இ - ள். அணங்குபோல்வாய்! தஞ்சைவாணனது வெற்பிடத்து அலங்கரித்தாற்போலும் புனத்தின்பக்கத்தில என் நல்வினைதான் கைவல்லார் கையினாற் செய்துவைத்தாற்போலுங் கொங்கையையுடைய மாதரு வாய்வந்து பொருந்திற்றென்று நீ நினைத்தால்,போதகத்திலிருக்குந் தேனில் வண்டு நனைந்தாலொத்த அத்தலைவி யின்பத்தின் மூழ்குந தமியேனுயிர் நிற்கின்றது ; நினையாவிடின் நில்லாதென் றறிவாய். எ - று.

போது தலைவியாகவும்,தேன் இன்பமாகவும்,வண்டு தானாகவும் உவமித்தவதனான் தலைவியின்பத்து மூழ்குமென்று வருவிக்கப்பட்டது.

வனைதல் - செய்தல். புனைதல் - அலங்கரித்தல். அயல் - பக்கம். நண்ணல் - பொருந்தல். அணங்கு - தெய்வப்பெண். 'நினையாவிடி லுயிர்நில்லாது'. என்பது அவாய்நிலையான் வந்தது. 'போதகத்தேன் வண்டு' எனவும், 'என்னல் வினைதான வனைந்தாலன கொங்கைமாதரு வாய்' எனவும் மாறுக. (அஎ)

### பாங்கி நின்குறை நீயேசென் றுரையென்றல்.

(இது வெளிப்படை.)

மருப்பா வியதொங்கல் வாணன்றென மாறை வனசமலர்த் ‡
திருப்பாவை யனையவென் சேயிழை யாட்குன் றிருவுளத்து
விருப்பா கியகுறை யுள்ளதெல லாஞ்சொலலி வேண்டுகநீ
பொருப்பா மொழியப் பெறுமோவெம் மனோரிவை போல்வனவே.

இ - ள். குறிஞ்சிநிலத் திறைவனே! மணம்பொருந்திய மாலையை யுடைய வாணனது தென்மாறைநாட்டுத் தாமரைமலரி லெழுந்தருளி யிருக்குந் திருமாதுபோன்ற எம்பெருமாட்டிக்கு உனது திருவுளத்து விருப்பமாகிய குறையுள்ளதெல்லாம நீயே சொல்லி வேண்டிக்கொள்வா

‡ திருக்குறள், தே. ௨௰.

யாகவன்றி எமபோல்வார் இவைபோன்ற காரியங்கள் மொழியப்பெறுந் தகுதியரல்லார். எ - று.

மரு - மணம். பரவுதல் - பொருந்துதல். தொங்கல் - மாலை. வனச மலர் - தாமரைமலர். திருப்பாவை - திருமாது. பொருப்பன - குறிஞ்சி நிலத்திறைவன். (அஅ)

**பாங்கியைத் தலைவன் பழித்தல்.**

(இது வெளிப்படை.) பழித்தல் - பழித்துக்கூறல்.

வில்லார் நுதல்வெய்ய வேலார் விழிக்கென மெலிவுசொலல [ன்
வல்லா ரிலைசொல்ல வல்லையென் றியான்றஞ்சை வாணன்றெவ்வி
ஒல்லா திதுநுமக் கென்றுண ரேனின் றுணங்கியிநநாள்
எல்லா மிரந்தது நின்குறை யேயலல வென்குறையே.

இ - ள். வில்போன்ற நுதலும், வெவ்வியவேல்போன்ற விழியுமுடையாட்கு எனது மெலிவுசொல்ல நினையல்லால் வலலாரில்லை; நீ வலலையென்றெண்ணி யான் தஞ்சைவாணனுக்குப் பகைவர்செய்தி யார்க்கும் பொருந்தாததுபோல, என்செய்தி நுமக்குப் பொருந்தாதென்று அறியேன் வேட்கைவெயிலின் உலர்நது, செஞ்சுடர்தோனறுங காலையில் தொடஙகி இன்றாகிய இநநாள முற்றும நுமமை யிரந்தது நினமேற் குறையலல, என் மேறகுறை. எ - று.

ஆர் - ஒப்பு. 'நுதல்விழி' என்புழி உமமைததொகை. விழி-ஆகுபெயர். தெவ் - ஆகுபெயர். ஒல்லாது - பொருந்தாது. உணஙகல - உலர்தல. 'இன்றிநநாள்' என இயையும். 'நின்குறையலல வென்குறை' என்றது குறிபபுமொழி. 'கற்கறிதது நன்கட்டாய' எனபதுபோல ‡"வயக்குறு மண்டிலம்" என்னும பாலைக்கலி பனனிரடித்தரவில "இறததிராலைய மற்றிவ ணிலைமை கேட்டிமின்" எனறதுபோலும ஒருமை பனமை மயக்க மெனக்கொள்க. பாங்கி - முனனிலையெச்சம். (அகூ)

**இன் றிந்நாளெல்லா மிரந்தது' என்று வரையறுத்துக் கூறியவதனால் 'குறையுற வுணர்தல்' முதல் நாலாநாட் செய்தியென்று அறிவித்தற்குக் கூறியவாறென் றுணர்க.**

**பாங்கி பேதைமை யூட்டல்.**

பாங்கி பேதைமை யூட்டல எ - து. தலைவி பிறதுயரமறியாளெனப் பேதைமையைப பாஙகி தலைவன் உளங்கொளச சாற்றல.

தேனுஞ் சுரும்புஞ் செறிதொஙகல வாணன்றென் மாறைவெற்பா
மானுங் கலையும் வடிக்கணை யாலெய்து மனனுயிரும்
ஊனுங் கவர்கின்ற தன்னையா போலவி லொத்தகண்ணாள்
தானும் பிறருள்ள நோயறி யாத தகைமையளே.

‡ கலித்தொகை, பாலைக்கலி, செ. உ௪.

இ - ள். பெடையுஞ் சுரும்புஞ் செறிந்த மாலையை யணியும் வாணனது தென்மாறைநாட்டு வெற்பிலுள்ளவனே! மானும் கலையும் வடித்த கணையாலெய்து அவணிலங்கினது உயிரும் ஊனுங்கொள்கின்ற தன்னுடன் பிறந்த தன்னையர்போல, வேலொத்த கண்ணிணை யுடையாள் தானும் பிறருள்ளத்தின்கண்ணுள்ள நோயையறியாத முறைமையன்று. எ-று.

தேன் - சாதிப்பெயர்; பெடைமேல் நின்றது. சுரும்பு - ஆண்வண்டு. வடி - வடித்தல். கவர்தல் - கொள்ளுதல். தன்னையர் - தமையர். அயில் - வேல். தகைமை - முறைமை. ஓரிடத்திற் பிறர்தவாகலான தன்னையர் குணம் இவட்குமாயினவாறுணர்க. (௧௦)

### காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல்.

காதலன் தலைவி மூதறிவுடைமை மொழிதல் எ-து. அவ்வாறு கூறிய பாங்கியை நோக்கி முதிர்ந்த அறிவினையுடையாள் தலைவி, அவளை அவ்வாறு கூறற்பாலையல்லவென்று தலைவன் கூறல்.

---

வருநீர் வனமுலை மங்கைநல் லாய்செங்கை வாணன்வையை
தருநீர் மலிவயற் றஞ்சையன் னாளன்று தஞ்சமிலேன்
கருநீர் நவையுறக் கண்மலர் நீர்தெளிந் தாற்றினளால்
இருநீர் நிலங்கொள்ளு மோவறி யாளென்னு மிவ்வுரையே.

இ - ள். அழகின்றன்மை நாட்கு நாள்மிக்காய்த்தோன்றும் முலையையுடைய மங்கைப்பருவ நல்லாய்! சிவந்த கையையுடைய வாணனது வையையாறு தரும் நீரான் மலிந்த வயலினையுடைய தஞ்சைநகர்போல்வாள் முன் பற்றுக்கோடிலேன், பிறரெய்தற் கரிதாகிய கல்வியறிவு வேட்கையான் குற்றமுறும்போது அக் குற்றந்தீரத் தனது கண்மலரினுள்ள அருளாகிய நீரைத்தெளித் தாற்றினளாதலால், அவளை யறியாளென்று கூறிய இவ்வுரையைப் பெருநீர் சூழ்ந்த இவ்வுலகம் முறைமையென்று கொள்ளாது. எ - று.

'வனநீர் வருமுலை' என மாறுக. மலிதல் - நிறைதல். தஞ்சம் - பற்றுக்கோடு. அருநீர் - அரிய கல்வியறிவு. நவை - குற்றம். நீர் - அருள். ஆற்றுதல் - தணித்தல். இருநீர் - பெருநீர். ஓகாரம் - எதிர்மறை. (௧௧)

### பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக் கூறல்.

பாங்கி முன்னுறு புணர்ச்சி முறையுறக்கூறல் எ-து. இவ்வாறு கூறக் கேட்ட பாங்கி முன் நினைவேட்கை தீர்த்தாளென்று கூறினையே, அவ்வாறு இன்னணங் கூடுகவென்று கூறல்.

---

செறிவளர் காவி வயற்றஞ்சை வாணன் சிறுமலைமேல்
நெறிவளர் வார்குழ னேரிழை யாளன்ன நீர்மையளேல்
குறிவளர் காவின்முன் கூடிய வாறின்னுங் கூடுகநீ
கறிவளர் சாரல்வெற் பாபிற ராலென்ன காரியமே.

இ - ள். கறிக்கொடி வளருஞ் சாலையையுடைய வெற்பனே! ஒழுங்காய் வளர்ந்த வார்ந்த குழலையுடைய நேரிழையாள் நின் வேட்கை தணிக்கும் அத் தன்மையாகிய குணமுடையாளேல், வளருங்காவி செறிந்த வயல் சூழ்ந்த தஞ்சைவாணன் சிறுமலைமேல் நீ கூடுங்குறி வளரப்பட்ட காவில் முன் கூடியவாறுபோல் இன்னுங் கூடுக; என்போலும் பிறரால் என்னகாரியம்? எ - று.

'வளர்காவி செறிவயல்' என மாறுக. காவி - நீலம். நெறி - ஒழுங்கு. குறி - கூடுமிடம். கறி - மிளகு; ஆகுபெயர். சாரல் - மலைப்பக்கம். (கூஉ)

## தன்னிலை தலைவன் சாற்றல்.

தன்னிலை தலைவன் சாற்றல். எ - து. இவ்வாறு கூறக்கேட்ட தலைவன் வேட்கை நோயால் உழக்குந்தன்மை கூறல்.

உரைத்தென் பிறவந்த பைந்தொடி யாக முறுவிடிலவெண்
டிரைத்தென் கடன்முத்துந் தென்மலைச் சந்துஞ் செழும்பனிநீர்
அரைத்தென் புருக்கமெய் யப்பினு மவெப்ப மாறுதினிநின்
வரைத்தென் கருமமெல லாந்தஞ்சை வாணன வரையணங்கே.

இ - ள். தஞ்சைவாணன் மலையிலிருக்கும் அணங்கே! அந்தப் பைந்தொடியை யுடையாளது ஆகத்தைக் கூட்டாவிடில் யான சொல்லியென்னபயன்? வெண்மை நிறமபொருந்திய திரைபொருந்தும தென்கடலிடைப் பிறந்த முத்தும், பொதியமலையிற்பிறந்த சந்தனமுஞ் செழும்பனிநீர்விட்டரைத்து வேட்கைத்தீயில் வெதும்பிய எலும்புருக என்மேனியெங்கும் அப்பினும் வெப்பமாறாது, இன்று எனது காரியமெல்லாம் நினதெண்ணத்தின்மட்டிற்பட்டது. எ - று.

எனவே,—உய்யச்செய்யினும் நையச்செய்யினும் நீயல்லால்வேறில்லையென்றவா றாயிற்று. பிற - அசைநிலை. பைந்தொடி - அன்மொழித்தொகை. ஆகம் - மெய். திரை - அலை. தென்மலை - பொதியம். சந்து - சந்தனம். ஆறாது - அறாது எனக் குறுக்குமவழி குறுக்கலாய நின்றது, வாராது - வராது, தாராது - தராது என்றாற்போல. (கூங)

## பாங்கி யுலகிய லுரைத்தல்

பாங்கி யுலகிய லுரைத்தல் எ - து. இவ்வாறு கூறக்கேட்ட பாங்கி உலகில் வேட்கை கொண்டோா சான்றோரை முன்னிட்டு வரைந்து கொள்வர், அவ்வாறு உலகியலால் நீயும் வரைந்துகொள்கவெனக் கூறல்.

விரையக நாண்மலர் மெல்லியன் மாதைவிரும்பினையேல்
வரையக நாட வரைந்துகொ ணீதஞ்சை வாணன்முந்நீர்
தரையக நான்மறைக் கேள்வியர் வேள்வியர் சான்றவர்தம்
உரையக நாடிமுன் னிட்டன தாகு முலகியலே.

இ - ள். மலையிடமாகிய நாட்டையுடையவனே! தஞ்சைவாணனது முந்நீர் சூழ்ந்த புவியகத்தில் வேட்கைகொண்டார் செய்யும் உலகமுறைமை நான்கு மறையையுங் கேள்வியாலறிந்து வேள்விசெய்யுஞ் சான்றவர் கூறு முறையிடத்துக் கொண்ட பொருளைக் கருதி அவரை முன்னிட்டு வரைந்துகொள்ளில் அன்னதாகுமாதலால, மணத்தைத் தன்னிடத்திலே யுடைய நாண் மலரிலிருக்கும் மெல்லிய இயல்பினையுடைய மாதுபோல் வாளை விரும்பினையேல, நீ வரைந்துகொள்வாயாக. எ - று.

விரை - மணம். நாண்மலர் - முறுக்கவிழ்மலர். மாது - ஆகுபெயர். வரைதல் - மணஞ்செய்தல். உரையகம் - ஆகுபெயர். கேள்வியர் - முற்றெச்சம். அனது - இடைக்குறைவிகாரம். (கூ௪)

**தலைமகன் மறுத்தல்.**

(இது வெளிப்படை.)

வெண்டா மரைமங்கை காதல னாகிய வேதியன்பால்
உண்டா கியதொல வுலகிய லாலுங்க ளாரணங்கை
வணடாா குழலி வரைநதுகொள் வேன்றஞ்சை வாணன்வண்மை
கண்டா லருளுள்ள நீயென தாருயிர் காத்தபின்னே.

இ - ள் வண்டார்ந்த குழலையுடையாய்! தஞ்சைவாணனது கொடை கணடாற்போலும் அருளுள்ள நீயாதலால், இப்போது என்னுடைய அரிய வுயிரோகுந தனமையவாய் நின்றது, அது ஏகாமற் காததபின் வெண்டா மரை மங்கைக்குக் கணவனாகிய மறையோனிடத் துணடாகிப் பழைமை யாகிய வுலகியலால உஙகளுடைய ஆரணஙகுபோலவாளை நீர சொனனபடி வரைந்துகொள்வேன். எ - று.

வெண்டாமரைமஙகை - வாணி. வேதியன் - பிரமன். ஆரணங்கு - ஆகுபெயா. நலகுரவால் உயிாபோகின்றதைப போகாமல நிலைமையைச் செயயுங கொடையாதலால், அக்கொடையைக்கண்டாற்போலும அருளுள்ள நீ யெனவே, கொடைக்கும் அவ்வருளுக்கும உவமைகூறியவாற்றான 'என தாருயிர் காத்தபின்' என்று கூறியவா றுணாக. வண்மை - கொடை. (௬௫)

**பாங்கி யஞ்சி யச்சுறுத்தல்.**

பாங்கியஞ்சி யச்சுறுத்தல் எ - து. பாஙகி தானும் அஞ்சினவளாய்த் தலைவனை அப்புனம்விட்டுப்போக அசசமுறுததிக் கூறல்.

மல்லார் புயன்றஞ்சை வாணன்வெற் பாவெமர் வந்தினியிக்
கல்லார் வியன்புனங் காவலவிட் டாரவர் காணின்மிகப்
பொல்லா திருண்டது போதுமற் றியாங்களும் போதுமிங்கு
நில்லா தெழுந்தரு ணீயுமிப் போது நெடுந்தகையே.

இ - ள். மற்றொழில் பொருந்திய புயத்தையுடைய தஞ்சைவாணன் வெற்பிடத்துள்ளவனே! எமக்குத் தமராயுள்ளவர் இன்றுவந்து மலையார்ந்தகன்ற புனம் இராக்காவல்விட்டார், அவர் நினைக்காணில் மிகவும் பொல்லாராயிருப்பர், நெடுந்தகையை யுடையவனே! இருண்டதுபோது எம்மூர்க்கு யாங்களும் போதும், நீயும் இப்போது இங்கு நில்லாதெழுந்தருள்வாயாக. எ - று.

எமர் - எமக்குத்தமர். வியன் - அகறசி. நெடுந்தகை - அன்மொழித்தொகை. இதனுள் 'வெற்பா' எனவும், 'நெடுந்தகை' எனவும் இரண்டிடத்தும் பொருட்பெயர் முன்னிலையாய் நின்றது. இவ்வாறு வந்ததென்னையெனின், —

‡ "பொருளொடு புணராச் சுட்டுப்பெய ராயினும்
பொருள்வேறு படாஅ தொன்றா குமமே." — என்னுஞ் சூத்திர விதியால்,

‡‡ "பொற்பூண் சுமந்த புணர்மென்முலைக் கோடியோழ
நற்பூங் கழலா னிருதிங்க ளயர்ந்தவாறுங
கற்பா டழித்த கனமா மணித்தூண் செயதோளான்
வெற்பூ டறுத்து விரைவின்னெறிக் கொண்டவாறும்." — இதனுள் 'நற்பூங்கழலான்' எனவும், 'கற்பாடழித்த கனமாமணித்தூண் செய தோளான்' எனவும் இரண்டிடத்தும் படர்க்கைப்பெயர் ஒரு பொருளை சுட்டியவா றுணர்க.

"வையைக் கிழவன் வயங்குதார் மாணகலந்
தையலா யின்றுநீ நல்கினை - நல்காயேற்
கூடலார் கோவொடு நீயும் படுதியே
நாடறியக் கவ்வை யொருங்கு." — என்பதனு னுமுணர்க.

இவ்வாறு வருதல் பெரும்பான்மையும் வழுவமைதியாய் வருதலின், இச்செய்யுளுள்ளும் இரண்டிடத்தும் முன்னிலைப் பொருளைக் கூறியவா றுணர்க. மற்று - அசை. (சுசு)

‡ தொல். சொல். கிளவியாக்கம், சூ. ருள.
‡‡ சிந்தாமணி, பதிகம், செ. கச.

**தலைவன் கையுறை புகழ்தல்.**
(இது வெளிப்படை.)

சிமையார் மலயத் தமிழ்த்தஞ்சை வாணன் சிறுமலைமேல்
அமையா கியதடந் தோளன்ன மேயணி யத்தகுமால்
உமையா ளிறைவன் பயிலகயி லாயத்து மும்பாதங்கு
இமையா சலத்துமெல லாமில்லை யாளிக சித்தழைக்கே.

**இ - ள்.** சிகரத்தைப் பொருந்திய பொதியமலையிற் பிறந்த தமிழ் வளர்க்குந் தஞ்சைவாணனது சிறுமலைமேலிருக்கும் மூங்கிற் பெரியதோளை யுடைய வண்ணம போல்வாய! இத்தழைக்கு நிகா உமையாள் இறைவனு கிய சிவன பிரியாது பழகியிருக்குங கயிலாயததும, தேவர்கள் பிரியாதிருக் கும இமையாசலத்தும் முற்றுமில்லை யாதலால அணியத்தகும். எ - று.

சிமையம் - சிமை யென விகாரப்பட்டு நின்றது. மலையம் - பொதிய மலை. அமை - மூங்கில். தடநதோள - பெரியதோள. அன்னம் - ஆகு பெயா. நிகா - ஒப்பு 'தடநதோளாகிய' என மாறுக. ஆல் - அசை. இத்தழைககு நிகரில்லை யென்று கூறுவ தென்னையெனின், தன்னுயிரை நிறுத்தற கேதுவாகலானும, மன்றதுக்குத தான்முன்னிற்றலானுமென் றுணாக. (கஎ)

**பாங்கி கையுறை மறுத்தல்.**
(இது வெளிப்படை.)

மல்குற்ற தணபுனல சூழ்தஞ்சை வாணன் மலயவெற்பா
நலகுற றவையிந்த நாட்டுள வன்மையி னன்னுதலாள்
அலகுற் றடதமெமா கண்டா லயிரபப ரதுவுமன்றிப
பலகுற றமுமவரு மாலயாஙகள் வாங்கேம பசுந்தழையே.

**இ - ள்.** நிறையுற்ற தணபுனல் சூழ்ந்த தஞ்சைவாணன் மலையவெற்பி லிருப்பவனே! நீ தரபபட்ட இததழை இந்நாட்டிலுள்ள வல்லமையால் நன்னுதலாள அல்குற றடத்திலே யணியில எமக்குத் தமராயுள்ளாா கணடால ஐயபபடுவர், அதுவுமன்றிப பல குற்றமும வருமாதலால் இப் பசுந்தழையை யாஙகள் வாஙகுதலசெயயேம. எ - று.

மலகுறல் - நிறைதல நலகுறல - தருதல். அயிர்ததல் - ஐயப்படு தல. குலததுக்கும, தலைவிக்கும, தினக்கும மறுவெனபதுபற்றிப் பல குறற மென்று கூறினள. (கஅ)

**ஆற்றா நெஞ்சினோ டவன் புலத்தல்.**

ஆற்றாநெஞ்சினோடவன்புலததல் எ - து. ஆற்றாமையாகிய நெஞ் சுடனே தலைவன புலநது கூறியது.

உழையும்வெங் காளமும் போலுங்கண் ணொரு காலமுள்ளங்
குழையுமெம் பாலென்று கொண்டநெஞ் சேகலிக் கோடைமண்
மழையுமந் தாரமும் வந்தன வாணன்றென் மாறையின்மாந் [மேல்
தழையுநம் போலிங்ங னேகவின் வாடத் தவஞ்செய்ததே.

இ - ள். மானும் வெவ்விடமும்போலுங் கண்ணையுடைய பாங்கி யானவள் யாம் இரந்து பின்னின்றே மாயின், ஒருகால் மனமிளகுமென் றெண்ணங்கொண்ட நெஞ்சே! கலியாகிய கோடைசூழ்ந்த இம்மணவுல கினமேல், கோடை வெப்பாதணிய மழையும் மந்தாரமும் வந்தாற்போன்ற வாணன் தென்மாறைநாட்டில், நம்மைப்போல் இந்த மாந்தழையும் அழகு வாடத் தவஞ்செய்தது, யாம் என்செய்வோம்! எ - று.

உழை - மான். காளம் - விடம். குழைதல - இளகுதல். கவின் - அழகு. 'மழையு மந்தாரமும்' என்பதற்கு மேகமும மந்தாரத் தருவும எனறு பொருளுரைப்பாருமுளர். மழைபோல் உடனே வெப்பந் தணி யாமையின் அது பொருளன்மையுணர்க. 'யாம் என்செய்வோம' எனபது சொலலெச்சம். (கூகூ)

பாங்கி யாற்றுவித் தகற்றல்.

பாங்கி யாற்றுவித் தகற்றல் எ - து. இவ்வாறு கூறுதல்கேட்ட பாங்கி தலைவனை யஞ்சலை நாளைவாவெனக் கூறிவிடுதல.

சோலையில வாழிளந் தோகையன் னாளைத் தொழுதிரந்திம
மாலையில வாழி வரங்கொள்வல யான்றஞ்சை வாணன்வெற்பா
வேலையில் வார்துகி ரன்னவெய் யோன்வெயில வெற்பின்மலகும்
காலையில் வாபின்னை யென்கைய தாகுநின் கையுறையே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பனே! சோலையில் வாழும் இளந் தோகைபோல்வாளை யான் இவ்விராமுற்றுந் தாளிற் பணிந்திரந்து வரமாக வேண்டிக்கொள்வன்; கடலில் செடிய பவளமபோன்ற கதிரோனது கிர ணம் வெற்பிலெல்லாம் நிறையுங் காலைப்பொழுதில்வா; வந்தாயேல், அப் போது நின் கையுறை யென்கையதாகும. எ - று.

தோகை - மயில். வாழி - அசைநிலை. வேலை - கடல். துகிர் - பவ ளம். வெய்யோன் - சூரியன். வெயில் - கிரணம். மல்குதல் - நிறைதல். கையிலுறைதலின் கையுறையாயிற்று. (கoo)

இத்துணையும் ஐந்தாநாட்செய்தி.

தலைமகன் கூற்றுயினவெல்லாம் இரந்துபின்னிற்றற்கும், பாங்கி கூற்றுயின வெல்லாஞ் சேட்படுத்தற்கும் உரியவாறு காண்க.

## இரந்து குறைபெறாது வருந்திய கிழவோன் மடலே பொருளென மதித்தல்

இரந்து * * * மதித்தல். எ - து மற்றைநாட் காலையில் வந்த தலைமகன் இவளால் காரியமின்றென்க் கருதி, இரந்து குறைபெறாத் தாயினேனென்று வருந்தமுற்று, இனி நமக்குப் பொருளாவது மடலேயெனத் தன்னுள்ளே மதித்துக் கூறல்.

---

திருந்தார் தொழுங்கழற் சேயன்ன வாணன்றென் மாறைவெற்பில்
அருந்தா வமுதன்ன வஞ்சொன்னல் லாரழ கார்குழைதோய்
பெருந்தாரை வேல்விழி தந்தவெங் காமப் பிணிதனக்கு
மருந்தா வதுநெஞ்ச மேயில்லை வேறு மடலன்றியே

இ - ள் நெஞ்சமே! பகைவர் தொழுந் தாளையுடைய முருகவேளை யொத்த வாணன் தென்மாறை வெற்பிடத்து ஆராவமுதுபோன்ற அழகிய சொல்லையுடைய மடவாருடைய முகத்திற்கு அழகாயார்ந்த குழையைத் தொட்ட மணிபொருந்திய பெரிய வேல்போன்ற விழிப்பார்வையானது தந்த வெவ்விய காமமாகிய பிணிக்கு மருந்தாவது மடலேறலேயன்றி வேறில்லை எ - று.

எனவே, — யாம் அது செய்யக்கடவேம் என்பதாயிற்று.

**மடலேறலாவது,** — தலைவன் ஒவ்வாக் காமத்தால் பனங்கருக்காற் குதிரையும், பனந்தருவினுள்ளனவற்றால் வண்டில் முதலானவுஞ்செய்து அக்குதிரையின் மேலேறுவது. மடலேறுவான் திகம்பரனாய் உடலெங்கும் நீறுபூசிக் கிழி ஓவியர் கைப்படாது தானே தீட்டிக் கிழியின் தலைப்புறத்தில் அவள்பேரை வரைந்து கைப்பிடித்து, யாண்டுவே நாற்சந்தியில் ஆகார நித்திரையின்றி, அக்கிழிமேற் பார்வையுஞ் சிந்தையுமிருத்தி, வேட்கை வயத்தனாய் வேறுணர்வின்றி, ஆ ஆரினும், அழல் மேற்படினும் அறிதலின்றி, மழை வெயில் காற்றான் மயங்காதிருப்புழி, அவ்வூரிலுள்ளார் பலருங்கூடி வந்து நீ மடலேறுதியோ? அவளைத் தருதும், சோதனை தருதியோ? என்றவழி இசைந்தானாயின், அரசனுக்கறிவித்து, அவனேவலால் அவன் இணைந்துணையத் தந்து மடலேறென்றவழி, ஏறுமுறைமை - பூளை யெலும்பு, எருக்கு இவைகளாற்கட்டிய மாலைபணிந்துகொண்டு அம்மாவி லேற, அவ்வட்டத்தை வீதியிலீர்த்தலும், அவ்வுருளை யுருண்டோம்பொழுது, பனங்கருக்கு அறுத்த விடமெல்லாம் இரத்தந் தோன்றாது வீரியந்தோன்றின், அப்போது அவளை யலங்கரித்துக் கொடுப்பது, இரத்தங்கண்டுழி அவனைக் கொலைசெய்துவிடுவது. இவை புலவரால் நாட்டிய வழக்கென்றுணர்க.

சேய் - முருகன். தோய்தல் - தொடுதல். தாரை - கண்மணி. 'பெரு வேல்' என மாறுக. **வேல்விழி** - அன்மொழித்தொகை. காமத்தைப் **பிணியாகக்** கூறப்பட்டமையின் மடலேறுதலை **மருந்தாகக்** கூறப்பட்டது.

## பாங்கிக் குலகின்மேல் வைத்துரைத்தல்.

*பாங்கிக் குலகின்மேல் வைத்துரைத்தல் எ - து. தலைவன் அம்மட லேற்றினை யுலகின்மேல்வைத்துப் பாங்கிக்குக் கூறுதல்.*

---

விரையூர் குழலியர் தந்தசிந் தாகுல வெள்ளநிரைக்
கரையூர் பொழுதிளங் காளையர் தாங்கிழி கைப்பிடித்துத்
தரையூர் தொறும்பெண்ணை மாமட லூர்வர் தவிர்ந்துபின்னும்
வரையூர்வர் தஞ்சையர் கோன்வாணன் மாறையில் வாணுதலே.

இ - ள். தஞ்சையிலுள்ளார்க் கிறைவனாகிய வாணன் தென்மாறை நாட்டிலிருக்கும் ஒளிபொருந்திய நுதலினை யுடையவளே! மணமூருங் குழலையுடைய மாதர்தந்த காதலாகிய வெள்ளமானது நிரைத்த கரையின்மேற் செல்லும்போது, இளங்காளையாகத் தாம் வரைந்த கிழியைக் கையிலே பிடித்துப் புவியின்க ணுள்ளதாகிய வூர்கடோறும் பனைமடலி னாற் செய்த மாவை நடத்துவர், அதனாற் சிந்தனைமுடியாவிடில், அதனை விடுத்துப் பின்னும் வரைபாயச்செல்வர் இதனை நீ யறிவாயாக. எ - று.

விரை - மணம். ஊர்தல் - நாறுதிக்குஞ்சென்று கமழ்தல். கரையூர்தல் - கரைமேற்செல்லுதல். கிழி - தலைவியுரு வெழுதப்பட்டது. பெண்ணை - பனை. 'மடல்மா' வென மாறுக. வரையூர்தல் - வரைபாய நடத்தல். (௧௦௨)

## அம் மடலேற்றினைத் தலைவன் தன்மேல்வைத்துச் சாற்றல்.

*அம்மடலேற்றினை * * * சாற்றல் எ - து. அம்மடலேற்றினைத் தலைவன் தன்மேல்வைத்துக் கூறல்.*

---

வன்பணி போனிலந் தாங்கிய வாணன்றென் மாறைவெற்பில்
மின்பணி பூண்முலை மெல்லிய லீர்குறை வேண்டியுங்கண்
முன்பணி வேனின்று நாளைவெண் பூளை முகிழெருக்கோ
டென்பணி வேன்மடன் மேல்வரு வேனிவை யென்பணியே

இ - ள். வலிய அநந்தனைப்போல நிலவுலகத்தைத் தாங்கிய வாணன் தென்மாறை வெற்பில் மின்னும் பணியு மொளியபூண்பொருந்திய முலை யினையுடைய மெல்லியலீர்! எனது குறையை முடிக்கவேண்டி யின்று உங் கள்முன்பணிவேன், யான் பணிதலைக்கண்டு எனகுறையை முடியாவிடில், நாளை வெண்பூளைப்பூ எருக்கமுகையுடனே யென்புமாலையணிந்து மடன்மா வேறிவருவேன் என்னுடைய தொழிலவை. எ - று.

'முடியாவிடில்' என்பது அவாய்நிலையான் வந்தது. வன்பணி - அநந் தன். 'எருக்கமுகிழ்' என மாறுக. அணிவேன் - முற்றுச்சொல் எச்ச மாய் நின்றது. பணி - தொழில்.

இவ்வாறு மடலேறுவேனென்று கூறியது பெருந்திணைப்பாற்படுமே யெனின், படாது. என்னை,—தலைவன் பாங்கி யுடன்படவேண்டுமென்று குறித்துச் சொல்லியதல்லது மடலேறுங் கருத்தாய்க் கூறினானல்லன். ஆத லானன்றே மடலேற்றெனவையாது மடற்கூற்றென்று கூறியது, சான ரேர் செய்யுட்களிலெல்லாம், மடற்கூற்றென்றே வருவதல்லது மடலேற் றென வாராமையானும், ‡ "மடன்மா கூறு மிடனுமா ருண்டே." என்று தொல்காப்பியர் கூறியவாற்றானு முணர்க. (௧0௬)

### பாங்கி தலைமகள் அவயவத் தருமை சாற்றல்

பாங்கி தலைமகள் அவயவத்தருமை சாற்றல் எ - து. அவ்வாறு கூறக்கேட்ட பாங்கி கிழிதீட்டிய பின்னன்றே மடலேறுவது, ஆதலால தலைவி யவயவந் தீட்டுதற் கருமையென்று கூறல

தொடையே யெருக்கென்பு நீயணிந் தாலென்னை சூலவளையூர
மடையேய வயற்றஞ்சை வாணனவெற் பாமல ரோனவகுத்த
படையே நயனம படைத்தபொற் பாவை படியெடுக்க
இடையே தெனத்தெரி யாதுரை யாணி யிடவரிதே

இ - ள். சூல்கொண்ட சங்குகளுரும மடைபொருந்திய வயலசூழந்த தஞ்சைவாணன வெற்பனே! மாலையாக எருக்கையும் என்பையும் நீ யணிந் தால நினக கியாதுபயனெ்த தரும? கிழிதீட்டிய பின்னன்றே மடலேறு வது, தீட்டுதல நின்னால் முடியாது, எங்ஙனமெனின, பிரமன வகுத்த படைக்கலமே நயனமாகபபடைத்த பொறபாவையது உருபபடியெடுக்க இடையாதெனின தெரியாது, சொலலை யெழுதுகருவியா லெழுதவரிது.

இதனுள் 'பொற்பாவை' எனபது பொனனமபாவையாககிப படிக் கலவிட்டு நிறுக்க நிறையேதென தெரியாது, உரைககவெண்ணின உரை யாணி யிடவரிது; இவவாறு வேறுபொருடோனறிச சிலேடையாய நின் றதுகாணக.

தொடை - மாலை ஏகாரம - ஈற்றசை, சூலவளை - கருபபங்கொண்ட சங்கு 'எருக்கென்பு' எனபுழி எண்ணும்மை தொக்குநின்றது உரை யாணி - உரையை யறிவிக்குங் கருவி (௧0௭)

### தலைவன் தன்னைத்தானே புகழ்தல்.

தலைவன் தனனைததானே புகழதல எ - து. இவ்வா றெழுத வரி தென்று கூறிய பாங்கியை நோக்கி யானெழுத வலலேனெனத தனனைத தானேபுகழ்ந்து தலைவன கூறல.

‡ தொல். பொருள். களவியல, ௯ ௧௧

நறையல ராவிரைப் போதிசை யாதிசை நான்முகத்தும்
மறையல ராவந்த மான்மகன் யான்றஞ்சை வாணன்வையைத்
துறையல ராவிப்பங் காவியங் கண்ணி துணிந்துசொல்லுங்
குறையல ராகுழ லாட்கினித் தீரக் குறையில்லையே.

இ - ள். நறையலரொன்னும் அவ்விரைப்போதி லிசைந்து திக்கொரு முகமாகும் நான்முகத்திடத்தும் வேதம் விரிவாகவந்த மாலுக்கு மகன் யானாதலால், தஞ்சைவாணன் வையைத் துறையினும், விரிவாகிய வாவியினும், நீரிற் றோன்றிய காவிப்பூப்போலுங் கண்ணையுடையாய்! நீ யெழுதப் படாதென்று துணிந்து சொல்லுங் குறையலராகாந்த குழலையுடையாட்கு இன்றெழுதப்படாதென்று விடத்தக்கதாய குறையில்லை. எ - று.

இன்னுமோர் பொருள், — நறையலரொன்னும் அவ்விரைப்போதி லிசையாது நான்கு திசையிடத்துங் களவு வெளியாகவந்த ஆசைகொண்ட புருடன் யானென்னச் சிலேடைவகையால், பிரமன் யானென்னத் தோன்றிய வதனால் எழுதற்கரி தின்றென்று கூறியவாறாயிற்று.

நறை - மணம். அவ்விரை-**ஆவிரை** யெனச் சுட்டு நீண்டது, **ஆவயி னான்** என்றாற்போல. **பிரமன்மே லேற்றுங்கால்**,—இசையா - இசைந்து. மறை - வேதம். அலராவந்த - விரிவாகவந்த. மால் - மாயோன். மகன் - பிரமன். **தலைவன்மே லேற்றுங்கால்**,— இசையா - இசையாது. நான்முகம் - நாலிடம். மறை - மறைகள். அலராவந்த - வெளியாகவந்த. மால் - ஆசை. மகன் - புருடன். ஆவி - வாவி. அம் - நீர். காவி - நீலப்பூ. **அம்** - சாரியை, அழகு. **கண்ணி** - அண்மைவிளி. தீர்தல் - விடல். ‡ "தீர்தலுந் தீர்த்தலும் விடற்பொருட்டாகும்." என்பதனாற்கொள்க. குறை - குற்றம். குறை - குறைவு. (௧௦௫)

**பாங்கி அருளியல் கிளத்தல்.**

பாங்கி அருளியல் கிளத்தல் எ - து அவ்வாறு தலைவன் கூறக் கேட்ட பாங்கி மடலேறத்தகாதென அருண்முறைமை கூறுதல்.

---

செயலாக் குடம்பையிற் செந்தலை யன்றிற் சினையுள்பைங்
கயலா வனவெண் குருகின்வண் பார்ப்புள கைக்கடங்கா
மயலார் களிற்றண்ணல் வாணன்றென் மாறைவை யைத்துறைவா
இயலா தருளுடை யார்க்கென்று மாமட லேறுவதே

இ - ள். பாகன் கைக்கடங்கா மதத்தால் மயக்கமார்ந்த களிற்றரச னாகிய வாணன் தென்மாறைநாட்டில் வருகின்ற வையைத் துறைவனே! பனையில் புட்களாற் செய்யப்பட்ட செயலாகாத கூட்டில் சிவந்த தலையினையுடைய அன்றில் முட்டைகளுள் பசிய கயலாவனவாகிய வெண்

---

‡ தொல். சொல். உரியியல், சூ ௨௨.

ணிறக்குருகின் வளவிய பார்ப்புகளுள்ள வூரிலால், அருளுடையார்க்கு எக்காலத்தும் மடன்மா வேறுதல் பொருந்தாது எ - று.

எனவே,—மடலேறத் தகாதென அருண்முறைமை கூறுதல் பனையை வெட்டலும், முட்டைகளைச் சிதைத்தலும், பார்ப்புகளை வதைத்தலுமாகிய பாவங்கள் சூழ்தலின், அருளுடையோர்க் காகாதென்றவா றாயிற்று. மடற்கூற்று அதிகாரப்பட்டு வருதலின் பனையென வருவிக்கப்பட்டது.

செயல் - தொழில். குடம்பை - கூடு 'செந்தலையன்றில்' - வண்ணச் சினைச்சொல்.—

‡ "அடைசினை முதலென முறைமூன்று மயங்காமை
நடைபெற் றியலும் வண்ணச் சினைச்சொல்." — என்னுஞ் சூத்திரத்தா னுணர்க.

சினை - முட்டை குருகு - நாரை. பார்ப்பு - பிள்ளை — ‡‡ "பார்ப்பும் பிள்ளையும் பறப்பவற் றிளமை" — என்பதனு னுணர்க மயல் - மயக்கம். களிறு - யானை. இயலாது - பொருந்தாது. அண்ணல் - வேந்தன் (௧௦௬)

### கொண்டு நிலைகூறல்.

கொண்டு நிலைகூறல் எ - து. தலைவன் உயிரைத் தாங்கிக்கொண்டு நிற்கும் நிலைமையாகிய மொழியைப் பாங்கி கூறல்.

வெண்டோ டணிமுகப் பைங்குரும் பைக்கொங்கை வெய்யவுண்
கண்டோர் விரும்புங் கரும்பனை யாரைக் கடற்றுறைவா [கண்
கொண்டோர் குறைமுடி கொம்பனை யாரின் குறைமறுத்தால்
வண்டோ விடுந்தொங்க லானவா ணன்மா றைவளநாக்கே.

இ - ள். கடற்றுறைவா! கொம்பனையார் நினது குறையை மறுத்தால், வெண்மைநிறம்பொருந்திய தோடணிந்த முகத்தையும், பசிய குரும்பையாகிய கொங்கையையும், உண்ணப்பட்ட வெய்ய கள்ளையுமுடைய கண்டோரால் விரும்பப்படுகின்ற கரிய பனையாரைக்கொண்டு, வண்டுகளாரவாரிக்கும் மாலையையணிந்த வாணன் மாறையாகிய வளவிய நாட்டிடத்து ஒப்பற்ற நின்குறையை முடிப்பாயாக. எ - று.

கொம்பனையார் மறுத்தகாலையில் தோடணிந்த முகமும், குரும்பைபோன்ற கொங்கையும், உண்கண்ணுமுடைய கரும்பனையாரைக் கொண்டு என்னச் சிலேடையால் ஒரு பெண்ணுக்குத் தோன்றியவாறுணர்க.

மறுத்தாற் குறைமுடியெனவே,— குறிப்பான் மருளென்றதோன்றி நிற்றலின், அவன் உயிரைத் தாங்கிக்கொண்டு நிற்கும் நிலைமையாயிற்று.

‡ தொல். சொல். கிளவியாக்கம், சூ. ௨௯

‡‡ தொல். பொருள். மரபியல், சூ ௪.

முன்கூறிய செய்யுட்களில் வெற்பன், சிலம்பன், பொருப்பன், என்று குறிஞ்சிநிலத்துத் தலைமகனைக் கூறி, இவ்விடத்தில் கடற்றுறைவா என்று நெய்தனிலத்துத் தலைமகனைக் கூறியவதனுன்,முன்கூறிய தலைவனேயோ, இவன் வேறேயோ வெனின், அத்தலைவன்தானே இவன். ஐந்திணையில் எத்திணை கூறினும் அத்திணைக்குரிய கருப்பொருளாற் கூறப்படுமாயின, இக்கிளவி எத்திணைப்பாற்படுமெனின், நெய்தற்பாற்படும். அஃதென்னை யெனின்,— பனை நெய்தனிலத்துக் கருப்பொருளாதலான் கடற்றுறைவா எனக் கூறியவாறு பனை நெய்தனிலத்துக் கருப்பொருளானவாறென்னை யெனின்,— குறிஞ்சி கற்பூமியாகலான் பனைக்காகாது, பாலைக்குந் நீந்து போவதல்லது பயிராவதில்லை. முல்லை வரகு, சாமை, முதிரை முதலா யின மக்கட்கு ஊணும், நிரையினங்கட்குப் புல்லு முதலியன உணவும், நிழ லுமாக இருத்தலின் பனைக்காகாது. மருதநிலத்திற்கு வாவியும், குளனும், கமுகு,வாழை, செந்நெல், கரும்புமுதலியனவும் நீரச்சாரபாதலின், அந்நிலத் திற்கும் பனையாகாது. மணல்நிலத்திற் பயிராதலால் நெய்தனிலத்துக் கருப்பொருளாயிற்று.

தோடு - பனைமேலேற்றுங்கால் ஏடு , பெண்மேலேற்றுங்கால் செவி யிற்குழை. குரும்பை - கொங்கை ,—பனைக்குப் பண்புத்தொகை · பெண் ணுக்கு உவமைத்தொகை உண்கண் பனைக்கு உறுகண் : பெண்ணுக்கு மையுண்ட கண். ஓலிடுதல் - ஆரவாரித்தல். 'வளர்காக்கே' என்புழி வேற்றுமை மயக்கம். (௧0௭)

தலைமகள் கூற்றாயினவெல்லாம் மடற்கூற்றிற்கும், பாங்கி கூற்றாயின வெல்லாம் மடல்விலக்கிற்கும் உரித்தாயினவாறு காணக.

தலைவி யிளமைத்தன்மை பாங்கி தலைவற் குணர்த்தல்.
(இது வெளிப்படை.)

களவரும் பாகரு நீலங்கள் காமக் கடவுளுமால்
கொளவரும் பாளைய குரும்பைக் குலனுஞ்செங் குமுதத்துவெண்
டளவரும் பாரணப் னேதனுசை வாணன் றமிழ்வையைநாட்
டிளவரும் பாமிவண் மாட்டென்கொ லோநின் திரப்பதுவே.

இ - ள். கருநீலம்போன்ற கண்களிற் களவு அரும்பவில்லை, காமக் கடவுளும் காதல்கொள்ள மார்பில் பசிய குரும்பைக்குலைபோல முலைகள் அரும்பவில்லை ; செவ்விய குமுதம்போன்ற வாயில் வெண்டளவுபோன்ற பல் அரும்பவில்லை · தஞ்சைவாணன் தமிழ் வையைநாட்டின் அரும்பு போன்ற இவளிடத்தில் யான் சென்று நின்று இரப்பதெவ்வாறு ! சொல் வாயாக. எ - று.

பொருளை உவமைப்பொருளாய்க்கூறியவெல்லாம் ஆகுபெயர். கொல் லும், ஓவும் அசைநிலை. (௧0அ)

தலைவன் தலைவி வருந்தியவண்ணமுரைத்தல்.
(இது வெளிப்படை.)

சிலைபயில் வாணுதன் மின்னே பிறந்தவச் செவ்வியிலே
கொலைபயி லுகக் குருளையைப் போற்குறி யோனிருந்த
மலைபயில வாரதமிழ வாணனறென் மாறை மயிலனையாள்
அலைபயி லாலவிழி யாலெனை தாவி யணங்கினளே.

இ - ள். சிலைவளைவு பழகும் வாணுதலையுடைய மின்னே! குறுமுனிவனிருந்த மலையில பழகிய தமிழ்கற்ற வாணன் தெனமாறைநாட்டு மயிலனையாள் பிறந்த அக்காலத்தே கொலைபழகிய நாகக்குட்டியைப் போல அலையிற் பழகிய ஆலம்போன்ற விழியால எனதாவியை வருத்தினாள். எ - று.

சிலை - வில். பயிலல நாணும் பழகுதல. குருளை - குட்டி. குறியோன - அகத்தியன. 'வாணுதன மின்னே' என்றது சிறப்புநவகம். அலை - ஆகுபெயா. ஆலம - ஆல் என விகாரப்பட்டது; நீலம - நீல் என நின்றாற்போல. (௧0௧)

பாங்கி தலைமகள் செவ்வியருமை செப்பல்.

பாங்கி தலைமகள செவ்வியருமை செப்பல எ - து. தலைமகளது காலப்பருவத்தின அருமை கூறுதல

---

ஏடா ரலங்க லிலங்கிலை வேலவெற்ப வேழுலகும
வாடாமல வந்தருள வாணனறென மாறையில வலலியனாள்
சூடாள குவளை முலலையுஞ் சூட்டுஞ் சுனையும் பந்தும
ஆடா டனக்கென்கொ லோவடி யேனசென றறிவிப்பதே

இ - ள். பூவார்ந்த மாலை யணிந்திலங்கப்பட்ட இலைபோலும் வேலையுடைய வெற்பனே! ஏழுலகும வாடாமைக்குக் காரணமாகவந் தருளப்பட்ட வாணன தெனமாறைநாட்டில வலலிபோலவாள குவளைபபோதும முல்லையரும்பும் சூடாள, சுனையும பந்துமாடாள, அவட்கு அடியேன் போய் அறிவிப்பதெவ்வாறு? எ - று

ஏடு - ஆகுபெயா. அலங்கல் - மாலை. இலங்குதல - ஒளிாதல இலை வேல் - உவமைத்தொகை. 'குவளை முலலையுஞ் சூட்டுஞ் சூடாள' என்றும், 'சுனையும பந்துமாடாள' என்றும், ஒருவினைகொண்டு முடிந்தது. முலலையருஞ்சூட்டு - முல்லைப்பூவாற சுடடிபோலச்செய்து நெற்றியிற கட்டுவது. 'தனக்கு' எனபுழி சுடடுவருவிக்க. கொல்லும், ஓவும அசைநிலை. (௧௧0)

## தலைவன் செவ்வியெளிமை செப்பல்.

*தலைவன் செவ்வி யெளிமைசெப்பல எ - து. செப்புதற்குப் பதமெளி தெனத் தலைவன் கூறுதல.*

---

தேனவந்த வாயிதழ்ச் சேயிழை யாயிளஞ் செவ்விநவ்வி
மானவந்த வாள்விழி வஞ்சிக்கு நீதஞசை வாணனவெற்பில
யானவந் தவாசென் றியமபுதி யேலவா யாவொன்றுள்
தான்வந்த வாவுட னேநின்னை யாரத தழீஇக்கொளுமே.

இ - ள். தேன்போனற சொலவந்த வாயிதழையும், செய்ய பூணையு முடையாய்! இளமையழகாகிய நவ்விமானபோல்வந்த வொளிபொருந்திய கண்ணையுடைய வஞ்சிக்குத் தஞ்சைவாணன் வெற்பில் யான வந்தவாறு நீ சென்று கூறுதியேல, அவா யாவொன்று கூறாது, தான ஆசையுடனே வந்து,நின்னை யாகத்தோடாகம் பொருநதத தழுவிககொளவாள். எ - று.

தேன - ஆகுபெயா. நவவி மான் இருபெயரொட்டுப் பணபுத தொகை. 'மான்வந்த வாளவிழி'- உவமைததொகை. வநதவா-வந்தவாறு. 'நீ சென்று' எனவும், 'தானவாவுடனவந்து' எனவும இயையும (கககக)

## என்னை மறைத்தபின் னெளிதென நகுதல்

*என்னை மறைததபின னெளிதென நகுதல எ - து. நீிருவருமொதது என்னை மறைததபின இக்களவொழுககம ஒழுகுதற கெளிதென நகை யாடிக் கூறல்.*

---

மண்ணும பயிலவித்து மொன்றினுஞ் சநதிர வாணன்வெற்பா
நணணும புனலின்றி யஙகுரி யாதுஙக ணலவினையாற
கண்ணுங் கருத்துங் கலநதன வாயினுங் கணணினுமமுள்
எணணுங குறையென்னை நீமறைத தாலிங கியலவதன்றே

இ - ள். சந்திரவாணன வெற்பனே! நிலனும நிலததுப பழகிய வித்தும இரண்டுமொத்துக கூடினும, அவவிரண்டும நனையப்பொருந்தும புனலின்றி முளையாததுபோல, நீஙகள முன்செயத நலவினையால் கண்ணுங் கருததுங கலநதனவாயினும், கருதுமிடதது நுமமுள்ளத்துள் எண்ணுகின்ற குறை நீஎனனை மறைத்தால இவவிடதது முடிவதன்று. எ-று.

பயிலுதல் - பழகுதல. அஙகுரியாது - முளையாது எண்ணல் - கருதல். இயலுதல். பொருநதுதல; பொருநதல எனவே முடிவின்மேல நின்றது. இசசெய்யுளில் 'அஙகுரியாது, அதுபோல' என்று சுட்டிக்கூறாது உவமமாயிற்று. என்னை, —

‡ "சுட்டிக் கூறா வுவம மாயிற்
பொருளெதிர் புணர்த்துப் புணர்த்தன கொளலே,"— என்னுஞ் சூத்திரவிதியால்,

‡‡ "மோப்பக் குழையு மனிச்ச முகந்திரிந்து
நோக்கக் குழையும் விருந்து." — என்றாற்போலக்கொள்க.

### அந்நகைபொறா தவன்புலம்பல்.

அந்நகைபொறா தவன் புலம்பல் எ - து. அவள் நகையாடிக் கூறுதல் பொறாமல் தலைவன் புலந்து கூறுதல்.

வெவ்வே லெறிந்த விழுப்புண்ணின் மீட்டும் வெதுப்பியதோர்
செவ்வே லுழைப்பவர் சீலமன் றோதிரு வேமருவார்
வைவே லமர்வென்ற வாணன்றென் மாறை மயில்பொருட்டால்
நைவேனை யஞ்சலென் னாதின்ன வாறு நகைக்கின்றதே.

இ - ள். திருவையொப்பவளே! மருவார் வைவேலாற் செய்யும் போரைவென்ற வாணன் தென்மாறைநாட்டு மயில்போன்றவள் பொருட்டால் நைகின்ற வென்னை அஞ்சலென்னாது இவ்வாறு நகைக்கின்றது, வெவ்விய வேலெறிந்து துன்பந்தரும் புண்ணில் மீட்டும் அழலிற் பழுக்க வெதுப்பியதோர் வேலை நுழைப்பவர் குணமன்றோ! எ - று.

வெவ்வேல் - கொடியவேல். விழுப்புண் - துன்பந்தரும்புண். வெதுப்பல் - அழலிடை வெதுப்பல். செவ்வேல் - பழுக்கக்காய்ந்தவேல். சீலம் - குணம். திரு - ஆகுபெயர். வை - கூர்மை. அமர் - போர். மயில் - ஆகுபெயர். ஆதலால், நகைக்கின்றதின்குணமும், வேலைநுழைப்பவர்தங் குணமும் ஒக்குமென்பதாயிற்று. (ககூ)

### பாங்கி தலைவனைத் தேற்றல்.

(இது வெளிப்படை)

தன்கண் ணனையதன் பாங்கிய ருள்ளுந் தனக்குப்பிராம
என்கண் ணருள்பெரி தெம்பெரு மாட்டிக் கிகனமலைந்தார்
வன்கண் ணமர்வென்ற வாணன்றென் மாறையில் வந்தவளால்
புன்கண் ணடையலை நீயினி வாடல் புரவலனே

இ - ள். புரவலனே! எம்பெருமாட்டிக்குத் தன் கண்போன்றுள்ள பாங்கியர் பலருளர், அப்பலருள்ளுந் தனக்குப் பிராணனிடத்து அருள்பெரிது, பகையா யெதிர்ந்தார் கொடிய அமரைவென்ற வாணன் தென்மாறையில் வந்து அவளால் வருந்தமடையலையாய் இன்று வாடற்க.

‡ தொல். பொருள். உவமவியல், கூ எ.

‡‡ திருக்குறள், ௬௩. கூ௦.

எனவே,—பாங்கியர் பலருங் கண்போன்றவ ரென்றும், தானுயிர் போன்றவள், தன்னிடத் தருள்பெரிதென்றுங் கூறியவதனால்,தன் சொல் மறாள், நீ யஞ்சாதை யென்று தேற்றியவா றாயிற்று. உயிர்க்கும் - உயிரொக்கும். இகல் - பகை. வன்கண்ணமர் - கொடியவமர். புன்கண் - வருத்தம். வாடல் - ஆவலித்து, வியங்கோள். (௧௧௪)

### பாங்கி கையுறை யேற்றல்.

(இது வெளிப்படை.)

ஒலிதெண் கடல்புடை சூழுல கேழினு மூழ்வினைதான்
வலிதென் பதனை வயக்கிய தாற்றஞ்சை வாணன்வெற்பா
கலிதெங்கு மாவுங் கமுகும் பலாவுங் கதலிகளும
பொலிதென் பொதியிலின் மேற்சந்த னாடவிப் பூந்தழையே

இ - ள். பொலிந்த தெற்கின்கணுள்ள பொதியமலையிடத் துண்டாகிய சந்தனக்காட்டிற் றோன்றிய இப்பூந்தழையானது ஒலியொடு கூடித் தெளிந்த கடன்மருங்கிற் சூழ்ந்த உலகேழிடத்தும் பழவினைதான வலிதென்று சொலவதனை இப்போது விளங்கச்செய்தது. எ - று.

எனவே,—கையுறையேற்றவா றாயிற்று. இதனுள் கருப்பொருள் மயங்கியவாறு ‡ "உரிபொரு ளல்லன மயஙகவும பெறுமே." — எனனுஞ் சூத்திரவிதியா னுணர்க.

புடை - மருங்கு. ஊழ்வினை - பழவினை. வயக்கியது - விளக்கியது. கலி - இலாங்கலி தலைக்குறையாய் விகாரபபட்டு நின்றது: தெஙகில் ஓர் வேறுபாடு. 'கலி தெங்கும்' என்புழி ‡‡ "எஞ்சுபொருட் கிளவி செஞ்சொ லாயின்" என்னுஞ் சூத்திரவிதியால் உம்மைதொக்கு நின்றது உம்மைகள் எண்ணின்கண் வநதன. கதலி - வாழை. அடவி - காடு. பூந்தழை - பூவோடு கூடிய தழை. (௧௧௫)

### கிழவோனாற்றல்.

கிழவோனாற்றல் எ - து. தலைவன் துயர்மாறிக் கூறுதல்.

மைப்போ தணிதொங்கல் வாண னொன்னாரென வல்வினையேற்
கப்போ தடைந்த வருந்துயர் நீங்கி யரும்பியபொற்
செப்போ திளமுலை யாணகை வாணமுகத் திங்களைக்கண
டிப்போ திளகிய தாலிந்து காந்தங்கொ லென்னெஞ்சமே.

இ - ள். குவளைப்போதாலியன்ற மாலையையணிந்த வாணன் பகைவரையொத்த வல்வினையேனாகிய எனக்குமென்னலடைந்த அரியதுன்ப நீங்கித் தோன்றிய பொற்செப் புவமையா யோதிய இளமுலையையுடைய

---

‡ தொல். பொருள். அகத்திணையியல், சூ. ௧௫.

‡‡ ஷை சொல். இடையியல், சூ. ௪௩.

பாங்கியது மகிழ்ச்சி ஒளிபொருந்திய முகத்தைக்கண்டு, இப்போது பிறந்த மகிழ்ச்சியா விளங்கியதாதலால், என்னெஞ்சம் சந்திரகாந்தமென்னுஞ்சிலே.

எனவே,— ஈரமின்றிப் புலர்ந்த தன்னெஞ்சம் பாங்கி முகத்திங்களைக் கண்டு, இப்போது மகிழ்ச்சியென்னும் நீருண்டாதலின், 'இந்து காந்தம்' என்று கூறியது.

மைப்போது - குவளைப்போது. ஒன்னார் - பகைவர். அரும்பல் - தோன்றல். கோல் - அசைநிலை. (௧௧௬)

*பாங்கி கூற்றுயினவெல்லாம் குறைநேர்தற்கும், தலைவன் கூற்றுயினவெலலாம் மடற்கூற் றொழிதற்கும உரியவாறுணர்க.*

**இறைவன்றனக்குக் குறைநேர்பாங்கி இறைவிக்கு அவன்குறை யுணர்த்தல்.**

(இது வெளிப்படை.)

*இருவர்கண் டால்வரு மேதமென் றெண்ணி யெனக்கெதிரே*
*வருவர் வந்தாலுந்தம் வாய்திறவா தஞ்சை வாணனவெற்பின்*
*ஒருவர்நஞ் சார லுழையக லாதழை யுள்ளதெலலாந*
*தருவாவம் பார்முலை யாயெனகொ லோசெயத் தக்கதுவே.*

இ - ள். வம்பார் முலையாய்! இருவர்கண்டால் குற்றம் வருமென் றெண்ணி யெனக் கெதிராயேவருவர், வந்தாலும தம் வாயதிறநதொன்றுஞ் சொல்லார், தஞ்சைவாணன் வெற்பில ஒருவா நம்முடைய மலைச்சார லிடத்தைவிட் டகலார், இவ்வனததிலுள்ள தழைகளையெல்லாங் கொய் துவந்து தருவர், அவர்க்கியாஞ் செய்யததக்கதென்னே? எ - று.

ஏதம் - குற்றம். உழை - பக்கம வம்பு - கச்சு. கோல் - அசைநிலை.

**இறைவி யறியாள்போன்று குறியாக்கூறல்.**

இறைவி * * * கூறல் எ - து. பாஙகி இவவார்த்தை கூறவே தலைவி தான்கேட்டு அறியாள்போல மனததிற கருதாத வேறொன்றைக் கருதிக் கூறல்.

---

பாங்கி வினவியதற்குவிடைகூறாது வேறொன்றுகூறியது, ‡"செப்பும் வினவும் - வழாஅலோமபல்" 'என்று கூறிய விதியின்றி வழுவக் கூறுத லால் செப்புவழு என்னுங் குற்றந தஙகுமேயெனின், தங்காது. என்னை,— ஒருவர் வந்திருககின்றார் தழையுள்ளதெல்லாந் தருவர், அவாக்கு யாம என்செய்வோமென்று வினையவழி, இவள் பெருநாணுடைய ளாதலால, அவன் நினைத்தபடி செயவோமென்று கூறத தகாதாதலானும், இவள் கற்புக்கடன் பூண்டவளாதலானும், மறுககத்தகா தாதலானும, காமம ஒரு பாலும் நாணம் ஒருபாலும் ஈர்த்துக்கொணடு நிற்றலின, ஒருபாற் சார

‡ தொல். சொல். கிளவியாக்கம, ௬. ௧௩.

மாட்டா ளாதலானும், எனசெயவோமெனறு நெஞ்சிற் கவற்சியுற்று நடு வாக நின்றுளாகலான், அவள் கேட்டதற்கு விடை செவ்வன் கூறாது; அக்கணம் மனத்திற்றோன்றிய வொன்று கூறுவது, இவ்விடத்திற்கு முன் னம் என்னும் உறுப்பாதலின், இவ்வாறு கூறுதல செப்புவழு அன்றெ னக்கொள்க.

இவ்வாறு கூறாது வாளாவிருக்கின் அமையாதோ வெனின், வாளா விருக்கின அவள் கூறியதற்கு உடம்பட்டாளாம; உடன்படின மேற்கூறுங் கிளவிகள் பலவற்றையும் நீக்கல்வேண்டு மாதலான், இவ்விடத்து இம் மொழி இவரிவர்க்குரியவெனறு அவவிடத் தவரவாக் குரைபபதுபறறி, —

‡ "முன்னத்தி னுணருங் கிளவியு முளவே
யின்ன வென்னுஞ் சொன்முறை யான" — என்னுஞ் சூத்திர விதியால் இவ்வாறு கூறுதல இயலபெனக்கொள்க

கலைதொடக் கீணட கருவியந் தேனபல காலகொடுமா
மலைதொடுத் தூாந்து வருகின்ற தாற்றஞ்சை வாணனவென்றிச்
சிலைதொடுத் தாஙகெழில சோநத லாயபயில செமபழுக்காய்க்
குலைதொடுத தோஙகுபைங கேழ்பபூக நாகக் குழாஙகவாநதே.

இ - ள். தஞ்சைவாணன வெற்றி சிலைதொடுததாறபோலும அழகு சேர்ந்த நுதலையுடையாய! பிறைககோடு கீணடக் கிழிந்த இறாற்றொகுதி கள் தஙகிய தேனனது ஒரு முகமாய வாராது பலகாலகொணடு பெரிய மலையுசசி தொடுத்துக்கடநது நெருஙகிச சிவாது பழுககாயக் குலைவைத தோங்கப்பட்ட பசிய நிறததையுடைய பூகக்குழாததையும நாககக்குழாததை யுங கவாநது வருகின்றது நீ காணபாயாக. எ - று.

கலை - பிறைக்கோடு. தொடுதல - கீணடுதல. கருவி - தொகுதி. தொடுதது - தொடஙகி. நாகம - புனனை. குழாம் என்பது பூகத்துடனுங கூட்டுக. கவாதல் - கொள்ளுதல. (௧௧அ)

**பாங்கி யிறையோற்கண்டமை பகர்தல்.**

பாஙகி யிறையோற் கண்டமை பகாதல எ - து. பாஙகி தலைவன் நின்வயத்தனாக வநதவதனைக் கணடமை பகாதல.

திவாகர னேயன்ன பேரொளி வாணனறென மாறைநன்னாட்
டுவாமதி போலு மொளிமுகத் தாயென் னெளிபபதுாமேல
அவாவின னாகியொா மானை வினவிவந தானையின்றிக்
கவானுயர் சோலையின வாய்வணட லாருழைக் கணடனமே

இ - ள். ஆதிததனையொத்த பேரொளிவாணன் தெனமாறை நாட்டு வாமதிபோலும ஒளிமுகததாய்! நீ யொளிததுச் சொல்வது யாது கார

‡ தொல சொல, எசசவியல, சூ. ௬௩

ணம்? உன்மேல் ஆசைகொண்டவனாகி ஓயாமனே வினைவிளைந்தவனை இப்போது இந்தத் திரளாயுயர்ந்த சோலையிடத்து விளையாடும் வண்டலயபானவ பொருந்திய விடத்து யாங்கண்டனம். எ - று.

உலகத்தில் கலி இருளமாற்றுந் தன்மையால் ' திவாகரனேயன்ன எனக்கூறியது.

ஒளி - கீர்த்தி. உவாமதி - பூரணமதி. ஒளிர்தல் - விளங்குதல். கவரன் - திரட்சி. " மாயோனன்ன மாலவனைக்காவான் " என்றார் பிறரும். வண்டல் - ஆகுபெயர். ' வண்டலாடுமை ' என்றும் பாடமோதுவாருமுளர். (௧௧௯)

**பாங்கியைத் தலைவி மறைத்தல்.**

(இது வெளிப்படை.)

செவ்வண்ண வேலவிழி யாய்தஞ்சை வாணனறென் மாறைநன்னா
டிவ்வண்ண நீசொலவ் தேறபதன ருனின னிடையெனத்தா [ட்.
மெய்வண்ணம் வாடி வெறிதே வருந்தி விருந்தினராய்க்
கைவண்ண வாரதழை கொண்டுசென் றூர்தழை கண்டுகொண்டே

இ - ள். செவ்வண்ணமாகிய வேலபோன்ற விழியினையுடையாய்! தஞ்சைவாணன தென்மாறை நன்னாட்டில், நின்னிடைபோல வாடிப் பயனின்றி வருந்தி, நம்புனத்திற்குப் புதியோராய்க் கையிலே யழகிய நெடிய தழையைக் கொண்டுவந்து போனார் தம்மைக் கண்டுகொண்டு, இவ்வண்ணம் நீ சொலவ் தேறபதன்று. எ - று.

செவ்வண்ண வேல - பகை வருடற குருதிதோய்ந்த கொடிய வேல். ஆல் - அசைநிலை. இவ்வண்ணம் - இவ்வாறு. வெறிதே - பயனின்றியே. விருந்தினர் - புதியோர். வண்ணம் - அழகு. கண்டுகொண்டு - அடுக்கு மொழி. (௧௨௦)

**பாங்கி யென்னை மறைப்பதென்னெனத் தழால்.**

பாங்கி * * * தழால் எ - து. இவ்வாறு மறைத்துக் கூறிய தலைவியை உனக்குநான் வேறோவென்று உவகையாய்த் தழுவிக்கொண்டு கூறல்.

---

பரக்கின்ற செவ்விதழ்ப் பங்கயப் பாதம் பணிந்துநின்னை
இரக்கின்ற தொன்றையு மெண்ணலை யாலெழு பாரமுழுதும்
புரக்கின்ற கோனறஞ்சை வாணன பொதியிலிற் பொய்தனெனைநீ
கரக்கின்ற தென்னைகொ லென்னுயி ராகிய காரிகையே.

இ - ள். ஏழுலகு முழுதுங் காக்கின்ற வேந்தாகிய தஞ்சைவாணனது பொதியமலைக்கண் எனக்கு உயிராயிருக்குங் காரிகையே! செவ்விதழ்

பரக்கின்ற பங்கயம்போன்ற பாதத்தைத் தொழுது யானின்னை யிரக்கின்ற தொன்றையு மெண்ணலையாய! உண்மையை நீக்கி யென்னை மறைப்ப தென்னோ? எ - று.

ஆல் - அசை. புரத்தல் - காத்தல். பொய்த்தல் - உண்மை நீக்கல். காத்தல் - மறைத்தல். கோல் - ஐயம். 'தஞ்சைவாணன் பொதியில் என்னுயிராகிய காரிகை' எனவும், 'செவ்விதழ பரக்கின்ற' எனவும் மாறுக. வருந்துழி வருந்தியும், மகிழ்ந்துழி மகிழ்ந்தும், இறந்துழி இறநதும் இயைவதாதலின் 'எனனுயிராகிய காரிகை' என்று கூறினார். (கஉக)

**பாங்கி கையுறை புகழ்தல்.**

(இது வெளிப்படை.)

சூடத் தகுவன வல்லவெல லாமபடி சொல்லி னுந்தாம்
வாடத் தகுவன வலலநலு லாய்தஞ்சை வாணன் வெற்பர்
தேடத் தகுவன வல்லதல் லாத சிலம்பினுள்ளார்
நாடத் தகுவன வலலகல் லார நறுந்தழையே.

இ - ள். நல்லாய்! உலகமெல்லாஞ் சொல்லினுஞ் சொல்லா தொழியி னும் மலையிடத்துத் தோன்றிய இச்சந்தன நறுந்தழை சூடததகுவன வல் லது, தாம் வாடத்தகுவனவல்ல; அன்றியும, தஞ்சைவாணன் வெற்பர் தேடததகுவன வலலதல்லாத மலையினுள்ளார் நாடததகுவனவல்ல. எ - று.

'படியெல்லாம்' எனமாறுக. 'சொலலினும்' என்புழி உம்மை எதிர் மறையாகலின் 'சொல்லாதொழியினும்' என்பது வருவிக்கப்பட்டது. 'அல்லது' என்பது அஃறிணைப் பன்மைவினைக் குறிப்பு முற்றுச்சொல. நாடல் - கருதல். கல் - மலை. ஆர நறுநதழை - சநதனததழை (கஉஉ)

இவற்றுள் பாங்கி கூற்றுயினவெல்லாம் குறைநயப்பித்தற்கும்,
தலைவி கூற்றுயினவெல்லாம் மறுத்தற்கும்
உரியவா றுணர்க.

**தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல்.**

தோழி கிழவோன் துயர்நிலை கிளத்தல் எ - து. பாங்கி தலைவனது வேட்கையால கொண்ட துயர் நிலையைத தலைவிக்குக் கூறல்.

---

வனையுங் குழல்வஞ்சி வாணன்றென் மாறை வரைக்களிறு
தினையுந் தழையும் பிடியொடு மேய்ந்து தெளிந்தவின்னீர்
சுனையுண்ட சோக நிழற்சோக நீங்கித் துயில்வதுகண்
டெனையுங் கடைக்கணி யாவினை யாநிற்ப சோதிலமோ.

இ - ள். அலங்கரிக்குங் கூந்தலையுடைய நம்புனத் தயலாராய் வந்தோர் வாணன் தென்மாறை வரையிடத்துக் களிறுபிடியொடு இணையுந் தழையுமேய்ந்து,சுனையிடத்துத் தெளிந்த இனிய நீரையுண்டு,துன்பம் நீங்கி, அசோகமரத்து நிழலின்கீழ்த் துயில்வதனைப்பார்த்து, என்னையுங் கடைக்கண்ணால் நோக்கி வருந்தாநிற்பர். எ - று.

'வஞ்சியயலார்' எனவும், 'களிறுபிடியொடு' எனவும், 'சுனைத் தெளிந்த விண்ணீர்' எனவும், 'உண்டு சோகநீங்கி' எனவும் மாறுக. வனைதல் - அலங்கரித்தல். வஞ்சி - அண்மைவிளி. இனையாநிற்பர் - வருந்தாநிற்பர். எதிலா - அயலார். கடைக்கணித்தல் - கடைக்கண்ணானோக்குதல். 'பிடியொடு துயிலுங் களிற்றைக்கண்டு என்னையும் நோக்காநிற்பர்' எனவே நீ இதனை யறிந்திலையெனக் குறிப்பால் அறிவித்தவாறாயிற்று. (கஉங)

மறுத்தற் கருமை மாட்டல்.

மறுத்தற் கருமைமாட்டல் எ - து. இவ்வாறு கூறிய சொற்கட்கு விடையின்மையால், இனி அவர்வரின் எனனால் மறுத்தற் கரிதெனப் பொருந்திக் கூறுதல். மாட்டல் - பொருத்துதல்.

---

கையுந் தழையுமுன் காண்டொறுங் காண்டொறுங் கட்டுரைத்த
பொய்யுந் தொலைந்தன பூந்தழை போலரி போர்த்துநஞ்சும
மையுங் கலந்துண்ட வாள்விழி யாய்தஞ்சை வாணனவெற்பா
மெய்யுந் துவண்டதென னான்முடி யாது வெளிநிற்கவே.

இ - ள். செவ்வரியைய மேற்கொண்டு நஞ்சும் மையுங் கலந்துண்ட வாள்போல் விழியுடையாய்! இவ்வனத்திலுள்ள மாந்தழைகளெல்லாம் நமக்குக் கொண்டுவந்து கொண்டுவந்து வாடியெறிதலால, அப் பூந்தழைகள் தொலைந்தாற்போல, வாகையுந் தழையும் எதிரே காணுந்தோறும் காணுந்தோறும், யான் உறுதிசசொலலா யுரைத்த என்னிடத்தி லுண்டான பொய் யெல்லாந் தொலைந்தன, அன்றியும், தஞ்சைவாணன் வெற்பர் மெய்யும் அலைந்தலைந்து துவண்டதாதலால், இனியவர்வரின் வெளியாய் நிற்க என்னால் முடியாது. எ - று.

எனவே, — அவர் வரின் மறையவேண்டு மென்பதாயிறறு. கட்டுரைத்தல் - உறுதிச்சொற்கூறுதல். அரி - செவவரி. (கஉச)

தலைவன் குறிப்பு வேறாக நேறிப்படக் கூறல்.

தலைவன் குறிப்பு வேறாக நெறிபடக் கூறல் எ - து. தலைவனென்னுங் குறிப்பு நம்பக்கல் இரப்பவன்போற் றோற்றவில்லை, வேறுங்கினைப்பானாகத் தோன்றியதென்று ஒழுங்குபடக் கூறுதல.

விடையான் மிசைவரு மேருவில் லானொடு மேழிவென்றிப்
படையா னொடும்வெம் பகைகொள்வ தோபகல் போலுமெய்ம்மை
உடையா னுயர்தஞ்சை வாணனொன் றானொ னொல்கிய நுண்
இடையாய் பிறிதுகொ லோவறி யேன்வெற்ப னெண்ணுவதே.

இ - ள். நடுவுநிலைமையையும் வாய்மையையு முடையான எல்லார்க்கும் புகழாலுயர்ந்த தஞ்சைவாணனுக்கு ஒன்னாரைப்போல் துவண்ட நுண்ணிய இடையையுடையாய! வெற்பன் எண்ணுவது விடையான்மேல்வருந் தன்மையையுடைய மேருவில்லானோடும், மேழியைத் தனக் குறுப்பாக வுடைய வெற்றிப்படையை யுடையானோடும் வெய்ய பகைகொள்வதோ! பிறிதோ! அறியேன்! எ - று.

விடை - இடபம் விடையான் - பண்புத்தொகை. மேருவில்லான் - சிவன். மேழிவென்றிப்படை - கலப்பை. உடையான் - பலதேவன். சிவனுடன் பகைகொள்ளுதல் - எருக்கமாலை யென்புமாலை யணிதல். பலதேவனொடு பகைகொள்ளுதல் - பனையைவெட்டுதல. பனையவனுக்குக் கொடியெனவே மடலேறுங் குறிப்புத்தோன்றியது. 'பிறிது'என்பதனால் வரைபாய்தல் கொள்க. பகல் - நடுவு நிலைமை. போலும் - அசைநிலை. ‡"ஒப்பில் போலியு மப்பொருட் டாகும்" என்பதனாலறிக. மெய்ம்மை - வாய்மை. கோல் - ஐயம், ஓகாரம் - அசைநிலை (கஉரு)

## தோழி தலைவியை முனிதல்.

(இது வெளிப்படை.)

தூற்றுந் தலைமறைப் பவாகக் கேகுறை சொல்லுகுற்றம்
ஏற்றுத் தொழியென்னை யெம்பெரு மாட்டிசென் றேற்றவற்கு
மாற்றுந் தருள்செங்கை வாணன்றென் மாறையில் வந்துநெஞ்சம்
போற்றுது நின்றய லேன்சொன்ன தீங்கு பொறுத்தருளே

இ - ள். எம்பெருமாட்டி! தூற்றுந் தலைமறைக்கின்ற நினக்கு உண்மையானவற்கே நின் மனக்குறையைச் சொல், என்னைக் குற்றமேற்றுது விடு, சென்றேற்றவாக்கு இல்லையென்றது கொடுக்குஞ் செங்கையையுடைய வாணன் தென்மாறைநாட்டில், நின் பக்கத்தில் வந்து நெஞ்சத்தைக் காவாமல், அயலேனாகிய யான் அறியாமற் சொன்ன குற்றத்தைப் பொறுத்தருள்வாயாக. எ - று.

'என்னைக் குற்றம்' எனவும், 'வந்து நின்று' எனவும் இயையும். போற்றுது - காவாது. (கஉசு)

## தலைவி பாங்கியை முனிதல்.

தலைவி பாங்கியை முனிதல் எ - து. பாங்கியை முனிந்து தலைவி தன்னுட் கூறல்.

---

‡ தொல். சொல். இடையியல், சூ. ௩0.

மற்றத் தவாவினை வார்தஞ்சை வாணன் வரையின்முந்நாள்
பொற்றேரின் வந்து புணர்ந்துசென் றார்தம் பொருட்டுநம்மைக்
குற்றேவல் மங்கை குறையிரந் தாளெனுங் குற்றமிந்நாள்
எற்றே தவறுநம் பாலில்லை யாகவு மெய்தியதே

இ - ள். தஞ்சைவாணன் வரையில் மூன்றுநாள் பொற்றேரினில் வந்து புணர்ந்து சென்றார், அவர் மற்றேது நினைவார், அவர் தம்பொருட்டு நம்மைக் குற்றேவல் மங்கையாகிய இவள் குறையிரந்தாளென்னுங் குற்றம் இந்நாள் நம்பக்கலில்லை யாகவுந் தவறெய்துவது எத்தன்மைத்து?

மற்று - அசைநிலை. 'எதை' என்புழி இரண்டனுருபு தொக்கது. முந்நாள் - மூன்றுநாள். அவையாவன,— இயற்கைப் புணர்ச்சி, இடந்தலைப்பாடு, பாங்கற்கூட்டம் என்பன. 'தம்பொருட்டு' என்புழி 'அவர்' என்னுஞ் சுட்டுப்பெயர் வருவிக்க. 'அவர் மற்றேது நினைவார்' எனவும், 'இந்நாள் நம்பால்' எனவும், 'தவறெய்தியதோ' எனவும் இயையும். (கஉஎ)

## தலைவி கையுறை யேற்றல்.

(இது வெளிப்படை.)

ஆற்றுந் தலைவ ரருந்துய ராற்றினு மாற்றிலனுண்
மாற்றும் புனையின் மயிலனையாய் தஞ்சை வாணன்றெவ்வின்
போற்றுங் கொடுவினை யேன்புனை யாவிடிற் போந்தலரோ
தூற்றுந் தழையென்றி தொன்றிங்ங னேவந்து தோன்றியதே.

இ - ள். மயில்போல்வாய்! தஞ்சைவாணன் பகைபோல மிக்காயக் கூறுங் கொடிய வினையேன் அணிந்தேனாயின் நாணை மாற்றும், அணியாது நடுத்தேனாயின் எங்குஞ்சென்று அலரையே தூற்றும், தழையென்று பெயரிட்டுக்கொண்டு இஃதொன்று எவ்விடத்திலேயிருந்து இவ்விடத்திற் றோன்றியது! முன் நலவினையாற்றுந் தலைவர் அரிய வேட்கையை ஆற்றல்செய்யினும் யானாற்றலன். எ - று.

எனவே,— தலைவி கையுறை வாங்கினளாயிற்று என்க —

“நலவினை யாற்று முயர்நாண மாற்றுமலர்
தூற்றலினால் வந்த துயர்.”

இன் ஐந்தனுருபு ஒப்பின்கண்வந்தது. போற்றல் - மிக்காயக்கூறல். யான் என்பது தோன்றா எழுவாய். தெவ்வு - பகை. (கஉஅ)

இவற்றுள் பாங்கி கூற்றாயினவெல்லாங் குறைநயப்பித்தற்கும், தலைவி கூற்றாயினவெல்லாங் குறை நேர்தற்கும் உரித்தாயினவாறு காண்க.

## இறைவி கையுறையேற்றமை பாங்கி இறைவற்குணர்த்தல்.

(இது வெளிப்படை.)

போயியா னளித்தலுங் கைகுவித் தேற்றபின் போற்றியன்பால்
சாயாத கொங்கையின் மேலணைத் தாடஞ்சைவாணன்வெற்பா
காயா மலரன்ன மேனிமெய் யாகநின் கையுறையே
நீயாக வல்லது மாநதழை யாக நினைந்திலளே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பனே! நீ தந்த கையுறையை நான் போய்க்கொடுத்தலுங் கைகுவித்து ஏற்றாள், ஏற்றபின் அன்பினால மிகவும் புகழ்ந்து கூறி எஞ்ஞான்றுஞ் சாயாத கொஙகையின்மே லணைத்தாள், அணைத்துக் காயாமபூவையொத்த நிறத்தைப் பொருந்திய மெய்யாகத்தை யுடைய நீயாக நினைத்தாளலலது மாநதழையாக நினைந்திலள். எ - று.

எனவே, — நீ வந்துழி நிகழும் உபசாரம் யாவையுந் தழையினிடத்து நிகழ்ந்ததென்று கூறியவாறாயிற்று. 'யான்போய்' எனவும், 'அன்பினாற் போற்றி' எனவும, 'மெய்யாகம நீயாக' எனவும் மாறுக.

அளித்தல் - கொடுத்தல. போற்றி - புகழ்ந்து. மெய்யாகம் - பண்புத்தொகை. மேனி - நிறம். (௧௨௯)

## பாங்கி தலைமகற்குக் குறியிடங் கூறல்.

(இது வெளிப்படை.) குறியிடம - பகலிற கூடுமிடத்தடையாளம்.

அணிமா மலாமயி லைப்புயத் தூணங்கொ ளாகமெனும
மணிமா ளிகைவைதத வாணனவண் காவலன் மாறைவெற்பா
துணிமா மரகதப் பாசறை வேலைச் சுடரவன்போல்
பணிமா மணிதிக ழும்பகல் யாங்கள் பயிலிடமே.

இ - ள். அழகாகிய மா வென்னும் பெயரையுடைய திருமகளைப் புயமெனனுந் தூண்களையுடைய மார்பெனனும் மணிமாளிகையில் வைத்த வாணனாகிய வேந்தனது மாறைவெறபனே! பகற்காலத்தில் யாங்கள் விளையாடுமிடம பெருமையுடைய மரகதத் துண்டங்களபோன்ற குருக கத்தியிலையாற் பச்சைநிறமபொருநதிய முழைபினிடத்தே கடலிடத்துக் கதிரோன்போல நாகமாணிக்கஙக ளொளிவிடும். எ - று.

மலர்மயில - திருமகள். ஆகம் - மாரபு. 'தூணம்' என்புழி அம் பகுதிப்பொருள் விகுதி. 'மாமரகதத்துணி' என மாறுக. பாசறை - பசிய குருக்கத்தியிலையாற் செறிந்த முழை. 'குருக்கத்தி' யென்று செய்யுளிற் கூறிய திலலையாலெனின், மேல்வருங் குறியிடத்து 'இறைவியைக் கொண்டு சேறல்' என்னுங் கிளவிச்செய்யுளில் 'பூமாதவிப்பந்தர்' என்று கூறினமையானும், மேற்சொன்ன குறியிட மூன்றுங் குருக்கத்தி

யென்று உய்த்துணர்ந்துகொள்ளக் கிடந்தமையானும், ஈண்டு 'குருக்கத்தி' யென்று வரைவிலக்கப்பட்டது.

துணி - துண்டம்; ஆகுபெயர். மாமணி - மாணிக்கம். திகழ்தல் - ஒளிவிடுதல். பாசறை கடற்கும், மாணிக்கம் கதிரோனுக்கும் உவமையாதலின் பண்புவமம். 'மலர்மயிலை மாபில்லைத்த வாணன்' எனவே பூவை நிலை. பயில்விடம் - ஈண்டு விளையாடுமிடம். (கக0)

பாங்கி குறியிடத்திறைவியைக் கொண்டு சேறல்

(இது வெளிப்படை.)

நாமாவி மூழ்கி நறுமலர் குற்றுநந் தாவனத்துத்
தேமா விளந்தளிர் செவ்வணங் கொய்து சிலம்பெதிர்கூய்
வாமா நெடுங்கண் மடநகைநல் லாய்தஞ்சை வாணன்வெற்பிற்
பூமா தவிப்பந்தர் வாய்விளை யாடுகம் போதுகவே.

இ - ள். தாவுமான்போல நெடியகண்ணையுடைய மடநகைநல்லாய் தஞ்சைவாணன் வெற்பில் நாம வாவியினிடத்து மூழ்கி, நறிய மலர்களைக் கொய்து, நந்தவனத்துச் செவ்வண்ணமாகிய தேமாவினது இளந்தளிரைக் கொய்து, சிலம்பெதிர் கூவி, பூவொடு கூடிய குருக்கத்திப்பந்தரின் விளையாடுவோம், செல்வாயாக. எ - று.

ஆவி - வாவி. குற்று - கொய்து. வாமான் - தாவுமான். மாதவிப் பந்தர் - இணைப்புணர்த்தயலில் சோலையில் மாதவி படர்ந்து மலர்ந்து நாற்றம் வீசச் சுற்றும் புதல் சூழ்ந்து அகத்திருந்தோர் புறத்தில் வருவோர்க்குப் புலனாகாத மறைவு வாய்த்திருப்பதோரிடம். (ககக)

பாங்கி தலைமகளைக் குறியிடத்துய்த்து நீங்கல்.

(இது வெளிப்படை.)

கண்சாயல் கையுருக் கொண்டுதன் வேன்மயில் காந்தள்வள்ளி
எண்சாய வென்றனை யென்றுசெவ் வேளிவ ருமபவளம்
வண்சா யொசிக்கும் வயற்றஞ்சை வாணன் மலயமராத்
தண்சாயை நின்றணங் குந்தைய னீயிற்க சாரலிலே

இ - ள். தையலே! கண்ணுஞ் சாயலும் கையும் உருவுங் கொண்டு, தனது வேலும் மயிலும் காந்தளும் வள்ளியும் ஒப்பிலவென றெண்ணிய முருகவேளின் எண்ணத்தைத் தாழ்வுபடவென்று, அணையால் ஏறிப்படரும் பவளம் வளவிய கோனாயை யசைக்கும் வயலையுடைய தஞ்சை வாணன் மலையத்தினிடத்து, மராமரத்து தண்ணிய நிழலிலே நின்று, என்னுடன் நீ வந்தாயாகில், நின்னை அம் முருகவேள் வருத்துமாதலால், இச் சாரலில் இவ்விடத்திலே நிற்பாயாக வென்று பாங்கி யகன்றாள். எ - று.

எண்ணும்மை தொக்குநின்று நிரனிறைப்பொருள் வந்தவாறுணர்க. இவர்தல் - ஏறுதல். சாய - கோரை. ஓசிந்தல் - அசைத்தல். சாயை - நிழல். சாரல் - மலைப்பக்கம். (கஈஉ)

## இறைவி யிறையோனிடத் தேதிரீப்படுதல்.

(இது வெளிப்படை.)

முயங்கிய நூபுரப் பங்கயத் தாளு முலைசுமந்து
தயங்கிய நுண்ணிடை தானுமென போலத் தளாவுறுமிங்
கியங்கிய வாறென மனத்திரு ணீக்கவென் றேதுணிந்தோ
வயங்கிய சீருடை யானவாணன் மாறை மணிவிளக்கே.

இ - ள். விளங்கிய புகழையுடையோனாகிய வாணன் தென்மாறை நாட்டு மணிவிளக்குப் போல்வாய்! நூபுர முயங்கிய பங்கயம்போன்ற தாளும், முலையைச் சுமந்து தள்ளாடிய நூல்போன்ற விடைதானும் என்னைப்போலத் தளாவுறும், இவ்விடத்துச் சஞ்சரித்தவாறு என் மனத்துன் பத்தை நீக்கவென்று துணிந்தோ? சொல்வாயாக எ - று.

'நூபுரமுயங்கிய பங்கயத்தாள்' என இயையும். நூபுரம் - சிலம்பு. தயங்கல் - தள்ளாடல் இயங்கல் - சஞ்சரித்தல். ஏகாரம் - ஈற்றசை. ஓகாரம் - வினா. வயங்குதல் - விளங்குதல். சீர் - கீர்த்தி. விளக்கு - ஆகுபெயர். தலைவியை விளக்கு என்று கூறினமையான் மனத்துன்பத்தை இருள் என்றுகூறியது இருள் - ஆகுபெயர். (கஈஈ)

## புணர்ச்சியின்மகிழ்தல்.

(இது வெளிப்படை.)

தருந்தாரு வஞ்சுங் கொடையுடை யானற்றஞ்சை வாணனின்சொல
செருந்தார பசுந்தமிழ்த் தென்வரை மேற்செம்பொன் மேருவெற்பா
கருந்தாரை நஞ்சுமிழ் வாசுகி யாலவெண் கடல்கடைந்து [ல
வருந்தா வமுதளித் தாள்வல்ல ளாமிம் மடக்கொடியே

இ - ள் கேட்டவை பலவுந்தருந் தாருமஞ்சப்பட்ட கொடையை யுடையானாகிய தஞ்சைவாணன் இனிய புகழையும், செருந்திமரச்சோலையும், பசிய தமிழையுமுடைய பொதியமலைமேல், செம்பொன் மேருவெற்பால், கரிய தாரையாய நஞ்சை யுமிழப்பட்ட வாசுகியென்னும் பாம்பால், வெண்மை நிறம்பொருந்திய கடலைக் கடைந்து, வருந்தாத அமுதை யளித்தாளாதலால், இம்மடக்கொடி வல்லளாம். எ - று.

தருந்தாரு - கற்பகம். தென்வரை - பொதியமலை, தாரை - நீர்வரும் வழி, சலதாரை என்றாற்போல. வாசுகி - கடல்கடைந்த பாம்பு. வெண்

கடல் - பாற்கடல். இவ்வாறு வருத்தப்படாமல் அமுதம் ஈந்ததனால் வல்லன்' என்று கூறியது. வல்லன் - உயர்திணை யொருமைவினைக் குறிப்புமுற்று. (௧௯௪)

புகழ்தல்.

(இது வெளிப்படை)

மயனார் விதித்தன்ன மாமதில் சூழ்தஞ்சை வாணன் வெற்பில்
பயனார் பயோதரப் பாவையன் னீர்பசும் பொற்குழைதோய்
நயனார விந்தத்து நஞ்சுநும் வாயிதழ் நல்லமுதம்
அயனார் படைத்தில ரேலடங் காதவ் வரனுக்குமே

இ - ள். தெய்வத்தச்சனார் விதித்ததுபோன்ற அரிய செயலாகிய பெரிய மதில்சூழ்ந்த தஞ்சைவாணன் வெற்பில் இன்பப் பொருளார்ந்த முலையையுடைய சித்திரப் பாவைபோல்வீர்! பசிய பொன்னாற் செய்த குழையைத்தொடும் நயனமாகிய தாமரையிலிருக்கும் நஞ்சான தடங்குமாறு, நும் வாயிதழ்படு நல்லமுதம் அயனார் படையாமற் போனாராகில், முன்பு கடலிற்பிறந்த நஞ்சையடக்கிய அவ்வரனாலும் அடங்காது. எ - று.

பயன் - இன்பப்பொருள். பயோதரம் - முலை. தோய்தல் - தொடுதல். 'நயனாரவிந்தம்' - ஏகதேசவுருவகம். இதழமுதமுண்டு விடந்தணிந்தானாதலால் இவ்வாறு கூறியதென்றுணர்க. மயன் - தெய்வத்தச்சன். ()

தலைமகளைத் தலைமகன் விடுத்தல்.

தலைமகளைத் தலைமகன் விடுத்தல் எ - து. தலைமகளைத் தலைமகன் ஆயக்கூட்டத்திற் செல்லவிடுதல்.

---

நேயம் புகல்விட மின்றிநின் பால்வந்து நின்றதுபோல்
ஆயம் புகல்வ டைந்தருளி யடை யாதமன்னர்
வாயம் புகவில் வணக்கிய வாணன்றென் மாறைநன்னீர்
தோயம் புகரிணை வேல்விழி யாயநின் றுணையுடனே.

இ - ள். சரணென்றுவந்தடையாத பகைமன்னரிடத்து அம்புகளுந்திரவில்லைவளைத்த வாணன் தென்மாறைநாட்டுள்ள நல்லநீரிலே தோய்தலுப் பதனுஞ்செய்த பழகிய புகர்நிறத்தையுடைய இணைவேல்போலும் விழியாய்! நீ யன்புசொல்வதற்கிடமில்லா நின் பக்கலிலேவந்து நின்றதுபோலச் சூழப்பட்ட ஆயக்கூட்டந் தங்களன்பைச் சொல்லத்தக்கதாக நின் பாங்கியுடனே நீயடைந்தருள்வாயாக. எ - று.

நேயம் - அன்பு. நேயம் புகல்வதற்கு இவள்போலும் வேறொருவரின்மையால், இவளிடத்து வந்து சூழ்ந்ததுபோலு மென்று கூறியவாறுணர்க. வாய் - இடம். அம்புக - அம்புதிர. புகர் - இரத்தக்கறை. (௧௯௬)

பாங்கி தலைவியைச் சேர்ந்து கையுறை காட்டல்.

பாங்கி * * * காட்டல் எ - து. குறியிடத்து நிறுத்திப்போயின பாங்கி தலைவன் போயினபின் தான் கையுறைக்குப் போயின பாவனையாய்க் கையுறைகொண்டுவந்து காட்டல்.

---

பொய்போ லிடைநின் விழிபோற் குவளையும் போதிவைநின்
மெய்போ லசோக மிளிர்பூந் தழையிவை மெல்லியனின்
கைபோற் கவின்கொளசெங் காந்தளம் போதிவை கண்டருள்யான்
மைபோற் குழலிதஞ் சைவா ணன்வரை யினின்றே.

இ - ள். மையை யொக்குங் குழலையுடையாய்! தஞ்சைவாணன் வரையினின்று யான் நினக்குத் தந்தேன். பொய்யையொக்கு மிடையாய்! நினது கண்களையொக்குங் குவளைப்போதிவை; நினது மெய்யைப்போ லொளிவிடும் அசோகப்பூந்தழை இவை; மெல்லிய இயலையுடைய நினது கையைப்போ லழகுகொண்ட செங்காந்தட்போது இவை: நீ கண்டருள்வாய். எ - று.

மிளிர்தல் - ஒளிவிடுதல். கவின் - அழகு. மை - மேகம், 'பொய் போலிடை,' 'மைபோற் குழலி' என இரண்டு முன்னிலை வந்தவாறு காண்க. 'தஞ்சைவாணன் வரையின் யான்' என மாறுக. அம் மூன்றுஞ் சாரியை. (கசுஎ)

தலைவியைப் பாங்கிற் கூட்டல்.

(இது வெளிப்படை.)

குனிநாண் மதிநுதற் கோகில மேநின் குழலிலெல்லாப்
பனிநாண் மலரும் பறித்தணிந் தேனிந்தப் பாமடந்தை
தனிநா யகன்றஞ்சை வாணன்றன் சாரற் றனித்துநில்லா
தினிநா மகன்றிளை யார்விளை யாடிட மெய்துதுமே.

இ - ள். வளைந்தநாட்கொண்ட மதிபோன்ற நுதலையுடைய கோகிலமே! நினது குழலினிடத்தில் வனத்திலுள்ள முறுக்கவிழ்க்கின்ற மலரனைத்தும் பறித்தணிந்தேன், இந்த பூமடந்தைக் கொப்பற்ற நாயகனான தஞ்சைவாணனது குளிர்ந்த மலைச்சாரலிடத்துத் தனியாய் நில்லாது இவ்விடத்தினின்று மகன்று, இப்போதிளையார் விளையாடுமிடத்தை யாமெய்துவோம். எ - று.

குனிநாண் மதி - பிறை. 'மதிநுதற் கோகிலம்' என்றது சிறப்புருவகம். தனி - ஒப்பின்மை. நாண்மலர் - முறுக்கவிழ் மலர். (கசுஅ)

## நீங்கித் தலைவற் கோம்படை சாற்றல்.

நீங்கித் * * * சாற்றல் எ - து. தலைமகளை யாயத்திற் கூட்டி மீண்டு வந்து தலைவற்கு ஓம்படைசாற்றல். ஓம்படை - மறவாமை.

---

சின்னாண் மலர்க்குழல் காரணமாச் செவ்வி பார்த்துழன்று
பன்னா ளுரைத்த பணிமொழி நோக்கிப் பழிநமக்கி
தென்னா திடைப்பட்ட வென்னிலை நீமற வேலிறைவா
தன்னாக மெய்ப்புக ழான்றஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

இ - ள். இறைவனே! தன்னாகத்தை மெய்ப்புகழாய் நிறுத்தின தஞ்சைவாணன் தமிழ்வெற்பிடத்துச் சில நாண்மலரை யணிந்த குழலை யுடையாள் காரணமாக, அவளது பதம்பார்த்து வருத்தப்பட்டு, நேற்று மின்றுமாகிய பலநாளுரைத்த தாழ்ந்த மொழியைக் கருதி, நமக்கிதுபழி யென்று சொல்லாது, நுமயிருவர்க்கும் நடுப்பட்ட என்னிலைமையை நீ மறவா திருக்கக்கடவை. எ - று.

செவ்வி - காலம். உழன்று - வருந்தி. பணிமொழி-தாழ்ந்தமொழி. தன்னாகம் - தன்னுடல். இரண்டோரெண்பதனைப் பன்னாளென்று கூறிய தென்னையெனின், ஒன்றல்லனவெல்லாம் பலவென்பது தமிழ் நடையாக லின் கூறியவாறென்றுணர்க. (கஙக)

## உலகியன் மேம்படவிருந்து விலக்கல்.

உலகியன் மேம்பட விருந்து விலக்கல் எ - து. உற்றார் அயலூரின் விருந்துவந்தால், அவர்க்கு ஊண்கொடுத்து உபசாரஞ்செய்தல் உலகியல்பாத லால், அவ்வுலகியல் பெருமைப்படத் தலைமகனை எம்மூர்க்குவந்து இருந்து போமெனக்கூறிப் பகற்குறியை விலக்கல்.

ஆயின், விருந்தென்பது உண்டிக்குப் பெயரோவெனின், விருந்து என்பது புதுமை, உலகின்கண் மருவி ஊண்மேனின்றது. என்னை, ஒருவன் ஒருவற்கு விருந்து கூறினனெனின், ஊண்கூறினனென்பதல்லது புதுமை கூறினனென்னும் பொருள்படா தாதலான், விருந்தென்றது ஊணென்றே கொள்க.

---

வலைப்பெய்த மான்றசை தேன்றோய்த் தருந்தி மனைமுலைப்பால்
உலைப்பெய்த வார்தினை மூரலு முண்டுளங் கூருவகைத்
தலைப்பெய்த நாளினை யான்றஞ்சை வாணன் சயிலத்தெமதூர்
இலைப்பெய்த தாழ்குரம் பைத்தங்கி னுமக் கென்வருமே.

இ - ள். தலைவரோ! வலை சுற்றுமிட்ட மானினது தசையைத் தேனிற் றோய்த்து அருந்தி மனை முலையினின்றும் பாலினை யுலையாகப் பெய்து அட்டவெடுத்த தினைச்சோற்றை யுண்டு, உளத்தின் மிகுந்த வுவகை

வந்துகூடிய நாள்போன்றவனாகிய தஞ்சைவாணன்வரையிடத்து,எம்மூரில் இலையான் மேய்ந்த குடில்வீட்டுள் தங்கினால் உமக்கியாது குறைவரும்?

உலைப்பெய்த - உலையிற்பெய்த. வார்தல் - வடித்தல். சூரல் - சோறு. தலைப்பெய்தல் - கூடுதல். "ஆங்கவ ணவ்வகை தலைப்பெய்யன் மரபே" என்பதனானுணர்க. என்வரும் - யாதுகுறைவரும். இங்ஙனங்கூறியது இரவுக் குறியை நாடிப் பகற்குறியை விலக்கிய கருத்தென்றுணர்க. எனவே,— தினைவிளைந்தால் நாளைத் தினையறுத்து இவள் ஊர்க்குப்போதலால், தலைவனையும் ஊர்க்குவாவென்றுகூறி, வந்தால் இரவுக்குறியிற் கூட்டிவிப்பே னென்னுங் குறிப்புத் தோன்றக் கூறியதன்றி விருந்து கூறியதன்றென வுணர்க. தலைவன் - முன்னிலை யெச்சம். (௧௫௦)

**விருந்திறைவிரும்பல்.**

விருந்திறை விரும்பல் எ - து. அதனைக்கேட்ட தலைவன் விரும்பிக்கூறல்.

---

மஞ்சூட்டி யன்ன சுதைமதில் சூழ்தஞ்சை வாணன்வெற்பில்
பஞ்சூட்டி யமென் பதயுகத் தீருங்கள் பாடியின்மான்
வெஞ்சூட் டிழுதன்ன வூனும்பைந் தேனும் விருந்தினர்க்குச்
செஞ்சூட் டிளங்குபொன் போற்றினைச் சோறுந் தெள்ளமுதே

இ - ள். முகிலை யருந்தியது போன்ற சுதைபூசிய மதில் சூழ்ந்த தஞ்சைவாணன்வெற்பில் பஞ்சைப்பொருந்திய மெல்லிய பாதமிரண்டுடையீர்! உங்களூரிடத்து வெண்ணெய்போன்ற வெவ்விய சூட்டுண்ட மானூனும், பசிய தேனும், செஞ்சூடுசுட்டிளகிய பொன்போன்ற தினைச்சோறும் விருந்தினர்க்குத் தெள்ளமுதுபோலும்! எ - று.

எனவே,— பாங்கி கூறிய இரவுக்குறியைத் தலைவன் குறிப்பா லுணர்ந்து இயைந்து கூறியது, இக்கருத்தானேயன்றே! பகற்குறி யிடையீடு பட்டவாறென் றுணர்க.

ஊட்டல் - அருந்துதல். சுதை - வெண்சாந்து. பஞ்சூட்டல் - செம்பஞ்சு பொருந்துதல். பாடி - முல்லை, ஊர்க்குப் பொருண்மயக்கம். செஞ்சூட்டிளங்குபொன் - சிவக்கச்சுட்டிளகியபொன். 'இழுதன்ன வெஞ்சூடு' எனவும், 'மானூன்' எனவும் இயையும். (௧௫௧)

பாங்கி கூற்றுயின்வெல்லாம் கூட்டற்கும், பாங்கிற்கூட்டற்கு முரிய. தலைவன் கூற்றுயின வெல்லாம் கூட்டற்கும், வேட்டற்கும் உரியவா றுணர்க.

பாங்கியிற்கூட்டம் - முற்றும்.

---

அஃதாவது, ஒருகூற்றுப் பகற்குறி. ஒருகூற்றுப்பகற்குறி யாதெனில், தலைவனை மற்றைநாள் தன் வேட்கை மிகுதியால் பகற்குறியிடத்து வந்து நிறக, தலைவியைப்பாங்கி குறியிடத்துச் செலுத்தாது மறுத்துக் கூறத் தலைவன் வருந்திப்போதலாதலான் பகற்குறியாகாது, ஒருசாரபகற்குறியாயிற்று.

* "இரங்கல் வன்புறை யிற்செறிப் புணர்த்தலென்
றொருங்கு மூவகைத் தொருசார் பகற்குறி." — என்னுஞ் சூத்

திரவிதியால் ஒருசாரபகற்குறி மூவகைப்படுமெனக்கொள்க.

கிழவோன் பிரிந்துழிக் கிழத்தி மாலையம்பொழுதுகண் டிரங்கல்.

(இது வெளிப்படை)

ஆழ்ந்தார் தமக்கரு ளாதவர் போலிவ் வளவிலன்பு
சூழ்ந்தார் செலத்தொங்கல் சூழ்குழ லாய்சொற் பொருள்படைத்து
வாழ்ந்தார் புகழ்தஞ்சை வாணனைப் பேணலர் மானவெய்யோன்
வீழ்ந்தா ரகலிக்கரந் தானபனி மாலை வெளிப்படவே.

இ - ள். மாலைசூழ்ந்த குழலினையுடையாய்! மிடியில் மூழ்கினர்க்கு கொடாதவர்போல இந்தமட்டில அன்புசூழ்ந்தார் பிரிந்துபோகச் சொற்பொருளபடைத்து வாழும் புலவரால்புகழப்பட்ட தஞ்சைவாணனை விரும்பாதவர் கடலிலவிழுந்து மறைதல்போல, கதிரோன் பனியொடு கூடிய மாலைக்காலம் வெளிப்படக் கடலிலவீழ்ந்து மறைந்தான். யா னென்செய்வேன்! எ - று.

ஆழ்ந்தார் - மிடியிலாழ்ந்தார். எனவே, — ஆழ்ந்தார் தாமாகவும், கொடாதவர் தலைவராகவும் கூறியவாறாயிற்று. சூழ்ந்தார் - பொருந்தினோர். பேணலர் - விரும்பாதவர். ஆகலி - கடல். கரத்தல் - மறைதல். பனிமாலை - அந்தியம்போது. 'வெளிப்படடதே' யென்று பாடமோதுவாரு முளர்.

இக்கிளவி பாங்கி நோக்கிக் கூறுதலும், மாலையம்பொழுதை நோக்கிக் கூறுதலும், தனனுட கூறுதலுமென மூவகைப்படும். அவற்றுள் இச்செய்யுள் பாங்கியைநோக்கிக் கூறியது.

† "புனகண்ணை வாழி மருண்மாலை யெங்கேள்போல்
வன்கண்ண தோநின் றுணை." — என்பது மாலையுடன்கூறியது.

†† "காலை யரும்பிப் பகலெல்லாம் போதாகி
மாலை மலருமிந் நோய்." — என்பது தன்னுட்கூறியது. (கசஉ)

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், ௬. ௩௭.

† திருக்குறள், செ. கஉ௨௨.   †† திருக்குறள், செ. கஉ௨௭.

### பாங்கி புலம்பல்.

(இது வெளிப்படை.)

காலையம் போருக வாண்முகத் தாளன்பர் கையகல
மாலையம் போது வருவித்த நீர்தஞ்சை வாணன்றெவ்வர்
ஆலயம் போலுங்க ளாதவன் கோயி லழல்கொளுந்த
வேலையம் போடுழல் வீர்பரி காலென்றும் வெய்துயிர்த்தே.

இ-ள் காலையம்போருகம்போலும் ஒளியையுடைய முகத்தாளைத் தலைவர் கையகல மாலையம்பொழுதை வரச்செய்த நீர் தஞ்சைவாணன் தெவ்வராலயம்போல, உங்கட் கிறைவனாகிய கதிரவன்கோயில் அழல்பற்றக் கடலில் தண்ணீரோடே யெப்போதும் நெட்டுயிர்த்து வருந்துவீராக.

காலையம்போருகம் - முறுக்கவிழ்தாமரை 'அம்போருகவாண்முகம்' - உவமைத்தொகை 'முகத்தாள்' என்புழி இரண்டனுருபுதொக்கது கையகல் - ஒருசொல், அது பிரிதல்.

† "செற்றா ரெனக்கை விடலுண்டோ நெஞ்சேயா
முற்றா துறாஅ தவர்." — என்பதுபோலும்

தெவ்வர் - பகைவர் ஆதவன் - கதிரவன். கொளுந்தல் - கொளுத்தல் அம்பு - நீர். உழலுதல் - வருந்துதல். வெய்துயிர்த்தல் - நெட்டுயிர்த்தல் (௧௧௩)

### தலைவனீட்டத் தலைவி வருந்துதல்.

தலைவனீட்டத் தலைவி வருந்துதல் எ-து தலைவன் வாராது நாழிகை நீட்டித்தவழித் தலைவி வருந்திக்கூறுதல்.

ஆராத வின்ப விடந்தொறு நீங்கிய வாயமென்பால்
வாராத முன்னம் வருகில ராற்றஞ்சை வாணன்வெற்பில்
கூரா தரநல்கி வல்வினை யேனலங் கொள்ளைகொண்டு
தேரா தவனுட னேநெருநன் மாலையிற் சென்றவரே

இ-ள். தஞ்சைவாணன் வெற்பில் மிகுந்த காதலைக்கொடுத்து, வல்வினையேனது நலத்தையெல்லாங் கொள்ளைகொண்டு, தேரோடுகூடிய சூரியனுடனே நெருநல்மாலைக் காலத்துச் சென்றவர் அமையாத விளையாட்டின்பத்தால் அவ்விடந்தோறும் நீங்கிய ஆயக்கூட்டம் என்னிடத்து வாராத முன்னம் வருகிலார்! யானென்செய்வேன்' எ-று.

ஆல் - அசை. கூர் - மிகுதி. ஆதரம் - காதல். நலம் - அழகு நெருநல் - முன்னைநாள். (௧௧௪)

† திருக்குறள், செ. ௧௨௪௫.

### தலைவியைப் பாங்கி கழறல்.

தலைவியைப் பாங்கி கழறல் எ - து பாங்கி நீ வருந்துவது முறைமை யன்றெனக் கட்டுரைத்தல். கழறல் என்பது கட்டுரை, இடித்துக்கூறல்; உறுதிச்சொல்; இவை ஒரு பொருட்கிளவி.

---

சிறந்தார் தெரிந்த செழுந்தமிழ் வாணன்றென் மாறைவெற்பர்
துறந்தா ரெனையென்று சோருவ தேனிந்தத் தொல்லுலகில்
பிறந்தா ரெவர்க்கும் பிரிவெய்து மாலவெய்ய போர்மாக்கண்
புறந்தாழ் கரிய குழற்செய்ய வாயைய பூங்கொடியே.

இ - ள் வெவ்விய பெரிய போர்செய்யுங் கண்ணும், புறப்பக்கத்தே தாழ்ந்த கரியகுழலும், சிவந்தவாயும் அழகாகிய பூங்கொடிபோலவாய்! இந்தப் பழையவுலகின்கட் பிறந்தார் யாவர்க்கும் பிரிவுவாராமற் போகாது வந்தெய்தும், சிறந்த முன்னோராயந்த செழுந்தமிழைக் கற்ற வாணனது தென்மாறைநாட்டுந் தலைவர் என்னைவிட்டுத் துறந்தாரென்று நீ யயர்வ தென? இனி யயரவேண்டாம் எ - று.

சிறந்தார்-அகத்தியனார், தலைச்சங்கத்தார் முதலாயினோர் சோருதல் - அயர்தல். எண்ணும்மை தொக்குநின்றன. ஐய - அழகாகிய. (௧௪௫)

### தலைவி முன்னிலைப் புறமொழிமொழிதல்.

தலைவி * * * மொழிதல் எ - து பாங்கி முன்னிலையாய் நிற்கத்தலைவி அவள்மேல் வெறுப்பால் அவளைநோக்கிக் கூறாது புறமாய் மொழிதல்.

---

பூவலர் வாவியி னீரற்ற போதுற்ற புன்மையல்லால்
காவலர் காமந் துறக்கின்வெனு னுங்கடம் பாய்மதுகை
மாவல வாணன் வயற்றஞ்சை வேந்தனை வாழ்த்தலசெய்யார்
மேவலர் போலுங் கழற்றுரை யாளர் வியனறிவே.

இ - ள் தலைவராசையைத் துறக்கில் பூவலரும் வாவி நீரற்றபோதுற்ற இழிவுபோலு மல்லாமல் யாதாம், இதனை யறியாது கட்டுரை சொல வாரது விரிந்தவறிவு மதம்பாயும் வலியையுடைய யானைத்தொழில்வல்ல வாணனாகிய வயல்சூழ்ந்த தஞ்சைவேந்தனை வாழ்த்தல்செய்யாத பகைவ ரறிவுபோலும். எ - று

எனவே,— காலமிடனறியாது மதிகெட்டுக்கூறுவர் பகைவர், அவரறிவையொக்கும் கட்டுரை கூறுவா ரறிவென்றவாறாயிற்று

'பூவலர்வாவி' - வினைத்தொகை. புன்மை - இழிவு கடம் - மதம். மதுகை - வலி, வியன - விரிவு. (௧௪௬)

## தலைவி பாங்கியோடுபகர்தல்.

தலைவி பாங்கியொடுபகர்தல் எ - து. வெறுப்பால் முன்னிலைப் புறமொழி கேட்ட பாங்கி தலைவியை யுபசரித்தலால் வெறுப்பு நீங்கிப் பாங்கியொடுபகர்தல்.

முலையார் முயக்கினு மல்லா விடத்தினு மூரிமுந்நீர்
அலையா ரமுதமு நஞ்சமும் போல வணங்கனையாய்
தொலையாத வின்பமுந் துன்பமுங் காட்டுவா தூங்கருவி
மலையா சலத்தமிழ் தோவாணன மாறைநம் மன்னவரே.

இ - ள். அணங்கனையாய்! தாழும் அருவியையுடைய பொதியமலையிற் பிறந்த தமிழை யாராய்ந்த வாணன மாறைநாட்டு நம்மன்னவர் முலை பொருந்திய புணர்ச்சியினும் பிரிவினும் பெருமைபொருந்திய முந்நீராகிய கடலிடத்துப் பிறந்த அமுதும நஞ்சும்போலத் தொலைவில்லாத இன்பமுந் துன்பமுங்காட்டுவ ராதலால் இரண்டினு மலலராயிருநதார். எ - று.

ஆர்தல் - பொருந்துதல். ஆதல - ஈண்டுத்தோன்றுதல். தூங்கருவி - ஒலிக்குமருவி. "வான்மலைந் தெழுநதோனே மகிழ்நதுபறை தூங்க" — என்னுந் தொல்காப்பியச் சூத்திரவுரையாற்காண்க. மலையாசலம - பொதிய மலை. 'அமுதமும நஞ்சமும்போல' என்பதனால் இனபததினும துன்ப மிக்கென்று கூறியவாறுயிற்று. என்னை,—

† "இன்பங் கடன்மற்றுக் காம மஃதடுங்காற்
றுனப மதனிற் பெரிது" — என்பதனுனுணர்க. (கசஎ)

## தலைவியைப் பாங்கி யச்சுறுத்தல்.

தலைவியைப் பாங்கி யச்சுறுததல் எ - து. தலைவியைப் பாங்கி அச்சமுறுததிக் கூறுதல்.

பேணற் கரியநின் பெண்மையு நாணமும் பேணியவர்
காணத் தகுமென்று காணபதல லாற்கழி காதனெஞ்சு
பூணத் தருகினும் பொற்பல்ல வாகுதல கற்பலலவால
யாணர்த் தமிழுடை யான்வாணன் மாறையி னின்னமுதே.

இ - ள். புதிதாய்ப் புலவர்பாடுந் தமிழையெலலாங் கொள்ளுந்தன்மையையுடைய வாணன் மாறையின இனிய வமுதம்போன்றவளே! மிகுந்த காதலை நெஞ்சு பூணத்தருனுகிம விருமபற்கரிதாகிய நின் பெண்மையும் நாணமும் விரும்பியவரோ காணத்தகுமெனறு கருதுவ தல்லாமல், இவ்வாறு துன்பத்தா லழுங்கி அழுக்கல்லவாகுதல் கற்பல்ல, எ - று.

---

† திருக்குறள், சே, ககசுசு.

பேணற்கரிய நின் பெண்மை - தவஞ்செய்து விரும்பினும் எய்தற்கரிய பெண்டன்மை. பேணி - விரும்பி. தேற்றேகாரம் விகாரத்தாற் றொக்கது. காண்பது - கருதுவது. பொற்பு - அழகு. யாணர் - புதுமை.

என்பதனால் யாதுகூறியதெனின், — துன்பமுறவே அத்துன்பத்தால் நலனழியும், நலனழியவே அன்னைக் கையந்தோன்றும், தோன்றவே இற்செறிப்புவரும், வேற்றுவரைவு நேரினும் நேருமாதலான், கற்புகெடுமென்று அச்சமுறுததிக கூறியவாறாயிற்று. (கசஅ)

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல்.

நீங்கற்கருமை தலைவி நினைந்திரங்கல எ - து தலைவனைவிட்டு நீங்கற் கருமையைத தலைவிநினைந்து தன்னுளிரங்கிக்கூறல்.

குன்றா கியபொன்னும் வேழக் குழாமுங் கொடைபுகழ்ந்து
சென்றா முகக்குஞ் செழுந்தஞ்சை வாணனறென் மாறைவெற்பில்
நன்றா மிறைவற்கு நனறிபி லேறகுமுன ஞான்முகத்தோன்
ஒன்றா விதித்தில னேயுயிர் போல வுடம்பையுமே.

இ - ள். நெஞ்சமே! பொன்னாகிய மலையையும் யானைத்திரளையுங் கொடையைப் புகழ்ந்து சென்றோர்கள் பரிசிலாய்க்கொள்ளப்பட்ட செழுமையையுடைய தஞ்சைவாணனது தென்மாறைநாட்டு வெற்பிடத்து, நல்வினைசெய்த இறைவர்க்கும், தீவினை செய்த எனக்கும், நான்முகத்தோன் முன் னிருவரையும் படைக்கும் காலத்தில் உயிர்போல் உடம்பையும் ஒன்றாய் விதியாமற்போயினனே இனிச் செய்யுமாறென்! எ - று.

வேழக்குழாம் - யானைக்கூட்டம். முகத்தல - கொள்ளுதல். நன்றி - நலவினை 'முகக்குஞ் செழுந்தஞ்சை வாணன' என்னும் பெயரெச்சம் வினைமுதலோடு முடியாது பிறவாற்றான முடிந்தது. (கசகூ)

தலைவிக் கவன்வரல் பாங்கி சாற்றல்.

(இது வெளிப்படை.)

நெஞ்சுக வாய்மல ரனனகண ணீரமலக நின்றவஞ்சொல்
கிஞ்சுக வாய்வஞ்சி கேட்டரு ணீயுங் கிளைத்தமிழோா
தஞ்சுக வாய்மொழி நெஞ்சுடை யானறஞ்சை வாணன்வெற்பில்
மஞ்சுக வாரத்தன வாலவர் தேரின மணிக்குரலே.

இ - ள். நெஞ்சமுதிரும்படியாய்ந்த மலர்போன்ற கண்ணினிடத்து நீர் நிறைய நின்ற வழுதிய சொல்லையும், முருக்கம்பூபோன்ற வாயையுமுடைய வஞ்சியே! கிளைத்தமிழையுடைய பெரியோர் தம் வாயுறைவாழ்த்தாகக்கூறியமொழியை நெஞ்சிலே மறவாது வைத்திருக்கும் தன்மையனாகிய தஞ்சைவாணன் வெற்பில வரத் தேரின் மணிக்குரல் முழங்குற வார்த்தல் யான்கேட்டேன், நீயும் கேட்டருள்வாய். எ - று.

நெஞ்சுக - நெஞ்சமுதிர். ஆய்மலர் - மலருட்டெரிந்தெடுத்தமலர். கிஞ்சுகம் - முருக்கம்பூ; ஆகுபெயர். உம்மை - எச்சவும்மை. கிளைத்தமிழ் - விரிந்ததமிழ். 'வாயச்சுகமொழி' என இயையும்; அது வாயுறை வாழ்த்து. மஞ்சுக - மஞ்சுதிர். ஆர்த்தன - ஒலித்தன. மணிக்குரல் - மணியோசைகள்.

இனித் தேரின் மணியோசை முகிலுதிர் ஆரவாரத்துடன் வந்தா ளெனின், களவென்பதனோடு மாறுகொள்ளுமே யெனின், மாறுகொள்ளாது. என்னை, — நால்வகைப் புணர்ச்சியினும் தலைவன் தேரோடும் சேனையோடும் வந்தானல்லது தமியனாய் வந்தானல்லன். எவ்வாறெனின், காட்சியிற் கூறியதானுணர்க. அன்றியும், பிரிவுழிமகிழ்ச்சியில் 'பாகனொடு செல்லல்' என்பதனானும், பாங்கியிற்கூட்டத்தில் 'தலைவி பாங்கியை முனி தல்' எனனுங் கிளவிச் செய்யுளில் முன்னாள் பொற்றேரின்வந்து புணர்ந்து சென்றார் என்றுங் கூறினமையானும், மேலவரைவிடை வைத்துப் பொருள் வயிற்பிரிவோன் மீண்டு வருங்கால் பாகனொடுகூறலுந் தேர் முந்தவேண்டு மென்று கூறுதலானும், வருந்தொறும் தேரொடுஞ் சேனையொடும் வந்து குறியிடத்துத் தமியனாய் வருதலென் றுணர்க. (கரு௦)

### தோழி சிறைப்புறமாகச் செறிப்பறிவுறுத்தல்

தோழி * * * வுறுத்தல் எ - து தலைவன் சிறைப்புறமாகக் குறி யிடத்து வரத் தோழி தங்களுக்குள்ள செறிப்பை யறிவுறுத்திக் கூறுதல். சிறைப்புறம் - வேலிப்புறம்.

† "சிறைகாக்குங் காப்பெவன் செய்யு மகளிர்
நிறைகாக்குங் காப்பே தலை" — என்பதனானுணர்க செறிப்பு - காவலர் தினைகொய்யப் புனத்தினில் வந்திருத்தல்.

---

தொடைக்கண்ணி யார்தடந் தோளவர் கேளலர் தோகையன்னார்
உடைக்கண்ணி யார்தழை கொய்யா ருழவ ருடைத்ததெண்ணீர்
மடைக்கண்ணி யார்மிடைந் தஞ்சை வாணன் வரையினமுன்போல்
கடைக்கண்ணி யார்கண்ணி யார்நம்மை நாளைக் கருங்கண்ணியே

இ - ள். கரிய கண்ணையுடையாய்! மாலைக்கழகார்ந்த பெரிய தோளி னையுடையார் நமக்கினி யுறவல்லர்; மயில்போன்ற ஆயக்கூட்டத்தார் அரையி லுடுத்தற்கு அழகார்ந்த தழையை இனிக் கொய்யார்கள்; உழவ ருடைத்த தெண்ணீர் வயல்மடையை யணியப்பட்ட முத்தினாலடைக்குந் தஞ்சைவாணன் வரையிடத்து நாம் தழைகொய்ய வந்தோமென்று அச்சத் தானோக்கி நிற்கும் வேங்கையார் நாளை நம்மை முன்போற் கடைக்கண் ணாற் பாரார். எ - று.

---

† திருக்குறள், செ. ருஎ.

எனவே, — குறவர் தினைகொய்ய வந்தனர், யாம் இன்று ஊர்க்குஆயக் கூட்டத்துடன் போவோமென்று செறிப்பறிவுறுத்தவா றாயிற்று.

கேளலர் - உறவிலார். உடைக்கு - உடுத்தற்கு ஆரம் - முத்து. கடைக் கணியார் - கடைக்கண்ணுற்பாரார் சிறப்புமைதொகத்து. கணியார் - வேங்கையார், உயர்சொற்கிளவி.—

‡ "ஒருவனை கூறும் பன்மைக் கிளவியும்
ஒன்றனை கூறும் பன்மைக் கிளவியும்
வழக்கி னாகிய வுயர்சொற் கிளவி
இலக்கண மருங்கிற் சொல்லா றல்ல." — என்னுஞ் சூத்திரவிதி யானுணர்க. கடைக்கணித்தல் - கடைக்கண்ணால் நோக்குதல். (கருக)

**தோழி தலைமகற்கு முன்னிலைப் புறமொழி மொழிந் தறிவுறுத்தல்**

தோழி *** வுறுத்தல் எ - து. தலைவன் முன்னிலையாய் நிற்பத் தோழி தலைமகளைக் காணுளபோலப் புறமொழியாய்ப் புட்களை நோக்கிக் கூறு வாள் போன்று செறிப்பறி வுறுத்தல்

---

பயில்கா ளப்பந்திப் புயலன்ன வோதியைப் பைங்கிளிகாள்
மயில்காள் சிறிது மறக்கப் பெறீர்தஞ்சை வாணன்வெற்பில்
குயில்காள மெங்கு மியம்புதண் சோலையிற் கூடியின்பம்
அயில்கா ளவெங்கதிர் வேலன்பர் சால வயாப்பினுமே.

இ - ள். பைங்கிளிகாள்! மயில்காள்! நெருங்கிய கரிய பந்தியா யிருக்கின்ற புயல்போன்ற வோதியையுடையாளைத் தஞ்சைவாணன் வெற் பில் குயில்காளம்போ லெங்கு மொலிக்குங் குளிர்ந்த சோலையிற்கூடி யின்ப மருந்தும் விடம்போன்ற வெங்கதிர் வேலையுடைய அன்பர் மிகுதியும் மறந் தாலும் நீங்கள் சற்று மறக்குந் தன்மையைப் பெறீராக எ - று.

எனவே, — யா மூர்க்குப் போகா நின்றே மெனச் செறிப்புணர்த் தலாயிற்று.

பயிலுதல் - நெருங்குதல். காளம் - கருமை. பந்தி - நிரை. ஓதி - கூந் தல் காளம் - காகளம். இயம்பல் - ஒலித்தல். அயிலுதல் - அருந்துதல். காளம் - விடம். அயாத்தல் - மறத்தல் (கருஉ)

**பாங்கி தலைமகன் முன்னின் றுணர்த்தல்.**

(இது வெளிப்படை.)

கானலங் கானமலர்க் கள்வாய்க் கருங்கணி காட்டினையால்
கூனலஞ் சாய்பொற் குரலுங்கொய் தாரொமர் கொற்றவயாம்
ஏனலங் காவலு மின்றே யொழிந்தன மேழுபுவிக்கும்
தானலங் காரமன் னான்றஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

---

‡ தொல். சொல். கிளவியாக்கம், சூ. உஎ.

இ - ள். கொற்றவ! எழுலகுக்குங் கீர்த்தியால் அலங்காரம் பேரான் பவனாகிய தஞ்சைவாணன் வெற்பிடத்துச் சோலையில் அழகிய மணத்தோடு கூடிய மலரிலிருக்குங் கள்ளைத் தன்னிடத்திலேயுடைய பெரிய வேங்கைமரத்தினுடைய கட்டளையாலே மா தலைவளைந்து சாய்ந்த பொன்னிறமாகிய தினைக்கதிரைக் கொய்கின்றாராதலால், தினைப்புனங் காவலும் இன்றொழிந்தனம். எ - று.

கானல் - சோலை. கான - மணம. கணிகை - வேங்கை. கட்டளை - உறுதிச்சொல்.

வேங்கை பூக்குங்காலம் தினைக்கதிர் கொய்யுங் காலமாதலால, வேங்கை கட்டளையால் தினைக்கதிர் கொய்கின்றாரென்று கூறியது

‡ “வாராக் காலத்து நிகழுங் காலத்தும”—எனனுஞ் சூத்திரவிதியால கொய்கின்றார் என்னும் நிகழ்காலச் சொல்லைக் ‘கொய்தார’ என விரைவு பற்றி இறந்தகாலத்தாற் கூறினனொன வுணாக. முன ‘இறைவனைக் குறிவர விலக்கல’ செய்யுளில ‘புனமும பசுந்தினைச செங்குரலேந்தும’ என்று கூறியவதனானும ‘கொய்கின்றா’ ரெனறே கொள்க.

கூனல் - தலைவளைதல். குரல் - கதிர். ஏனல்-தினை. ‘சோலையில் அழகிய மணத்தோடு கூடிய மலரிலிருக்குங் கள் வாயினிடத்து நாறுங் கரிய நிறத்தையுடைய கணிகாரிகை கட்டளையால’ எனினு மமையும, கணிக்காரிகையைக் கேட்டுத் தினைகொய்தல அவாக்கியல்பாதலின. (௧௩௩)

**பாங்கி முன்னின் றுணர்த்தியோம்படைசாற்றல்.**

பாங்கி * * * சாற்றல் எ - து. அவ்வாறு முன்னின் றுணர்த்திய பாங்கி யெம்மை மறவாமை வேண்டுமென்று கூறுதல.

---

கனஞ்சாய நல்கிய கையுடை யானெதிர் கன்றினர்தம்
மனஞ்சாய வென்றருள் வாணன் வரோதயன் மாறைவெற்பில்
சினஞ்சாலும் வேலண்ண லேமறவே லெம்மைச் செவ்வியிரு
தனஞ்சா யினுமினி நின்னையல லாதில்லைத் தாழ்குழற்கே.

இ - ள். கொடையில மேகஞ்சாயக் கொடுக்கப்பட்ட கையையுடையவன் வீரத்தா லெதிராகிச் சினந்தவர் மனஞ்சாயவென்றருளிய வரோதயனாகிய வாணனது மாறைவெற்பில் கோபமமையும் வேலையுடைய தலைவனே! அழகையுடைய இருதனஞ்சாயினும இனித்தாழ்ந்த குழலையுடையாட்குப் பற்றுக்கோடு நின்னையல்லது இல்லையாதலால், எங்களை மறவேல.

கனம் - மேகம். சாய்தல் - நிலைதளர்தல். நல்கல்-கொடுத்தல். மனஞ்சாய - செவ்விதி னில்லாது வளைய. சினஞ்சாலும்-சினமிகுதியும. செவ்வி-

---

‡ தொல். சொல் வினையியல், சூ. ௪௪.

அழகு. தனஞ்சாய்தல் - முலைசரிதல். 'தனஞ்சாயினும' என்று இங்ஙனங் கூறுதல எடுததுக்கோடறகண்ணே எஞ்ஞான்றும ஒரு தன்மையொனறு கூறியதனோடு மாறுகொள்ளுமெனின், மாறுகொள்ளாது. என்னை, —

† "நாடக வழக்கினு முலகியல வழக்கினும்
பாடல சான்ற புலனெறி வழக்கம்" — என்னுஞ் சூத்திர விதியால் அணைநது கூறியது.

நாடக வழககு ஈண்டுங கூறியது உலகியல் வழக்கெனை றுணர்க. பற்றுக்கோடு அவாய் நிலையான வந்தது. (கருச)

**கிழவோன் நஞ்சப்பெறது நெஞ்சொடு கிளத்தல்.**

கிழவோன் * * * கிளததல் எ - து. இவ்வாறு கூறக்கேட்ட தலைவன வேறோா பற்றுக்கோடுபெறுாது நெஞ்சொடு கூறல.

---

ஏவல ரேய்விழி மாநதளிர மேனிய ரனவினிக்
காவல ரேமனங காததனம யாஙகளி யானைசெமபொன
நாவல ரேபெற நலகுங கைமேக நறுங்குவளை
மாவல ரேய்தொடை யானறஞசை வாணன் வரையிலவநதே.

இ - ள். மனமே! ஏவும, மலரும போன்ற விழியினையும, மாநதளிர போனற மேனியையு முடைய அவா இனித இணைபபுணங காபபா ரல்லா; களிததயானையுஞ் செமபொனனும நாவலாபெறக் கொடுக்குங் கையை யுடைய மேகமபோனற நறுங குவளையினது கரிய மலாடோதிநத மாலை யணிநதவனாகிய தஞசைவாணன வரையிடதது வநத நாம வீணே காததனம. எ - று.

ஏவு - அபபு. ஏவலா - எண்ணுமமை தொக்கு நின்றது. ஏயதல்-ஒப்பு. 'மாநதளிாமேனியா' - உவமைததொகை. எனல - தினை. இனி - இனி மேல. காவலா - காபபாரலலா. 'யானைசெமபொன' - எண்ணுமமைத, தொகை. மாவலா - கரியமலா. எயதல் - பொதிதல. பனம் - அணமை விளி.

கிழவோன்பிரிந்துழி கிழததி மாலையமபொழுதுகண் டிரஙகலும,பாஙகி புலமபுதலும, தலைவனீடடத தலைவி வருநதலும, முனனிலைப் புறமொழி மொழிதலும், பாஙகியொடு பகாதலும, நீஙகற கருமை தலைவி நினைநதிரஙக லும,கிழவோனறஞசம பெறாது நெஞசொடு கிளததலுமாகிய வேழும் இரங கறகுரிய. தலைவியைப பாஙகிகழற லும,தலைவியைப் பாஙகி யசசுறுததலும, தலைவிக் கவன்வரல பாஙகி சாற்றலுமாகிய மூனறும வனபுறைகருரிய.

---

† தொல். பொருள். அகததிணையியல, சூ. ருங.

"இறைப்புறமாகச் செறிப்பறி வுறுத்தல்" முதல் நான்கு துறையும் இச் செறிப்பறிவுறுத்தற் குரியவாறு காண்க. (௧௩௫)

ஒருசார் பகற்குறி முற்றும்.

---

## பகற்குறி யிடையீடு.

அஃதாவது, பகற் குறிக்கண வந்த தலைமகன் குறிக்கட் செல்லாது இடையீடு பட்டுப்போதல்,

* "விலக்கல் சேறல் கலக்க மென்றாங்
கப்பின்மூ வகைத்தே பகற்குறி யிடையீடு." — என்னுஞ் சூத்திரவிதியாற் பகற்குறி யிடையீடு மூவகைப்படும்.

### இறைவனைப் பாங்கி தறிவரல் விலக்கல்.

(இது வெளிப்படை.)

புனமும் பசுந்தினைச் செங்குர லேந்தும் புகன்றகிள்ளை
இனமுங் குழீஇவந் திரைகொள்ளு மாலிறை யாரவனையும்
மனமுங் கவர்வெற்ப வாணன்றென் மாறை மடப்பிடியும்
அனமுந் தொழுநடை பாற்பல காலவரு மன்னையுமே.

இ-ள் தலைவி கையின்கண் நிறைந்தவளையும், அவள் மனமும் இரண்டையுங் கவர்ந்து கொள்ளும் வெற்பனே! இப்புனமும் பசிய தினையினது முற்றிச் சிவந்த கதிரையேந்தி நிற்கும், இவள் சொல்லைப்போற் சொல்லப் பட்ட கிளியினமுங் கூடிவந்து தங்கும வாணன் தென்மாறை நாட்டு மடப் பத்தோடு கூடிய பிடியும் அன்னமுந் தொழும நடையினை யுடையாள் பக்கல் அன்னையும் பல்காலவரும். எ - று.

எனவே, —தலைவியும் புனமவிட்டு நீங்கத்தக்காளல்லள், நீயும் இங்கு வாரற்க வெனக் குறிப்பாற் பெறப்பட்டது.

குரல் - கதிர். குழீஇ வருதல் - பலபல தொகுதியாய்க் கூடிவருதல். இரைகொள்ளுதல - தங்குதல். இறை - ஆகுபெயர். தொழுநடை - ஆகு பெயர். கவர்தல் - கொள்ளுதல். (௧௩௬)

### இறைவியைப் பாங்கி தறிவரல் விலக்கல்.

(இது வெளிப்படை.)

சந்துசுற் றுங்கடன் ஞாலமெல் லாம்புகழ் சாமன்வளர்
சந்துசுற் றுங்கொங்கை மங்கையர் வேள்சஞ் சரீகநறை
வந்துசுற் றுந்தொங்கல் வாணன்றென் மாறை வரையின்புலாக்
கொந்துசுற் றுங்குழ லாய்செல்ல லீயக் குளிர்பொழிற்கே.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. ௩௪.

இ - ள். சங்கு சுற்றுங்கடல் சூழ்ந்த வுலகமெல்லாம் புகழப்பட்ட பெருமையைப் படைத்து நாட்டு நாள் வளரும் தலைமையையுடைய சந்தனந் திமிரும் கொங்கையை யுடைய மங்கையர்க்கு வேளையொத்த சஞ்சரீகம் மணத்தால் வந்து சுற்றுந் தொங்கலையணிந்த வாணன் தென்மாறை வரையிடத்துள்ள மலர்க்கொத்துச் சுற்றிய குழலாய்! குளிர்ந்த பொழிலிடத்து நீ செல்லற்க. எ - று.

கந்து - சங்கம். காமன் - பெயர். சந்து - சந்தனம். சுற்றல் - திமிர்தல். சஞ்சரீகம் - வண்டு. நறை - மணம். கொந்து-கொத்து; மெலிந்து நின்றது. 'காமன்வேள்' என்னும் வினைக்குறிப்பு முற்று எச்சமாய்த்திரிந்து நின்றது.

### இறைமகனாளிடம் நோக்கி யழுங்கல்.

(இது வெளிப்படை.) அழுங்கல் - தன்னுளிரங்கல்.

அருவித் தடமு மணிமுத்த யாறு மவனியெங்கும்
திருவித் தியதஞ்சை வாணன் சிலம்புமிச் சிற்றிலும்பேர்
இருவிப் புனமுமின் றென்னினைக் கின்றன வென்னையின்னே
மருவிப் பிரிபவர் போலில்லை யேமண்ணில வன்கண்ணரே.

இ - ள். சிற்றருவி வந்து விழும் பொய்கையும், ஒழுங்காய முத்துக்களைக் கொழித்துவரும பேரருவி யாறும், புவியெங்குஞ் செல்வத்தையே வெள்ளாமையாய் விதைக்கப்பட்ட வாணனது சிலம்பும், இச்சிற்றில்லமும் பெரிய தாளையுடைய புனமும், இன்றென்னை யென்னாக நினைக்கின்றனவோ! இப்போது பலநாளும் மருவிப் பிரிபவர்போல் உலகின் வன்கண்ணரில்லை எ - று.

உம்மை - எண்ணும்மை. தடம் - பொய்கை. இருவி - தினைத்தாள். இன்னே - இப்போது. வன்கண்ணர் - கொடியர். (௧௩௮)

### பாங்கி ஆடிடம்விடுத்துக் கொண் டகறல்.

பாங்கி ஆடிடம் விடுத்துக் கொண்டகறல் எ - து பாங்கி விளையாடியிடம் விட்டு நீங்கித் தலைவியைக்கொண்டு தம்மூர்க்குப் போதல்.

---

உன்னைய ராவல்கு னல்லவ ரோயென் றுசாவினெங்கள்
மன்னைய ராமல வகுத்துரை நீதஞ்சை வாணன்வெற்பின்
என்னைய ராணைகொண் டேகுகின் றேனிவை யித்தனையும்
பின்னைய ராதொழி வாயித னேயிது பெற்றனமே.

இ - ள். பரணே! நீயும் யானும் இந்தப்பிரிவைப் பெற்றனமே! உன்னையெங்கள் மன்னிய தலைவர் வந்து அராவல்குல் நல்லவ ரெங்கே யென்று உசாவில், அயர்ச்சியடையாமல நீ வகுத்துச்சொல்வாய்; தஞ்சை

வாணன் வெற்பில் என்னையரோவலால் தலைவியைக்கொண்டு ஊர்க்கே கின்றனன் ; ஆடிடம் நோக்கி யழுங்கியதும, ஆடிடம விடுத்துக்கொண்டகறலும், உன்னுடன சொலகின்ற சொற்களுமாகிய விவை யித்தனையும் பின் மறவா தொழிவாயாக. எ - று.

'நல்லவர்' எனபுழி 'எங்கே' என வருவித்துரைக்க. 'அராவல்குல'- உவமைததொகை. ஓகாரம - அசைநிலை உசாதல் - வினுதல. அயாசசி - தளாச்சி. என்னையா - ஈன்றோ. ஆணை - ஏவல். அயாதல் - மறததல். இதண் - பரண் (கஉகூ)

**இத்துணையும் அறநாட் செய்தியென்றுணர்க.**

**பின்னாள் நெடுந்தகை தறிவயின் நீடுசென்றிரங்கல்.**

பின்னாள் * * * இரஙகல எ - து. ஏழாநாள் தலைவன் குறியிடமாகிய மாதவிபபநதரிடததுவநது நீட்டிதது நினைநதிரஙகல.

மானகா ணிகரின் மடமயில காடஞ்சை வாணன்வெற்பில்
தேனகா ணிளைமென சிறைக்கிள்ளை காளென் றெருமரனேய்
தானகா ணிபகொளிச சநதனச் சோலையைத் தனனையினறி
யான்கா ணியகொலெ ழுநதரு ளாததின றெனனுயிரே.

இ - ள். மான்காள்! உவமையிலலாத மடப்பததையுடைய மயில்காள்! தஞ்சைவாணன் வெற்பிடததிருககின்ற வணடுகாள்! ஒழுஙகாய வருகின்ற மெலலிய சிறகையுடைய கிளிகாள! இனறு என்னுடைய சுழலும் வேடகைநோயைத தானறியவோ! இசசநதனச்சோலையிற கரநதிருக்கின்ற தன்னையினறி யான் தேடிக்காணவோ! என்னுயிரபோலவாள எழுந்தருளாதது எ - று.

தெருமரல் - சுழறசி. 'சோலையை' என்புழி வேறறுமை மயககம். யிர் - ஆகுபெயா. (கஙo)

**தலைவன் வறுங்களநாடி மறுகல்.**

தலைவன வறுஙகளநாடி மறுகல் எ - து. தலைவி யில்லாத இனைப்புனததை நோக்கி வருநதுதல.

செங்கேழ் விழிக்கு மொழிக்கும பகைதிருப் பாற்கடலும்
பங்கே ருகமும பயநதன வாயினும் பைங்கிள்ளைகாள்
சங்கேய் தடநதுறை சூழ்தஞ்சை வாணன றியலாபோல
எங்கே யினித்தங்கு வாரோனல காதலிங் கிருநதவரோ.

இ - ள். பைங்கிள்ளைகாள்! செவவரிபொருந்திய விழிக்கும மொழிக்கும் தாமரையுந் திருப்பாறகடலு மாதரைப்பெற்றனவாயினும பகையாயின

வாதலால், தினைப்புனங் காத்திருந்தவர் சங்குபொருந்திய பெரிய வைகைத் துறைசூழ்ந்த தஞ்சைவாணன் தரியலர்போல இன்றெங்கே தங்குவார்?

இது மொழிமாற்று நிரனிறை.—

> "ஆடவரக ளெவ்வா றகன்றொழிவார் வெஃகாவும்
> பாடகமு மூரகமும் பஞ்சரமாய் — நீடியமால்
> நின்றா னிருந்தான் கிடந்தா னிதுவன்றோ
> மன்றா மதிற்கச்சி மாண்பு" — என்றாற்போல் நிரனிறை

மொழிமாறி நின்றது.

கேழ் - நிறம். பங்கேருகம் - தாமரை. இடமாயினதன்றி பயந்ததின் றேயெனின், சீதை யிலங்கையில் பொய்கைத் தாமரையிற் பிறந்தாளென்பது இராமாகதையிற் கண்டுகொள்க. துறை - வைகைத்துறை. தரியலர் - பகைவர். ஏனல் - தினை "கோடாப்புகழ்மாறன்" என்னுஞ் செய்யுளும் வறுங்களநாடி மறுகல்' என்றே கொள்க. (கஙக)

## குறுந்தொடி வாழூர்நோக்கி மதிமயங்கல்.

குறுந்தொடி * * * மயங்கல் எ - து. தலைவியின் ஊர் தேடிச் சேறு மெனில் அறிந்திலமென்று மதிமயங்கிக் கூறல்.

---

> பெறவரி தாலவள் பின்சென்ற நெஞ்சமும் பேணலர்க்கு
> மறவரி தானன்ன வாணன்றென் மாறை வரைபுனஞ்சூழ்
> நறவரி தாழ்முலலை நாண்மல ரோதி நகருமெனக்
> குறவரி தாமென்செய் வேனென்று சோருமென் னாருயிரே.

இ - ள். அவளைப் பெறுதலரிதாயது மன்றி அவள் பின்னே தொடர்ந்து சென்ற நெஞ்சமும் மீட்டு நாம் பெறவேண்டுமெனிற் பெறுதற்கரிதாயது பகைவர்க்கு வீரம்பொருந்திய சிங்கத்தையொத்த வாணன் தென் மாறை வரைபுனஞ் சூழ்ந்த கள்ளால் வண்டு தாழ்பட்ட முல்லைநாண் மலரா யணிந்த குழலையுடையாளது நகரும் எனக்கு உறுதற்கரிதாதலான், என்செய்வேனென்று என்னொப்பற்ற உயிர் சோராநிற்கும். எ - று

எனவே,— இதற்குச் செய்யுமா றறிந்திலேனென்று மதிமயங்கிக் கூறிய வாறாயிற்று.

மதி - அறிவு ஆல் - அசை. பேணலர் - பகைவர். மறவரி - வீரச்சிங்கம். 'சூழ்ந்த' என்னும் பெயரெச்சம் 'நகர்' என்னும் பெயர்கொண்டு முடிந்தது. நெஞ்சமும் என்னும் உம்மை எச்சவும்மை. நறவு - கள்ளு. அரி - வண்டு. 'தாழ்முல்லை' - வினைத்தொகை 'நாண்மலரோதி' - அன்மொழித்தொகை ஆகுபெயர். முன்னர் 'இடமணித்தென்றல்' என்னுஞ் செய்யுளில் தன்னூரும் அவளூரும் ஓரெல்லையென்று கூறினவன் இங்ஙனம் ஊரறியேனென்று

கூறியது முன்கூறியதனோடு மாறுகொள்ளுமெனின், மதிமயங்கிக் கூறலான் மாறுகொள்ளாதென்றுணர்க. (கசுஉ)

இவற்றுள் முன்னைய விரண்டும் விலக்கிற்குரியன. ‘பாங்கி யாடிடம் விடுத்துக்கொண் டகறல்’ ஒன்றும் சேர்ற்குரித்து. ஏனைய நான்கும் கலக்கத்திற் குரியன.

பகற்குறியிடையீடு - முற்றும்.

---

## இரவுக்குறி.

அஃதாவது, தலைவன் தலைவியை இரவுக்குறியிற் கூடுதல்.

* “வேண்டன் மறுத்த லுடன்படல் கூட்டல்
கூடல் பாராட்டல பாங்கிற் கூட்ட
லுயங்க னீங்கலென் றொன்பது வகைத்தே
யியம்பிப் போந்த விரவுக்குறிதானே.” — என்னுஞ் சூத்திர விதியான் இரவுக்குறி ஒன்பது வகைப்படும்.

### இறையோ னிருட்குறி வேண்டல்.

இறையோ னிருட்குறி வேண்டல் எ - து தலைவன் இருட்குறியை விரும்பிப் பாங்கியுடன் கூறல்.

---

கருவிருந தெண்டிசை யுங்கன மாமழை கான்றதுள்ளம்
வெருவிருந் தெமபதிக் கேகவொண் ணாது விதம்விதமாய்
வருவிருந தென்றும் புரந்தரு வாணன்றென் மாறையன்னீர்
ஒருவிருந் தெங்களைப போலெய்து மோகங்கு லுங்களுக்கே.

இ - ள். வகைவகையாய் வரும் விருந்தை யென்றுமோம்பும் வாணன் தென்மாறை நாடுபோல்வீர்! சூல்கொண்டு முகில் எண்டிசையும் பெரிய மழையைப் பெய்தது, ஆதலால் உள்ளதினிடையே அச்சமிருந்தால் எம்பதிக்குச் செலலுதல் கூடாது, இற்றைக்கு வைகுதல் வேண்டும்; எங்களைப்போல் ஒப்பற்ற விருந்து இந்தக் கங்குலின்கண் உங்களுக்கு நீர் வருந்தித்தேடினும் கிடைக்குமோ? சொல்லுவீராக. எ - று.

கரு - சூல். கனம் - முகில். கான்றல் - பெய்தல். வெருவு - அச்சம். ஏக - போக. ஒண்ணாது - கூடாது. விருந்து புரத்தல் - விருந்தோம்பல். அன்னீர் - உயர்சொற்கிளவி. (கசுங)

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. சுக.

### பாங்கி நெறியின தருமைகூறல்.
(இது வெளிப்படை.)

மலைமாது வல்லவன் வாணன் வரோதயன் மாறைவெற்பில்
சிலைமா லுருமெங்குந் தீயுமி ழாநிற்குஞ் சிங்கமெங்கும்
கொலைமாக கரியினை தோாதுழ லாநிறகுங் கொற்றவபொன்
கலைமா னுறைபதி நீவரு மாறென்கொல் கங்குலிலே.

இ - ள். வீரமகட்குக் கணவனாகிய வாணனென்னும் வரோதயன் வெற்பிடத்திற்கொற்றவனே! மேகலைபொருந்திய மானுறைகின்ற பதிக்கு நீ வருகின்றவழி வில்லொடுகூடிய மேகத்திடத்து இடிகளெங்கு நீயைக் கக்காநிற்கும, சிஙகஙகள் எவ்விடத்துங கொலலுந்தொழிலையுடைய கரிகளை யிரையாகத்தேடி வருநதித் திரியாநிற்கும் கஙகுற்பொழுதில் நீ வந்ததெப் படியோ? எ - று.

எனவே,— நீ வருதல் தகுதியன்றென்று கூறியவாறாயிற்று.

மலைமாது - வீரமகள. மலைதல் - பொருதல். சிலை - வில். மால்- மேகம, உரும - இடி. உமிழ்தல் - கலக்கல. தோதல - ஆராய்தல. உழலல் - வருந்தித்திரிதல. பொற்கலைமான் - மேகலையுடைய தலைவி. ()

### இறையோன் நெறியின தெளிமைகூறல்.
(இது வெளிப்படை.)

வடுவரி நீள்கண்ணி யஞ்சலம யாகதஞ்சை வாணன்வெற்பில்
கொடுவரி கேழற் குழாமபொரு கொலலையுங் குஞ்சரந்தேர்ங்
தடுவரி தாவு மடுக்கமுஞ் சூாவழங் காறுமைவாய்க்
கடுவரி நாகந தவாமல்கு கலலளைக் கானமுமே.

இ - ள். வடுப்போன்று வரியோடுகூடிய நீணட கண்ணையுடையாய்! தஞ்சைவாணன் வெறபிடதநுப் புலிக்குழாமும, பன்றிக்குழாமும் ஒன்றோ டொன்று பொரப்பட்ட கொலலைக்காடும, குஞசரத்தைத் தேடிக்கொல் லும் சிங்கந் தாவப்பட்ட மலைப்பக்கமும், அச்சததைக்கொடுக்குஞ் சூரரமக ளென்னுந் தெய்வப்பெண் ணியஙகும் வழியும், ஐந்து வாயும் விடமும் வரியு முடைய நாகங்கள் தவர்ந்து செல்லும் நெருங்கு கற்களின் வளைகளை யுடைய காடும் யாமஞ்சலம். எ - று.

வடு - மாவடு. வரி - செவவரி. கொடுவரி - புலி. கேழல் - பன்றி. தேர்தல் - ஆராய்தல். அடுககம - மலைப்பக்கம். சூர் - சூரரமகள். ஆறு - வழி. வழங்கல் - இயங்கல். தவர் - தவாதல. கல்லளை - கல்வளை. அடுதல் - கொல்லுதல். அரி - சிங்கம். அடு - முற்றியலுகர மாதலான் வகர வுடம் படுமெய்பெற்றது. தாவுதல் - பாய்தல. (கஅ)

## பாங்கி யவனாட்டணி யியல்வினாதல்.

பாங்கி யவனாட்டணி யியல்வினாதல் எ - து. தலைவன் நாட்டுப்பெண்க ளணியும் அணியையும் இயலையும் வினாதல். இயல் - புனைதல், முடித்தல், விளையாடிடம் முதலியன.

எனவே, — தலைவன் நெறியினது எளிமை கூறியவழி நன்றென்று கூட்டற்கு உடம்பட்டுக் கூறாது, அணியியல் வினாதல் வினாவழுவெனின், அன்று. தலைவனை அவனாட்டணியியல் வினாவுழித் தலைவன் தன்னாட்டணியியல் வினாவும், வினாவுழி அணியியல் கூறும்வழி அதுவே குறியிடமாகக் கூறலாமென்று கருதிப் பாங்கி வினாவியவாறென் றுணர்க.

---

பூந்தழை யாது மலைமலர் யாது புனையிழையும்
சாந்தமும் யாது தடம்பொழில் யாது தரணியின்மேல்
மாந்தரில் வேளன்ன வாணன்றென் மாறை வளங்காசூழ்
தேந்தரு சோலைவெற் பாவுங்க ணாட்டுறை செல்வியர்க்கே.

இ - ள். புவியின்மேல் மாந்தருக்குள் வேளையொத்த வாணன் தென் மாறை வளங்கா சூழ் தேனைத் தரும் மலரையுடைய சோலைவெற்பனே! உங்கள் நாட்டுறையுள் செல்வியர்க ளிடையிலுடுக்கும் பூந்தழையாது? சூடும் மலர் யாது? அணியும் அணியொடு பூசுஞ் சந்தனம் யாது? விளையாடும் பெரிய பொழில் யாது? சொல்வாயாக. எ - று.

மலைதல் - சூடுதல். புனைதல் - அணிதல். இழை - அணி. உம்மை இரண்டும் அசைநிலை. எண்ணும்மை யாகாதோவெனின், ஆகின் பன்மை வாசகங்கொண்டு முடியுமாதலான், எண்ணும்மை யாகாதால் மூன்றனுருபு வருவித்துரைக்கப்பட்டது. தடம்பொழில் - பெரியபொழில். தேம்-தேன்.

## தலைவ னவனாட் டணியியல் வினாதல்.

தலைவ னவனாட் டணியியல் வினாதல் எ - து. பாங்கி குறிப்பறிந்து அவனாட்டணி யியலைத் தலைவனை வினாதல்.

---

எந்நாட் டவரணி கூறியன் பேறிங் கிலைவடிவேல [மேல்
மைந்நாட்ட வெண்முத்த வாணகை யாய்தஞ்சை வாணன்மென்
உன்னாட் டரிவைய ராடிடஞ் சாந்த மொளியிழைபூ
மொய்ந்நாட் டழையொடெல் லாமொழி யாமன மொழியெனக்கே.

இ - ள். போர்செய்யுங் கூரிய வேலைப்போன்ற மையெழுதிய நாட்டத் தையும், வெண்முத்தம்போன்ற வொளிநகையையு முடையாய்! எங்க ணாட் டவரணியும் மணிமுதலிய கூறிப் பெறுவதியாது, தஞ்சைவாணன் மண்

மேல் இவ்விடத்து உங்கள் நாட்டரிவையர் ஆடிடமும், பூசுஞ் சாந்தமும், அணியு மொளிப்பூணும், முடிக்கும் பூவும், மொய்த்த நாட்டமையோடு எல்லாம் விடாமல் எனக்கு மொழிவாயாக. எ - று.

ஈங்கு - இவ்விடம். இகல் - போர். நாட்டம் - கண். வாள் - ஒளி. 'வடிவேல நாட்டம,' 'வெண்முத்தநகை' இரண்டும் உவமைத்தொகை. மொய்த்தல - செறிதல. (கசுஎ)

தன்னுட் டணியியல் பாங்கி சாற்றல்.

(இது வெளிப்படை)

வகைகொண்ட மாந்தழை காந்தளம் போது மருப்பின்முத்தம
தகைகொண்ட சந்தனச் சாந்தணிந் தாடுவர் தஞ்சையர்கோன் [ தூர
மிகைகொண்ட தெவ்வரை வெங்கண்ட வாணன்வெற் பர்வெம
நகைகொண்ட வல்லியன் னுமொல்லி நாக நறுநிழலே

இ - ள். குற்றங்கண்ட தெவ்வரைப்புறங்கண்ட தஞ்சையர் கோனு கிய வாணன் வெற்பனே! மதுரிடத்து மகிழ்ச்சிகொண்ட வல்லிபோல வார், வகைகொண்ட மாந்தழை, காந்தளம் போது, யானைக்கோட்டு முத்தம், அழகுகொண்ட சந்தனச்சாந்து, இவையணிந்து கங்குற்காலத்துப் புன்னாகத்தின் நறிய நிழலில் விளையாடுபவர். எ - று.

எனவே,—குறியிடங் கூறியவாறுமன்றி இரவுக்குறியிடம் மனையைச் சுற்றி வளைந்த மதிலகத்தெனவுணர்க.

மிகை கொண்ட தெவ்வரை வெங்கண்ட தஞ்சையர் கோனுகிய வாணன்' என முடிக்க 'நிழலிலாடுவர்' என இயையும் 'வகைகொண்ட' என்பதனைப் 'போதும்' முதலியவற்றிற்கும் கூட்டுக.

வகை கொள்ளலாவது — தழை வகையிற்கொண்ட மாந்தழையும், போது வகையிற்கொண்ட காந்தட் போதும், முத்தவகையிற் கொண்ட யானைக்கோட்டு முத்தமும், சந்தனவகையிற்கொண்ட தகைகொண்ட சந்தனமுமென்றுணர்க.

தகை - அழகு. மிகை - குற்றம். வென் - புறம். நகை - மகிழ்ச்சி. எல்லி - இரா. உடுப்பதற்கும், சூடுவதற்கும், பூண்பதற்கும் அணிந்து என்னுஞ் சொல் பொதுவாகலான் அச்சொற்கொண்டு ஒரு முடிபாக்கிக் கூறி யுவா றுணர்க. (கசுஅ)

இறைவிக் கிறையோன் குறையறி வுறுத்தல்.

இறைவிக்கு * * * வுறுத்தல் எ - து. பாங்கி தலைவனை யோரிடத்து நிறுவி தலைவிபக்கற்சென்று தலைமகன் குறையை யறிவித்தல்.

புயலே றதிர்தோறும பொங்குளை மீதெழப் போதகநதோந
தியலே றதிரு மிருஙகஙகுல வாயமுதத மீனறுசஙகம
வயலே றணைவள ருநதஞசை வாணன வரையிலுணகண
கயலே றனையநின பாலவரல வேணடினா காதலரே

இ - ள். இடியதிருநதொறும மிகுநத மயிரைச சிலிாததது யானை யைததேடி யியஙகுஞ சிஙகவேறு வாயவிடும பெரிய கஙகுலிடததுச சஙக முததஙகளை யீனறு வயலி னுயாநத வரமபிலே துயிலுந தஞசைவாணன வரையிடததுக கயலேறுபோனற மையுணட கணணையுடைய நினபககல வரததக்க தலைவா விருமபினா. எ - று

புயலேறு - இடி. பொஙகுதல - மிகுதல. உளை - மயிா மீதெழல - மேலே சிலிாததல. போதகம - யானை. தோதல - தேடுதல. இயலல - இயஙகுதல ஏறு - சிஙகவேறு இடிததவுடன மயிாசிலிாததுச சிஙகம யானையைத தேடுமெனறது, இடியென றறியாது களிறுபிளிறிய தெனறு கருதித தேடியவாறெனறுணாக. 'சஙகமுதத மீனறு' என வும, 'கயலே றனைய வுணகண' எனவும மாறுக. கயலேறு மீனகளிற சிறநதது. தலைவி - முனனிலையெசசம (கசுகூ)

## நேரா திறைவி நெஞ்சொடு கிளத்தல்.

நேரா திறைவி நெஞசொடு கிளததல எ - து இவ்வாறு கூறக்கேட்ட தலைவி இயையாது தன னெஞசொடு கூறுதல.

விடவாா கணைவிழி மெலலியன மாதரை மேதினியோா
மடவா ரொனறுரை வாயமைநெஞ சேதஞசை வாணனவெறபில்
கடவா ரணநதிரி கஙகுனங கணணனன காதலாமுள
பிடவாா சிறுநெறி வாயவரல வேணடினா பெணணணஙகே

இ - ள். நெஞசே ! தஞசைவாணன பகைவரைபபோல மதமபொழி யும யானைதிரியுங கஙகுலில முடபிடவாாநத சிறுநெறியிடதது நஙகண போறசிறநத காதலா வர அணஙகுபோலும பெண விருமபின ளாதலான, விடமபொருநதிய நெடிய கணைபோலும விழியையும மெலலிய இய லினையு முடைய மாதரை உலகினுளளோா மடவாரொன்று கூறுமுரை 'வாயமைதானே ! எ - று.

'கணைவிழி' - உவமைததொகை. மடவாா - அறிவிலாா. வாயமை - உணமை. கடவாரணம - மதவாரணம. பிடவு - ஓா மரம சிறுநெறி - அருநெறி 'பெணணணஙகு' - பினமொழி நிலைபல. (கஎ0)

## நேரிழை பாங்கியொடு நேர்ந்துரைத்தல்.

நேரிழை * * * துரைததல. எ - து. நெஞசொடு கூறிய தலைவி பாஙகியோ டுடனபடடுக கூறுதல.

வெங்குல வாரண மேற்றவர்க் கேநல்கி வேற்றரசர்
தங்குல வாழ்வு தவிர்த்தருள் வாணன் றமிழ்ச்சிலம்பில்
கங்குல வாவினர் காதல ராயிற் களிபயந்த
கொங்குல வாவலர் சூழ்குழ லாயென்கொல் கூறுவதே.

இ - ள். வெவ்விய கூட்டமாகிய யானைகளை யிரப்போர்க்குக் கொடுத்துப் பகைவேந்தர் தங்குலத்தினுள்ளோர் வாழ்வெல்லாந் தவிர்த்தருள் வாணன் தமிழ்ச்சிலம்பிடத்து வண்டுகட்குக் களிப்பைக்கொடுத்த மணம் வாடாத மலர்சூழ்ந்த குழலாய்! காதலர் இரவுக்குறியைக் காதலித்தாராயின் யான் மறுவாரதனைக் கூறுவதென்? எ - று.

எனவே, — நேர்ந்தமையாயிற்று.

குலம் - கூட்டம். தமிழ்ச்சிலம்பு - பொதியமலை. களி - களிப்பு. களிப்புப் பயந்த மணம் என்றதனால் வண்டு வருவித் துரைக்கப்பட்டது. கொங்கு - மணம். உலவா - வாடா. (௧௭௧)

**நேர்ந்தமை பாங்கி நெடுந்தகைக் குரைத்தல்.**

(இது வெளிப்படை.)

பரவாத வண்ணம் பரவியும் பாதம் பணிந்துநெஞ்சம்
கரவாத பொன்னைநின் காரண மாகக் கயிலையென்றே
வரவா தவனஞ்சும் வெண்மா ளிகைத்தஞ்சை வாணன்வெற்பா
இரவாத வண்ணமெல் லாமிரந் தேனிவ் விரவிடையே.

இ - ள். வெண்சாந்து பூசியவதனால் கயிலாயமலையென்று கதிரோன் வருதற்கஞ்சும் மாளிகையுடைய தஞ்சைவாணன் வெற்பனே! நெஞ்சத்தில் நின் காதலை மறையாத பொன்னை நின் பொருட்டாகப் புகழாத வண்ணமெல்லாம் புகழ்ந்தும், பாதங்களைப் பலகாற் பணிந்தும், இவ்விடையிருளின்கண் அவள் மனமியைதற்கு இரவாத முறைமையெல்லாம் இரந்தேன். எ - று.

பரவுதல் - புகழ்தல். கரத்தல் - மறைத்தல். பொன் - திருமகள். ஆதவன் - கதிரோன். வண்ணம் இரண்டும் முறைமை. (௧௭௨)

**குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல்.**

குறியிடை நிறீஇத் தாய்துயி லறிதல் எ - து. பாங்கி தலைவனைக் குறியிடத்து நிறுத்தித் தாயினது துயிலையறிதல்.

---

மாகந் தரியலர்க் கீந்தருள் வாணன்றென் மாறைவெற்பில்
மேகந் தருமின் னிடையன்ன மேவினர் நாணமலர்வேய்
நாகந் தழுவுங் குடமலையின் வாய்நடு நாளிரவில்
சோகந் தவிர்விலர் வாய்த்துயி லாதென் னேர்கைகளே.

இ - ள். தனனைச சேராத பகைவாககு வானுலகத்தை யளித்த ருள் வாணன தெனமாறை வெற்பிடதது மேகஙகொடுககும் மின்போனற விடையையுடைய அனனமே! மணநாணமலா பொருந்திய புன்னுகத தைத தழுவுங குடமபை யிடததில இரவில இடையாமதது மயிலகள துன்பததை நீஙகாவாயத துயிலாததெனை? எ - று

மாகம - வானுலகு. தரியலா - பகைவா. குடமபை - கூடு. வேய்தல - பொருநதுதல. சோகம - துன்பம. தோகை - மயில. (கஎ௩)

இறைவிக் கிறைவன் வரவறி வுறுத்தல்.

(இது வெளிப்படை.) வரவு-குறியிடதது வரவு.

கநதார நாணுங கனிநதசொல லாயகங கடிமனைககே
வநதார வாவின் பெருமையி னுறறஞைை வாணனவெற்பில
கொநதார சோகங தருஞசெழும போதுங கொழுநதழையும
தநதா ரகலந தழீஇயக லாது தணநதவரே

இ - ள். தஞைசவாணன வெறபில கநதாரம நாணும திததித்த சொலலாய! கொத்தாாநத வசோகததரு தரபபட்ட செழுமபோதுங கொழுநதழையுந தநது நிறைநத முலையைத தழீஇ மன்நததாற பிரியாது, மெயயாற பிரிநத வாதரஙகொணட அவாவின பெருமையினுல நமது விளஙகிய மனைககு வநதாா. எ - று.

கநதாரம - ஓா பண. கனிதல - திததிததல. கடி - விளக்கம் கொழுநது - கொதது அகலம் - ஆகுபெயா தணததல - பிரிதல. (கஎ௪)

தலைமகளைக் குறியிடத்துக் கொண்டுசேறல்.

(இது வெளிபபடை.)

மினனே யயிலொடு மினவிளக காவநத வெறபனைநாம
பொனனே யெதிாகொளப போதுகம வாபுவி யேழினுககும
தனனேயம வைததருள சநதிர வாணன றமிழசசிலமபில
நினனே ரியனமயில கணமெயி னுக நிழலகததே

இ - ள். ஏழபுவிககும தன்னனபைவைத தாளப்பட்ட சநதிரவா ணன தமிழசசிலமபி னிருககபபட்ட பொன்போன்றவளே! நினனியலுககு நேராகிய மயிலகணணுறஙகும புனனுக நிழலகதது ஒளிபொருநதிய வேலு டனே மினனும விளககாக கஙகுலில வநத வெறபனை நாமெதிாகொள் ளப் போதுகம வா. எ - று.

மின் - ஒளி. ஏயதல் - பொருந்துதல. அயில - வேல. பொன் - ஆகுபெயா. நேயம - அனபு தமிழச்சிலமபு - பொதியமலை. இயல - சாயல. 'நினதியல' என மாறுக. (கஎ௫)

### குறியுய்த் தகறல்.

குறியுய்த் தகறல் என்பது. பாங்கி தலைமகளைக் குறியிடத்துச் செலுத்தித் தானகன்று போதல்.

---

மந்தார மன்னகை வாணன்றென் மாறை மயிலனையாய்
நந்தா வனப்பொய்கை நான்கொய்கு வேன்குழ லுணுங்கங்குல்
கொந்தார் தெரியனின் செங்கனி வாயொடுங் கொங்கையொடும்
பைந்தா மரையையுஞ் சேதாம் பலையும் பகைப்பித்தந்த

இ - ள். மந்தாரத் தருப்போன்ற கையையுடைய வாணன் தென் மாறைநாட்டு மயில் போன்றவளே! குழலுக்கு நாணுங் கூங்குலானது கொத்தார்ந்த மாலையணிந்த நின் செங்கனிவாயொடுங் கொங்கையொடுஞ் சேதாம்பலையும் பைந்தாமரையையும் பகைக்கச் செய்த தாதலால் கேடில்லாத சோலையிடத்திருக்கும் பொய்கையிற்போய், நான் அப்போது களைக் கொய்வேன், கொய்துவருமளவும் இவ்விடத்து நிற்பாயாக. எ - று.

மந்தாரம் - பஞ்சதருவிலோர் தரு. நந்தா - கெடா. வனம் - சோலை. கொந்து - கொத்து. தெரியல் - மாலை. சேதாம்பல் - அரக்காம்பல்.

இவ்வாறு இரவுக்குறிக்கண் தலைவியைத் தமியளாய் நிறுத்திப் பாங்கி நீங்கில் இடையிருளில் அச்சமின்றித் தலைவி நிற்பளோ வெனின், தான் பயின்ற இடமும் தன் னாயத்தோ டொக்கு மாதலானும், தலைவன் ஓர் புடை அருகு நிற்றலானும், பாங்கியும் அப்பால் பொய்கையில் நிற்றலானும் அச்சமின்றி நிற்பளென் றுணர்க. (௧௭௬)

### வண்டுறை தாரோன் வந்தெதிர்ப் படுதல்

(இது வெளிப்படை.)

முதிரா முலையிப் பனியந்த கார் முனிபவல்ல
கதிரா யிரமில்லை யேழ்பரித் தேரில்லைக் காவல்வெய்யோற்
கெதிரா தல்சோமற் கிலைபவதன் றேனுமில் யார்திறந்தார்
மதுரா புரித்தமிழ்த் தோர்வாணன் மாறை வனத்துவந்தே

இ - ள். என்றும் முதிர்ந்து சாயாத முலையையுடையாய்! இந்தப் பனிபொருந்திய அந்தகாரமாகிய பூட்டடைத்த திறப்பதற்குத் திறவுகோலாகிய கதிராயிரமில்லை, திறப்பவனைக் கொண்டுவரும் ஏழ்பரியையுடைய தேரில்லை, திறக்குங் காவலையுடைய வெய்யோனுக்கெதிராய்வந்து திறத்தல் சோமற்குப் பொருவதன்றே யாதலானும், இல்லாகிய தாமரைமாளிகையை மதுராபுரித் தமிழை யாராய்ந்த வாணன் மாறைநாட்டிலிருக்கும் பொய்கை நீரில் வந்து திறந்தவாயார்? எ - று.

அந்தகாரம் - இருள். பரி - குதிரை. வெயயோன் - சூரியன். சோமன - சநதிரன. இயல்வது - பொருநதுவது வனம - நீா. 'முதிரா முலே' என்றதற்கு 'நுடமில' என்றது ஒருமைப்பனமைமயக்கம் (கஎஎ)

**பெருமகள் ஆற்றின் தருமைநினைந் திரங்கல்**

பெருமகள * * * திரங்கல் எ - து. தலைவி தலைவன வரும வழியின தருமையை நினைநதிரஙகல.

செழியன கயலைத திசைவைதத வாணனறென் மாறையெனமேல
கழியன புடையநின காலகணக ளாகக் காமபயிலும
குழியன்றி யுமவெஞ் சுழியொனறும யாறுங குழீஇகொடிதாம
வழியனப நீயெஙங னேவநத வாறிம மழையிருளே

இ - ள். அனபனே! பாணடியனது கயறகொடியைத திசையெட்டினும நிறுததிய வாணனுடைய விருககினற என மிகுநத அனபுடைய நினது காலகளே கணகளாக, முதலைகள நெருஙகுங குழிநத மடுவலலாமலும வெவ்விய சுழிபொருநதும அருவியாறுங கூடிக கொடியதாம வழியில இமமழைக்காலிருளில நீ வநதவா றெவவாறு? எ - று.

செழியன - பாணடியன. கயல் - ஆகுபெயா கழி - மிகுதி. காலகண்களாதல இருடசெறிவால் அககண செறி செலலாதாகலான காலறிவாற் றடவிவருதல. காாம - முதலை பயிலுதல - நெருஙகுதல. குழீஇ - கூடி. (கஎஅ)

**புரவலன் தேற்றல்.**

புரவலன தேறறல எ - து தலைவியைத தலைவன் தேறறல.

வெயிலுந தரவிநத மெனமல ரனனமும விநதைவெறறி
மயிலும பயில்புயன வாணனறென மாறைநின வாளவிழிபோல
அயிலுங குயினமொழி நினனிடைபோ னமினனு மாடனிகள்
பயிலுந தொடைநின குழலபோ லிருளைப பருகினவே

இ - ள். குயிலபோன மொழியாய! வெயிலினுலே முறுக்கைத தள்ளபபட்ட தாமரை மலரிலிருககுஞ் செலவததிருவும, விநதையாகிய வெற்றிததிருவும, பழகிய புயததையுடையவனுகிய வாணன மாறைநாட்டு நின் ஞெளியையுடைய விழியையொக்கும் என கைவேலும, நினனிடையையொக்கும் மின்னும, ஆடிமே வணடுகள செறிநத மாலை சூழநத நின் குழலை யொக்கும இருளைக் குடிததன வாதலால யான அசசமினறி வநதேன. எ - று.

உநதல - தளளுதல அரவிநதம் - மென்மலா. அன்னம - செல்வத்திரு; விநதை - வெறறிமயில - வெறறிததிரு பயிலுதல - பழகுதல. அயில் - வேல். பயிலுதல் - செறிதல. பருகுதல - குடிததல். (கஎகூ)

### புணர்தல்.

(இது வெளிப்படை.)

சூழ்நீ ரலைகடற் றொல்லுல கேழினுந் தோற்றும் வண்மைக்
கழிநீடு மாடக மேருவின் மீதினுங் காவல்கொண்டு
வழிநீள் புகழ்கொண்ட வாணன்றென் மாறை வரையின்மலர்ப்
பொழினீழ லும்ப ரமுதனை யாமப் புணர்ந்தனமே

இ - ள். சூழ்ந்த நீரும் அரநீரி லலையும்பொருந்திய கடல் சூழ்ந்த பழைய வுலகேழினும் புரக்குஞ் செல்வமிகுதி நீண்ட பொன்மேருவு மீதிலுங் காக்குந் தொழிலைக்கொண்டு, அத்தொழில் வழியே நீண்ட புகழைக்கொண்ட வாணன் தென்மாறைவெற்பிற் றோன்றிய மலர்ச்சோலை நீழலில் தேவாமிர்தம் போல்வாளை யாம் புணர்ந்தனம். எ - று.

யாம் - தோன்றா எழுவாய். 'சூழ்நீரலை' என்புழி உம்மைத்தொகை. தொல்லுலகு - பழைய வுலகு. வண்மை - வளம். கழி - மிகுதி. ஆடக மேரு - பொன்மேரு. உம்பரமிர்தம் - தேவாமிர்தம். (௧௮௦)

### புகழ்தல்

(இது வெளிப்படை)

மண்ணார் பெரும்புகழ் வாணன்றென் மாறை வரைபயிலுந்
தண்ணார முங்கமழ் சார்வருஞ் சாரலிற் சார்ந்துறையும்
பெண்ணா ரணங்கன்ன நின்முகந் தான்கண்ட பின்னுமுண்டோ
கண்ணார் தடங்களின் வாயொடுங் காத கமலங்களே.

இ - ள். நிலவுலகம் நிறைந்த பெரிய புகழுடைய வாணன் தென் மாறைவரையிற் பயிலுந் தட்பமாய சந்தனமும் நாறுகின்ற பிறரொருவர் சார்தற்கரிய மலைச்சாரலிற் சார்ந்துறையும் ஆரணங்குபோன்ற பெண்ணே! நின் முகத்தைக்கண்ட பின்னும் இடமார்ந்த பொய்கைகளில் வாய்குவியாத கமலங்களுமுண்டோ! இல்லை. எ - று.

'நின் முகத்தை மதியமென்று கருதி வாயொடுங்காதகமலமுண்டோ' எனினும் அமையும். மண் - நிலவுலகம். ஆர்தல் - நிறைதல். ஆரம் - சந்தனம். தென்மாறைவரை - பொதியம். 'ஆரணங்கன்னபெண்' என இயையும். பெண் - அண்மைவிளி. கண் - இடம். ஒடுங்கல் - குவிதல்.

### இறைமக ளிறைவனைக் குறிவரல் விலக்கல்.

(இது வெளிப்படை.)

சூரற் கதிர்முத்த வார்முலை யாவியின் சூழ்கனி
வாரற்க நீதனைசை வாணன்வெற் பாவய மாவழங்கும்
வேரற் கடு[illegible]கவலையி னூடு வெயில்வெறுக்கும்
சாரற் கருமைய தாவிருள் கூருமென் சாரலிலே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பனே! வயமாவாகிய சிங்கம் புலி யானை இவைகள் சஞ்சரிக்கும் வேரல் நெருங்கிய கடியவாகிய கவர்வழி யாய், உள்ளே வெயிலவன் கிரணங்கட்கும் சோதற் கருமையுடைத்தாத லால், எக்காலமும் இருளமிகும் ஏஞ்சாரலிடத்து நகைத்தல் போன்ற கதிரையுடைய முத்தமுங் கச்சும் பொருந்திய முலையெனனும் வாவியில் முழுக நீ தனியே வாரற்க. எ - று.

மூரல் - நகை. கதிர - கிரணம். 'முத்தபவார' எனபுழி உம்மைத் தொகை. வாரமுலை - கச்சிறுக்கியமுலை. ஆவி - வாவி. வயமா புலி, யானை, சிங்கம் மூன்றிறகும் பொதுவாதலான இம மூனறையுங் கூறப பட்டது. வேரல் - மூங்கில். கவலை - கவர்வழி. வெயிலவன் - ஆகு பெயர். கர - மிகுதி (கஅ௨)

இறைவியை இல்வயின் விடுத்தல்.

இறைவியை இலவயின விடுத்தல எ - து. தலைவன தலைவியை மனை யிற செலலெனவிடுத்தல.

மலலையம போரவென்ற வாணனறென மாறைநின மாளிகையாம
தொலலையம போருகந் தேடவுங் கூடுந் தொடித்தளிரால
முலலையம போது முகையுங்கொய் யாது முகிழ்முலையாய
செலலையம பொறபளிங கிறறலம பாதஞ் சிவபபிககவே

இ - ள். மலலை யென்னும் ஓருரிடத்தில் போரவென்ற வாணன தெனமாறைநாட் டிருக்கின்ற முகைபோன்ற முலையாய! நின மாளிகை யாகிய பழமையுடைய தாமரையானது தேடவுமமையுமாதலால தொடி செறிந்த தளிரபோன்ற கையினுல முலலைபபோதுந் தனது முகையுங் கொயயாது அழகிய பளிங்குத்தலத்தைப பாதமானது சிவபபேறச்செயயச் செலலககடவை எ - று.

மல்லை - ஓரூர். 'தொடித்தளிர' - ஆகுபெயா. அம் - சாரியை. அம் - அசைநிலை. செல - செலலக்கடவை ஐ-சாரியை. பொன - அழகு. 'தலம' என்புழி இரணடனுருபு தொககது. (கஅ௩)

இறைவியை யெய்திப் பாங்கி கையுறைகாட்டல்,

(இது வெளிப்படை.)

முகையா யலராய் முலைக்குநின வாய்க்கு முறைமுறையே
பகையா முளரியுஞ் சேதாமப லுமிவை பைங்கழுநீர
வகையார தொடைபுனை வாணனறென மாறையின மெளவலன்ன
நகையா யவையிவை நினகுழற காமுலலை நாணமலரே.

இ - ள். பசிய கழுநீர வகையாாந்த மாலையணிந்த வாணன் தென மாறைநாட்டின் மெளவலபோன்ற நகையினையுடையாய! முகையாயல

ராய் முலைக்கும் நின்வாய்க்கும் நிரனிறையாய்ப் பகையான தன்மையை யுடைய தாமரையும் செவ்வாம்பலும் இவை கண்டருள்; முல்லைநாண் மல ராகிய இவையும், முன்காட்டியஅவையும் நின் குழற்குச் சூடுதற்காமென்று கொண்டுவந்தேன. எ - று.

முளரி - தாமரை. சேதாம்பல் - செவ்வாம்பல். கழுநீர் - குவளை. மௌவல் - முல்லை. இரவுக்காலமாதலால தாமரையை முகை யென்றும், ஆம்பலையும், முல்லையையும் மலர் என்றும் கூறியவாறெனறுணர்க.(கஅச)

### இற்கொண் டேகல்.

இற்கொண் டேகல் எ - து. தலைவியைப் பாங்கி மனையிடத்திற் கூட்டிப் போதல்.

ஒல்கா விருண்மணந் தொல்கரும் போழ்தி னுணர்ந்துநம்மை
நல்கா வியல்பனனை நாடினு நாடு நடந்தருணீ
மல்காவி சூழ்தஞ்சை வாணன்றென் மாறையின் வள்ளையின்மேல்
செல்காவி யன்ன விழித்திரு வேந்தின் றிருமனைக்கே

இ - ள். நிறைந்த பொய்கை சூழ்ந்த தஞ்சைவாணன் தென்மாறை யில் வள்ளையின்மேற் செல்லுங் காவிபோலக் காதின்மேற்செல்லும் விழி யையுடைய திருவையொப்பவளே! நம்மை நல்கும் அவ்வியல்பினையுடைய அன்னை சுருங்காத இருளைப்பொருந்திச் சுருங்குதற்கரிய இராப்போதிற் றுயிலெழுந்து தேடினுந் தேடுமாதலினால், நின் திருமனைக்கு நீ நடந்தருள்.

ஒல்கா - சுருங்கா. உணர்தல் - துயிலெழுதல் நல்கல் - பயத்தல். ஆவியல் - சட்டுநீண்டது. மல்கல் - நிறைதல். ஆவி - பொய்கை வள்ளை - வள்ளைக்கொடி. காவி - நீலம். (கஅரு)

### பிற்சென் றிறைவனை வரவு விலக்கல்

பிற்சென் *** விலக்கல் எ - து பாங்கி தலைமகளை மனையிற் சேர்த்த பின்பு தலைமகன்பாற் சென்று இவ்விருளினில் நீ வாரலென்று வரவு விலக்கிக் கூறுதல்.

வெம்போர் முருகென்ன வேல்வல் லோனதி வெற்பிங்ஙனே
வம்போ நகரொல்லி வாரல்வெற் பாமரு வாவரசர்
தம்போர் கடந்த தடம்புய வாணன் றமிழ்த்தஞ்சைநாட்
டம்போ ருகமல்ல வோதிருக் கோயி லணங்கினுக்கே

இ - ள். வெற்பனே! பகைவேந்தர்தம் போரைக்கடந்த வாணன் தமிழ்த்தஞ்சை நாட்டினக ணுள்ள அணங்கு போல்வாட்குத் திருக் கோயில் அம்போருக மல்லவோ! ஆதலினால், வெம்போரில் முருக வேளென்று சொல்ல வேலை வலத்திலே யேந்திப் பயனின்றிப் புதுமை யாவரும் நக்கிடத்து இராப்பொழுதில் இவ்விடத்தில் நீ வாரல். எ - று.

முருகு - முருகவேள். வலன் - வலப்பக்கம். வம்பு - புதுமை. ஓர்தல் - ஆராய்தல். எல்லை - இராப்போது. 'அல்லவோ' என்னும் ஓகாரம் எதிர்மறை. அம்போருகம் இராக்காலத்தில் கதவு திறவாதாதலால் தலைவி மனைவிட்டு வெளிவருதல் அரிதெனக் குறிப்பால் அறிவித்தவா றுணர்க. (கஅரு)

## பெருமகன்மயங்கல்

பெருமகன் மயங்கல் எ - து. பாங்கி இவ்வாறு இரவுக்குறி விலக்கிய சொற்கேட்டுத் தலைமகன் மயங்கிக் கூறல்.

வஞ்சங் கலந்த கலிவென்ற வாணன்றென் மாறைவெற்பில்
தஞ்சுங் கலந்தசொற் றையலும் யானுந் தனித்தனியே
நெஞ்சங் கலந்த நிலைமையெல் லாங்கண்டு நீயமுதின்
நஞ்சங் கலந்தனை யேநனை வார்குழ னன்னுதலே

இ - ள். வார்ந்து அரும்பை முடித்த குழலையும், நல்ல நுதலையு முடையாய்! வஞ்சனை கலந்த கலிகாலத்தைவென்ற வாணன் தென்மாறை வெற்பில் பற்றுக்கோடாகக்கலந்த சொல்லையுடைய தையலும் யானுந் தனித் தனியே நெஞ்சங்கலந்த நிலைமையெல்லாங்கண்டு, நீயுண்ணு மமுதில் நஞ்சங் கலந்தாற்போலும் வாரலென்னுஞ் சொல்லைச் சொல்லினை. எ - று.

தஞ்சம் - பற்றுக்கோடு. நனை - அரும்பு. வாரல - சிப்பிடுதல். ()

## தோழி தலைமகள் துயர்கிளந்து விடுதல்.

தோழி தலைமகள் துயர்கிளந்து விடுதல் எ - து. தோழி தலைமகனுக்குத் தலைமகள் துயரைக் கூறி நீ ஊர்போய்ச் சேர்ந்த செய்தி யாம் அறியும்படி குறிசெய்யென்று கூறிவிடுதல்.

முன்னூ ரரவுந் தெரியா விருணெறி முன்னிநையும்
மின்னூர் புனையிழை மின்னனை யாளுய்ய வேலின் வெம்போர்
மன்னூர் களிறு திறைகொண்ட வாணன்றென் மாறையன்ன
நின்னூ ரகம்புகுந் தாற்குறி காட்டு நெடுந்தகையே

இ - ள் நெடுந்தகையே! முன்னே யூரப்பட்ட அரவுந் தெரியா விருள் செறிந்த நெறியென்றதனை நினைந்து நையும் ஒளியூர்ந்த அணியை யணியும் மின்போன்றவ ளுய்யும்பொருட்டு, வேலினால் வெய்ய போரிற் பகைவேந்த ரூரப்பட்ட களிற்றைத் திறையாகக் கொண்ட வாணன் தென்மாறைபோன்ற நின்னூருட் புகுந்தால், ஓரடையாளங் காட்டுவாயாக. எ - று.

'அரவும்' என்புழி உம்மை சிறப்பும்மை. முன்னி - நினைந்து. மின் - ஒளி. 'இழைபுனை' என இயையும். புனைதல் - அணிதல். இழை -

அணி. மன் - வேந்தன். குறி - அடையாளம். காட்டுதல் - கோடுகுறித்தல், சங்கு குறித்தல் முதலியன. (க௮௮)

**நீருமகட் புணர்ந்தவன் கூறல்.**

(இது வெளிப்படை.)

இருங்குன் றனமதி லெம்பதிக் கேக லெளிதுசெம்மை
தருங்குங் குமமுலைத் தையனல் லாய்தஞ்சை வாணன்வெற்பில்
கருங்குஞ் சரவினம் வெண்சிங்க வேறஞ்சுங் கங்குலினம்
மருங்குஞ் சுடர்விளக் காமட வார்குழை மாணிக்கமே.

இ - ள். சிவப்பு நிறத்தைத் தருங் குங்குமம் பணிந்த முலையையுடைய தையனல்லாய்! தஞ்சைவாணன் வெற்பில் கரிய யானைக் கூட்டங்கள் வெண்சிங்க வேற்றை யஞ்சுங் கங்குலில் எட்டுத்திக்கும் மடவார்தங் குழையி லணிந்த மாணிக்கம் ஒளி பொருந்திய விளக் கேற்றினாற்போல வருமாத லால், பெரிய மலைபோலும் மதில்சூழ்ந்த எம்பதிக்கேக லெளிது நீ கவ லறக. எ - று.

எனவே,— தலைவி யென்னெஞ்சி லிருக்கின்றா ளாதலின் அவள் குழைமாணிக்க வொளியினால் இருள் நீங்குமென்றவாறாயிற்று.

இருமை - பெருமை. குஞ்சரம் - யானை. சுடர் - ஒளி. குழை - காதணி. 'சிங்கவேறு' என்புழி இரண்டனுருபு தொக்கது. (க௮௯)

இறையோ னிருட்குறி வேண்டலும், நெறியி னெளிமை கூறுதலும், தலைமக னவனூட்டணியியல் விளைதலும், பாங்கி இறைவிக்கு இறையோன் குறியறி வுறுத்தலுமாகிய நான்கும் வேண்டற்குரியன. பாங்கி நெறியின தருமைகூறலும், இறைமகள் இறைவனைக் குறிவரல் விலக்கலும், பாங்கி இறைவனை வரவு விலக்கலுமாகிய மூன்றும் மறுத்தற்குரியன. பாங்கி யவனூட்டணி யியல் வினாதலும், அவர்க்கு தனூட்டணி யியல் பாங்கி சாற்றலும், நேரிழை பாங்கியோடு நேர்ந்துரைத்தலுமாகிய மூன்றும் உடன் படற்குரியன. தலைமகள் நேர்ந்தமை பாங்கி தலைமகற்குணர்த்தலும், குறி யிடை நிறீஇத் தாய்துயில் லறிதலும், இறைவிக்கு இறைவன் வரவறி வுறுத்தலும், அவட்கொண்டு சேறலுமாகிய நான்குங் கூட்டற் குரியன. தலை மகன் தலைமகளை யெதிர்ப்படுதலும், தோற்றலும், புணர்தலுமாகிய நான்குங் கூட்டற்குரியன. தலைமகன் தலைமகளையெதிர்ப்படுதலும், தேற்றலும், புணர் தலுமாகிய மூன்றும் கூடற்குரியன. தலைமகள் புகழ்தலும், கையுறைகாட் டலுமாகிய இரண்டும் பாராட்டற்குரியன. தலைமகள் தலைவியை இல் வயின் விடுத்தலும், பாங்கி தலைமகனை இறக்கொண்டேகலுமாகிய இரண் டும் பாங்கி கூட்டற்குரியன. நேரிறைவி நெருசொடுமொழிதலும், தலை மகள் ஆற்றின தருமைநினைந் திரங்கலும், பெருமகன் மயங்கலும், தோழி

தலைமகள் துயர்கிளந்து விடுத்தலுமாகிய நான்கும் முயங்கற் குரியன. முயங்கல் - வருந்துதல். பாங்கி குறியுய்த்தகறலும், திருமகட் புணர்ந்தவன் சேறலுமாகிய இரண்டுமே நீங்கற்குரியன.

இத்துணையும் ஏழாநாட் செய்தியென் றுணர்க.

இரவுக்குறி - முற்றும்.

---

## இரவுக்குறி யிடையீடு

அஃதாவது, எட்டாநாள் இரவுக்குறிக்கண் வந்த தலைமகன் அல்ல குறிப்பறிதலால் இடையீடு பட்டுப் போதல்.

* " அல்ல குறிவருந் தொழிற்கருமை யென்றுங்
கெலவிக் குறையிடையீ டிருவகைத் தாகும்." — என னுஞ் சூத்திரவிதியான் எலவிக்குறை யிடையீடு இருவகைப்படும். அல்லகுறி எ - து. தலைவியால் நிகழ்த்தப்படுவன வாகிய புள்ளெழுப்பல் முதலியன. எனவே,— நீரிற் கல்லெறிதல், இளநீர்வீழ்த்தல் முதலியனவுங் கொள்க. வருந்தொழிற் கருமை எ - து. தலைமகன் வருமென்ற தொழிற்கருமை.

அல்ல குறி

இறைவிக் கிறைவ னிறைவர்வா வுணர்த்தல்.

(இது வெளிப்படை.)

கயலவென்ற வுண்கண்ணி காரணம் யேதுகொல் கைதையங்கான
அயனின்ற புன்னையி னன்னமெ லாமட லாழியங்கைச்
சயமங்கை தன்பெரு மானறனுசை வாணன் றரியலாபோல
துயரம் பெருகி யிராவொரு போதுந் துயின்றிலவே

இ - ள். கயலை வென்றுமையுண்ட கண்ணுய ! போர்புரியுஞ் சக்கரத்தைத் தரித்த சயமங்கைக் கிறைவனாகிய தஞ்சைவாணன் றரியலார்போற் கைதையங்காட்டின் அயலிருக்கும் புன்னையி னன்னமெல்லாந் துயரம் பெருகி, இவ்விரவின்கண் ஒரு நாழிகையுந் துயின்றில, காரணம் யாதோ ! தெரிந்திலனே. எ - று.

கைதை - தாழை. புன்னை - புன்னைமரம். அடல் - போர். சயமங்கை - வெற்றிமாது. போது - ஏழ்நாழிகை. உம்மை—சிறப்பு. (க௬o)

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், ரு௬.

## தான்குறி மருண்டமை தலைவியவட் குரைத்தல்.

தான்குறி * * * குரைத்தல் எ - து. தலைவி தானல்ல குறியிடத்து நின்று தலைவனைக் காணமையால் மீண்டு விடியற்காலத்து வந்து பாங்கி யுடன் கூறல.

அல்லகுறிப்படுங் காரணமெனனை யெனின், தலைவன் முன்னோநாளிர வில் புனனைமரத்தின் கீழ்நின்று அதனமே லிருக்கும் மயிலகளை யெழுப்ப, அக்குறியிடத்து வந்து நீங்கிய தலைவி மற்றநாள் குறிக்கு வருவளென்று தலைவன் வந்து நிற்க, தலைவன் வருங்கால அணிதது அல்லது சேயதது அல்லதாய ஓர் புனனை மரத்திருந்த அன்னங்கள் தறசெயலா லெழுந்து ஆரவாரிக்க, அது தோழியாலறிந்த தலைவி அவ்வனனங்களெழுந்த புன் னைக்கீழ் வந்து நின்று போயினள். தலைவனும் மயிலிருக்கும் புன்னைக்கீழ் நின்று தலைவியைக் காணுது, இருபுனனைக்கும் நடுவிருந்த தாழைமரங் களிலே யோர் மரத்தில் தானவந்து போயதற கடையாளமாகத் தான ணிந்த மாலையை வைத்துப் போயநாளில இருவரும் அல்ல குறிபபட்ட காரணமென்றுணர்க.

---

பேசத் தருவதொன் றன்றுகண் டாயபிறி தோர்குறியை
நேசத் தவர்குறி யென்றுசென் றியானகுறி நின்றுவந்தேன்
வாசத் தமிழ்புனை தோளுடை யானறஞ்சை வாணனனூர்
தேசத் தவருமெய் தாவெய்ய நோயெய்திச் சேயிழையே.

இ - ள். சேயிழையே! தலைவர் நிகழ்த்த நிகழ்ந்ததலலாதாயப் பிறி தொன்று னிகழ்ந்த அடையாளத்தை நேசத்தையுடைய தலைவர் நிகழ்த்திய அடையாளமாக வெண்ணிப்போயக் குறியினின்றுட மணம்பொருந்திய தமிழ்மாலைபுனைந்த தோளுடையானுகிய தஞ்சைவாணன் பகைவர்தேசத்தி லுளளோரும் எய்தாத கொடிய துன்பத்தை யெய்தி வந்தேன், அதனை பகு சொல்லத்தருவதொன்றன்று எ - று.

கண்டாய - முன்னிலையசை. குறி - அடையாளம் நேசத்தவர் - அன்புடையவர். வாசம் - மணம். ஒன்னூர் - பகைவர். (கசுக)

## பாங்கி தலைமகன் தீங்கெடுத் தியம்பல்.

பாங்கி தலைமகன் தீங்கெடுத்தியம்பல் எ - து. பாங்கி தலைவன பொல லாங்கை யெடுத்துக் கூறல

வடியோ வெனுங்கண் மடந்தைநல லாய்தஞ்சை வாணனைவந் தடியோ மெனச்சென றடையலர் போலயா கினறநினைக்கத்
தொடியோட வெங்கபணைத் தோளிணை வாடத் தொழிலபடிந்த
கொடியோர் துணிந்துசெய் தார்குறி யார்குறிப் பக்கமே

இ - ள். வடுவேர்! கண்ணே! என்றையந் தருந கண்ணேயுடைய மடந்தை நல்லாய! தருசைவாணனை வநதியா மடியேமெனச் சொலலி யடையாதவாபோல அயாகின்ற கின கைததொடி யோடியபோக மெல் லிய மூஙகிலபோனற தோளிணைவாடுந தொழிலைகொடுதத கொடியோா குறியை நமககுர துணிநதுசெயதாா. எ - று.

எனவே,— ஈாங கருதாத அடையாளத்தை நமககறிவிததுந தாம அக்குறி வாராதொழிநதாரொனறு தலைவன நீஙகு கூறியவாறெனறுணாக.

வடு - மாவடு. அடையலா - பகைவா. தொடி - வளை. பணை - மூஙகில. குறிததல - கருதுதல. (கககஉ)

## தலைவன் புலர்ந்து போதல்.

தலைவன புலாநதுபோதல எ - து. தலைவன் தானகுறிதத குறியி லிருநது தலைவியலல குறிபபடடு வாராமையாற புலாநது தன ஊாகுப் போதல.

தேனுறற வாகையந தாாததருசை வாணனைச சேரலாபோல
மானுறற பாாவை மயிலபொருட டாக வழிதெரியாக
கானுற்ற கானற கனையிருள வாயவரக கறழ்ததநீ
யானுறற நோயகளெல லாமபடு வாயினி யெனனெஞசமே.

இ - ள் எனது நெஞசமே! தேன்பொருநதிய வாகையநதாரணிநத தருசைவாணனைச சோாதவாகளபோல, மானபோலுறற பாாவையுடைய மயிலபொருட்டாக வழிதெரியாந காடுபோலபபொருநதிய சோலையிடத திற செறிநத இருளிலே வரக கறபிதத நீ யான உறற நோயகளெலலாம இன்று படுவாயாக எ - று

வாகையநதாா - வெறறிமாலை. சேரலா - பகைவா. ' மானுற்ற பார்வை' 'கானுறற கானல' இரணடும உவமைததொகை. ஈஙகு 'உறற' எனபதறகு 'வீமபுறு வெனறு செபபுறற தோாபகை' என்பதனை உதா ரணங காடடுவாருமுளாா. மயில் - ஆகுபெயா கானல - சோலை. கனை யிருள - செறிநதவிருள

இவ்வாறு புலநதுபோந தலைவன் தான்வநது குறியிடதது நினறுபோய தற கடையாளமாகத தன மாலையைத தாழைமேலவைததுப போயினு னென்பது மேலவருஞ செயயுளிற றோறறியதென்பது. (கககங)

இத்துறையும் எட்டாநாட் செய்தியென் றுணர்க.

---

## புலர்ந்தபின் வறுங்களந் தலைவிகண் டிரங்கல்.

புலாநதபின * * * டிரஙகல எ - து. ஒனபதாநாள் இருள் புலாநத பின் தலைவி வறுஙகளஙகண டிரஙகல.

தாதகை தண்டலை சூழ்தஞ்சை வாணன் றடந்துறைவாய்
நீதகை கொண்டெனமுன னின்றனை யேசெந் நிறக்கனிவாய்[ன்பூம
மேதகு முள்ளெயிற் றொணமுகைக் கொங்கைவெண டோட்டுமெ
கேதகை யென்னுநல லாய்கொண்கா மாலை கிடைத்ததெனறே

இ - ள். தாது செறிந்த சோலைசூழ்ந்த தஞ்சைவாணனது பெரிய வையைத்துறையிடத்துச் சிவந்த நிறத்தையுடைய கனியாகிய வாயையும், மேம்பாடுள்ள முள்ளாகிய வெயிற்றையும், ஒள்ளிய முகையாகிய கொங்கையையும், வெண்மைநிறம்பொருந்திய தோட்டையுமுடைய மெல்லிய பொலிவாகிய கேதகையென்னும் பெண்ணே! நினக்குத் தலைவர்சூட்டிய கழுநீர்மாலை கிடைத்ததென்று நீ யழகுகொண்டு என முன்னின்றனை யாதலால் நலவினை செய்தாய். எ - று.

கேதகையைப் பெண்ணென்று கூறிய வதனாற் கேதகை யுறுப்பெல்லாம் பெண்ணுறுப்பாகக் கூறியவாறு காண்க.

அகைதல் - செறிதல். தண்டலை - சோலை. தகை - அழகு. மேதகு - மேம்பாடு. கேதகை - தாழை. கொண்கர் - தலைவர். 'தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்' என்னுங் கிளவிச் செய்யுளில் கழுநீர் மாலை கூறிய வதனால், ஈண்டுக்கூறிய மாலை கழுநீர்மாலையென றறியப்பட்ட தாதலால், 'நீ நலவினைசெய்தாய்' என்பது சொல் லெச்சம். (கசச)

தலைவி தன்றுணைக் குரைத்தல்.

(இது வெளிப்படை.)

வரலிங் கரிய மயங்கிருள் யாமத்து வந்திளவேய்
நரலுஞ் சிலம்பா நவமணி யாழி நறவுண்வண்டு
முரலுந் தளையவிழ் மொய்ம்மலர்க் காந்தளுஞ் செம்மலர்க்கை
விரலென்று கொல்செறிந் தாரெறிந் தாழ்குழன் மெல்லியலே.

¶ [இது பிறசெய்யுட்கவி]

இதற்குச் செய்யுளிற் கவியில்லை என்னை, — பாடா தொழிந்தனவெனின், செய்யுட்பாடி நெடுங்காலமாதலால் முறையெழுதுவார் விட்டதும், ஏட்டிற் பழுதினு லிறந்ததுவுமாயிற்று. முன்னர்வருங் கிளவிகட்குச் சில விடங்களில் செய்யுட்களில்லா விடங்களுக்கும் இவ்வுரைப்படி கண்டுகொள்க. (கசரு)

தலைமகள் அவலம் பாங்கி தணித்தல்.

தலைமகள் அவலம் பாங்கி தணித்தல் எ - து. தலைமகளது துன்பத்தைப் பாங்கி தணித்துக் கூறல்.

---

¶ அம்பிகாபதிக் கோவை, செ. கசஅ.

பொய்யா தவர்தங் குறிபிழை யாரவர் பூண்டவன்பு
மெய்யாத றேறி யழுங்கன்மின் னேபுய வெற்பிரண்டால்
மையாழி வைய நிலையிட்ட வாணன்றென் மாறைவெற்பின்
உய்யான மென்கழு நீரநறு மாலை யுடைத்தலலவே

இ - ள். புயமாகிய மலையிரண்டினுல் கருங்கடல் சூழ்ந்த வுலகத்தை நிலைக்கச்செய்த வாணன தெனமாறை வெற்பிடத்தி லிருக்கு மின்னே! இச் சோலையிலிருக்குங் கைதையானது மெல்லிய கழுநீர்மாலை யுடைத்தா யிராதே இங்ஙன முடைத்தா யிருத்தலால், அவர்தங் குறியும் பொய்த்துப் போகாது, அவரும் பிழைத்தல் செய்யார், அவர் நம்மிடத்திற் பூண்ட மெய்யாதலைத் தெளிந்து இரங்கலை. எ - று.

புயவெற் பிரண்டால் வையநிலையிடல் - புயவலியால் நிலவுலகத் தைத் தாங்கி நிலைக்கச்செய்தல். தம - அவர்தம. பிழைத்தல் - தப்பல. வையம - உலகம். உய்யானம் - ஆகுபெயர். (ககசு)

இறைவன்மேற் பாங்கி குறிபிழைப் பேற்றல்.

இறைவன்மேற * * * பேற்றல் எ - து. ஒன்பதாநா ளிரவுக்குறிக்கு வந்த இறைவன்மேற பாங்கி அல்லகுறிப்பட்ட குற்றமேற்றுக் கூறல்.

விமழூர துயர்க்கடல வெள்ளத்துள் ளேயெமமை வீழ்வித்துநீ
எமமூ ரகத்து வரலொழிந் தீரெதி ரேற்றதெவ்வர்
தமமூரை முப்புர மாக்கிய வாணன் றமிழ்த்தஞ்சைபோல
உமமூர் வரத்துணிந் தேமனப கூறுமவ் வூரெமக்கே

இ - ள். அன்பரே! விமமுதல் நிகழ்ப்பட்ட துன்பக் கடலாகிய வெள்ளத்துள் எங்களை வீழ்த்தள்ளி யெமமூரிடத்து நீர் வருதலை யொழிந்தீர்தலால், எதிராய்ப் போரேற்ற தெவ்வர்தமமூரை முப்புரமாக வெரித்த வாணனது தமிழ்த்தஞ்சை போலும் வளமுடைய உமமூரிடத்து வரத் துணிந்தோம, அவ்வூர் இத்திசையென்று எமக்கு அறியக்கூறும. எ - று.

அன்பர் - அண்மைவிளி. விம்முதல் - துன்பம உள்ளடங்காது மேன் மேல் ஏறறி யெறறி வருதல. ஊர்தல் - செல்லுதல். எதிரேற்றல - போரேற்றல. தெவ்வர் - பகைவர். முப்புரமாகுதல - எரித்தல். (ககஎ)

இறைவிமே லிறைவன் குறிபிழைப் பேற்றல்.

இறைவி * * * பேற்றல் எ - து. தலைவிமேல் அல்ல குறிப்பட்ட குற்றமேற்றிக் கூறுதல்.

துறந்தன ளாகியம் போருகந் தன்னையித் தொல்வரைமேல்
பிறந்தன ளாகும் பெருந்திரு மாதெனப் பேதையரில்
சிறந்தன ளாதலிற் செந்தமிழ் வாணன்றென் மாறையன்னாள்
மறந்தன ளாயினும் யாமொரு போது மறவலமே

இ - ள். பெருந்திருமாது தாமரை மலரை நீக்கினவளாகி இந்தப் பழைய மலைமேல்வந்து பிறந்தனளாகுமென்று உலகஞ்சொல்லப் பெண்க ளிற் சிறந்தனளாதலின், செந்தமிழ்வாணன் தென்மாறை போன்றவள் மறந்தனளாயினும், யாமொருபோதும் மறந்திலம். எ - று.

அம்போருகம் - தாமரை. வரை - மலை. என - என்று சொல்ல. பேதையர் - பெண்கள். போது - நாள். (கஅ

**அவள் குறிமருண்டமை யவளவற் கியம்பல்.**

அவள் * * * கியம்பல் எ - து தலைவி குறிமயங்கியது பாங்கி தலை வற் குணர்த்தல்.

---

தனையா வரும்புகழ்த் தரும வாணன் றமிழ்த்தஞ்சைமான்
அனையா ளவள்குறி யாமெனத் தேறி நினைந் தல்லதொன்று
நினையா வருங்கங்கு லின்குறி யாவந்து நின்றதுநம்
வினையால் விளைந்ததென் றேவெறி தேயன்ப மீண்டனளே.

இ - ள். அன்பனே! தன்னை யாவரும் புகழ்க்கொடுக்கும் வாணன் தமிழ்த்தஞ்சை மான்போன்றவளாகிய அந்தத்தலைவி இது குறியாமென்று நினைந்து வருங் கங்குலிடத்து நீ நினையாவல்லதொரு குறி நின்குறியாய் வந்து தோன்ற நின்றது, நாம் முன்செய்த தீவினையால் விளைந்ததென்று பயனின்றி மீண்டனள். எ - று.

'இதுகுறியாம்' எனவும், 'நினைந்துவருங் கங்குல்' எனவும், 'நினையா வல்லதொன்று' எனவும் மாறுக. கங்குல் - இரா. வெறிதே - பயனின் றியே. அன்ப என்பது அண்மைவிளி. (கசுக

**அவன்மொழிக் கொடுமைசென் றவளவட் கியம்பல்.**

அவன்மொழி * * * கியம்பல் எ - து. தலைவன் சொல்லிய கொடு மையைத் தோழி தலைமகட்குச் சொல்லல்.

---

பல்லியம் போலுரு மேறெங்கு மார்ப்பதும் பார்ப்பதின்றி
வல்லியம் போதகம் போர்பயில் கானவந்து வாணன்றஞ்சை
அல்லியம் போருகை யன்னநின் கேள்வரு ளாசையினின்
றெல்லியம் போதுசென் றேனென்று கேள்வ ரியம்பினரே.

தண்டலை - சோலை. ஒன்னார் - பகைவர். எயில் - அரண். வாணன் ஒன்னாரை நாட்டிலிருக்க வொட்டானாதலால் அவர் கடலேறிச் செல்வர், அதனால் கடல் அவர்க்கு அரணாயிற்று. கானல்-கழிக்கரை. இடையிருள்- இடையாமம். பயிலுதல் - செறிதல். பாலன்னம் - வெள்ளையன்னம். 'சேர்ப்பன்' என்று தலைவனைக் கூறியவதனால் ஐந்திணையிற் களவிற்பொருளாந் திணை கூறவேண்டுமோ அத்திணைக்குரிய தலைவனுந் தலைவியுமாகக் கூறுதல் இலக்கணமாதலின் இத் தலைவனுந் தலைவியுமே கூறப்பட்டு வருவர், வேறு தலைவனுந் தலைவியுமல்லரெனக் கொள்க.

இவ்வாறு உள்ளுமுதலியவற்றொடு கூறியும் புலம்பியும் அழுதும் பெறும் பயன் யாதோவெனின், மூடிவைத்த வெங்கலத்தை வாய்திறக்கில் ஆவி போதலால் உடம்புழுக்கஞ் சிறிது குறைபடுதல்போலத் தலைவிக்கு இவ்வாறு செய்யவே விரகக்கனலாற் புழுங்கும் புழுக்கம் சிறிது தணியுமென்றுணர்க. (உருச)

## தலைவியைப் பாங்கி யாற்றுவித்தல்.

தலைவியை * * * யாற்றுவித்தல் எ - து பாங்கி தலைவிக்குத் துயராறும்படி கூறல்.

---

ஆடுகம் வாநம் மகன்றவ ரூரக லாப்புதுநீர்
பாடுகம் வாபொற் பசலைதந் தார்திறம் பாங்கினெல்லாம்
தேடுகம் வாதஞ்சை வாணனன் னாட்டன்பர் தேர்வழிநாம்
சூடுகம் வாகவ லாதவர் கானற் றுறைமலரே

இ - ள். நம்மை யகன்று அவருடைய ஊரகலாப் புதுநீரில் ஆடுகம் வா, பொற்பசலையை நமக்குத் தந்தவரது வெற்றியைப் பாடுகம் வா, தஞ்சை வாணன் நன்னாட்டிலுள்ள அன்பர் தேர் சென்ற வழிப்பக்கமெல்லாங் கவற்சியில்லாது தேடுகம் வா, அவர் கானற்றுறைமலரைச் சூடுகம் வா, அஞ்சலை. எ - று.

தலைவி -முன்னிலையெச்சம். 'அஞ்சலை' யென்பது வருவிக்கப்பட்டது. கானற் றுறைமலர் - கழிக்கரைத் துறைமலர். திறம் - வெற்றி. (உருரு)

## பதினாறுநாள்.

## தலைவன் வந்தமை பாங்கி யுணர்த்தல்.

(இதுவெளிப்படை.)

---

பண்ணுங் குழலும் பழித்தசொற் பாவை பரியலெல்லாம்
மண்ணும் புகழ்த்தஞ்சை வாணனொன் னாரென மைக்குவளைக்
கண்ணுங் கனியிருட் கங்குலு மாரன் கணைகள்பட்ட
புண்ணும் புலரவந் தார்தம் தூரவயிற் போனவரே.

இ - ள். பண்ணிசையும் யாழிசையும் பழித்த சொல்லை யுடைய பாவைபோல்வாய்! எல்லா வுலகும் புகழுகின்ற வாணன் ஒன்றொன்னை மைக்குவளைபோன்ற கண்ணினீரும், செறிந்த இருளோடு கூடிய இராக் காலமும், மாரன் கணைகளபட்ட புண்ணும் புலரத் தம தூரிடத்துப்போனவர் வந்தார் ஆதலால் நீ வருந்தலை எ - று.

குழல் - யாழ். பாவை - ஆகுபெயர். கண்ணிடத்து நிகழ்பொருளின் தொழிலிடத்துமே னின்றது புலர-என்பது இறுதிவிளக்கு. உம்மைகள் எண்ணின்கண் வந்தன. 'போனவர் வந்தார்' என இயையும். (உருசு)

வந்தோன் தன்னொடு நேர்ந்து விறுதல்.

வந்தோன் * * * வினுதல் எனபுழி நேர்ந்து-துணைப்பபட்டு, வினுதல் நினைந்து வினுதல்.

---

ஒருதலைக் கெய்திய கல்லதாக் குச்செல்ல வோருயிர்த்தாய்
இருதலைப் புள்ளி னியைந்தநுங் கேண்மையை யெண்ணியெம்மூர்
வருதலைக் கொண்க நினைந்திலை வாணன்றென் மாறைவண்டு
பொருதலைக் குங்குழ லாளழ நீகண்டு போயபின்னே.

இ - ள். கொண்கனே! நீ கல்பொருந்திய வழியிற்செல்ல வாணன் தென்மாறையில் வண்டு ஒன்றோடொன்று பொருது மாலையை யலைக்குங் குழலாளைக்கண்டு போயினபின் ஒரு தலையாயப் பொருந்திய ஒருயிரை யுடைத்தாய இருதலைப்புட்போ லியைந்த உம்முடைய வுறவை யெண்ணி எம்மூரிடத்து வருதலை நினைந்திலை. எ - று.

'ஒருதலைக் கெய்திய ஒருயிர்த்தாய்' எனவும், 'கல்லதாக்குச் செல்ல வண்டு பொருதலைக்குங் குழலாள்' எனவுங் கூட்டுக. ஒருதலை - நிச்சயம். கல்லதா-கல்வழி. எய்தல் - பொருந்தல். கேண்மை - உறவு. (உருஎ)

தலைவன் பாங்கியோடு நேர்ந்து விறுதல்.

(இது வெளிப்படை.) நேர்ந்து வினுதல் - எவ்வண்ண மாறி யிருந்தீரென்று வினுதல்.

---

ஐவா யரவுற்ற தன்னவின் ஞவிட ராற்றியென்போல்
எவ்வா றிருந்தீர் சொலவளை யீரொதிர்ந் தாரைவென்று
மைவா ரணங்கொண்ட வாணன்றென் மாறை மருவலர்போல்
ஒவ்வா வலரையுங் கேட்டிரு வீரு மொருதனியே.

இ - ள். ஒளிவளையீர்! எதிரேற்ற பகைவரை வென்று அவரேறி வந்த கரிய யானையை வாங்கிவந்த வாணனது தென்மாறை நாட்டைவந்து சேராதவர் போலப் பொருந்தாத பழிச்சொல்லையுங் கேட்டு இருவீரும் ஒரு

தனியே ஐந்தலை யரவு தீண்டியதே யொத்த பொல்லாத துன்பத்தை யொறுத்து என்னைப்போல நீர் எவ்வாறிருந்தீர், இருந்தவகையைச்சொல்ல வேண்டும். எ - று.

ஐவாயரவு - ஐந்தலைநாகம் இன்னா இடர் - ஐம்புலனால் வரும் பொல்லாத துன்பம். யான் இத்துன்ப மனுபவித்திருந்தே னென்பது தோன்ற 'என்போல' என்றார். எல்வளை - ஒளிவளை. மருவலர் - அடையாதவர். அலர் - பழி. ஒருதனி - ஒப்பற்றதனி. (உ௫௪)

தலைவியை யாற்றுவித்திருந்த அருமை கூறல்

(இது வெளிப்படை.)

இவளா ருயிர்புரந் திபானிருந் தேன்செக்க ரீந்துவன்னப்
பவளா டவியிற் பயின்மதி நிலமபங்க யங்குவியத்
தவளா தவஞ்சொரி தண்டுறை வாதஞ்சை வாணன்றெவ்வின்
துவளாம லாற்றுவி யென்றன்று நீசொன்ன சொன்னினைந்தே.

இ - ள் செக்கர்வானத்துத் தோன்றிய பிறையைப்போலப் பவளக் காட்டில் நெருங்கிய நித்திலம் தாமரை குவிய வெள்ளைக்கிரணஞ் சொரியப் பட்ட தண்டுறைவனே! தஞ்சைவாணன் பகையைப்போலத் தலைவி மனந்துவளாமல் ஆற்றுவியென்று நீபிரிந்து போங்காற் சொன்ன சொல்லை நினைந்து இவள் அரிய வுயிரை நீங்காமல் யான் காத்திருந்தேன். எ - று.

புரத்தல் - காத்தல். செக்கர் - செம்மாலை. இந்து - பிறை. நித்திலம் - முத்து தவளாதவம் - வெண்கிரணம் (உ௫௫)

இவற்றுள், 'தன்பதிக் ககற்சி தலைவன் சாற்றலும், பாங்கிதலைவிக் கவன்செல வுணர்த்தலும்' ஆகிய இரண்டும் செலவறிவுறுத்தற் குரியன 'தலைமகளைப் பாங்கி விலக்கல்' ஒன்றும் செலவுடன்படாமைக்குரித்து 'நீங்கல் வேண்டல்' செலவுடன் படுத்தற் குரித்து. 'பாங்கியடுத்தல்' செலவுடன் படுத்தற்குரித்து. 'தலைமகன் நெஞ்சொடு புலத்தலும், காமமிக்க கழிபடர் கிளவியும்' ஆகிய இரண்டுஞ் சென்றுழிக் கலங்கற்குரியன-'தலைமகளை யாற்றுவித்தலும், தலைமகன் வந்தமை தலைமகட்குணர்த்தலும்' ஆகிய இரண்டுந் தேற்றியாற்றுவித்தற் குரியன.'பாங்கிவந்தோன் றன்னொடு நொந்து வினாதல்' முதல மூன்றும் வந்துழி நொந்துரைத்தற்குரியனவெனக் கொள்க.

ஒருவழித் தணத்தல்

முற்றும்.

---

அஃதாவது,— வரைவை இடையிலே வைத்து வரைதற்கு வேண்டும்பொருள் காரணமாகப் பிரிதல்.

தலைவன் வரைதற்குப் பொருட்காரணமாகப்பிரிந்தானெனின் பொருளிலனாயிற்று. ஆகவே, பொருளிறந்தா னென்பதனோடு மாறுகொள்ளு மெனின் மாறுகொள்ளாது. பழங்குடையாயக் கிடைக்குஞ் செம்பொருள் பலவுளவேனும் அதனையெடுத்து நுகர்வோனசிறியனாதலானும், அளவினையுடைய னல்லனென்பப் படுதலானும், இவன் தன் முயற்சியா லீட்டிய பொருளைப் பலவாற்றானும் நுகர்தல் உத்தம விலக்கணமென்று கருதிப் பொருள்வயிற் பிரிந்தானென் றுணர்க.

*"பிரிவறி வுறுத்தல் பிரிவுடன் படாமை
பிரிவுடன் படுத்தல் பிரிவுடன் படுதல்
பிரிவுழிக் கலங்கல் வன்புறை வன்பொறை
வருவழிக் கலங்கல் வந்துழி மகிழ்ச்சியென
றொருமையிற் கூறிய வொன்பது வகைத்தே
வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரிவே"— என்னுஞ்

சூத்திர விதியால் வரைவிடை வைத்துப் பொருள்வயிற் பிரித லொன்பது வகைப்படும்.

---

## என்பொருட் பிரிவுணர்ந் தேத்திழைக் கென்றல்.

(இது வெளிப்படை.)

கழைபோல் வளர்நெற் கவின்பெற வாரி கவர்ந்துவரும்
மழைபோல் வருகுவன் வன்சுரம் போய்த்தஞ்சை வாணன்வெற்பி
லிழைபோ லிடையாண் முலைவிலைக் காவன யாவையுங்கொண் [ல
டுழைபோ லரிநெடுங் கண்மயி லேசென் றுணர்த்திடுமே

இ - ள். மான்போன்ற செவ்வரிபரந்த நீண்ட கண்ணையுடைய மயில் போன்றவளே! வலிய சுரத்திடைப்போய்த் தஞ்சைவாணன் வெற்பிலிருக்கும் நூல்போன்ற இடையாள் முலைவிலைக் காகவேண்டிய பொருள்களெல்லாங்கொண்டு கரும்புபோல வளரப்பட்ட நெல் அழகுபெற நீர் கவர்ந்துகொண்டுவரும் முகில்போல் யான் வருவல், நீ தலைவி பக்கற் போய்ப்பிரிவைச் சொல்வாயாக. எ - று.

எனவே,— தலைவி நெற்பயிராகத் தான் முகிலாகவும், பொருள் நீராகவும், அப்பொருள்களைக் கண்டு தலைவி மகிழ்ச்சியாற் கரும்புபோல வளர்வதாகவும் உள்ளுறையுவமங் கொள்ளக் கிடந்தவாறு காண்க.

**யான்** என்றது தோன்றா வெழுவாய். கழை - கரும்பு. கவின் - அழகு. வாரி - நீர். கவர்தல் - வாங்கல். மழை - முகில். சுரம் - வழி. இழை - நூல். உழை - மான். அரி - செவ்வரி. மயில் - சிறப்புருவகம்.

---

* அகப்பொருள்விளக்கம், களவியல், சூ. ருக.

### நின்பொருட் பிரிவுரை நீயவட்கென்றல்.

(இது வெளிப்படை.)

வசையும் புகழுநின் மேலன வாணதஞ்சை வாணன்வெற்பா
மிசையுங் கரும்பினில வேம்புவைத் தாலன்ன வேட்கையெல்லாத்
திசையும் பரவுந் திருவனை யாடன் றிருவுளத்துக்
கிசையும் படிவல்லை யேற்சொல்லி நீபின் னெழுந்தருளே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பனே! வசைவரினும் புகழ்வரினும் நின் பக்கலாம், நின்பொருள்வேட்கை நுகருங் கரும்பிற்கைக்கும்வேம்பை வைத்தாலொக்கும், எல்லாத் திசையி லுள்ளோருந் துதிக்குந் திருவையொப்பாள் தன் திருவுள்ளத்திற்குப் பொருந்தும்படி சொல்லவல்லையேல், சொல்லி நீ பின்னெழுந் தருள்வாயாக. எ - று.

வசை - இகழ்ந்து கூறப்படுஞ்சொல். புகழ் - புகழ்ந்து கூறப்படுஞ் சொல். மிசைதல் - நுகர்தல். இசைதல் - பொருந்துதல். (௨௯௧)

### நீடேனென் றவனீங்கல்.

நீடேனென் றவனீங்கல் எ - து. தலைவ னீட்டித்திராது விரைந்து வருவலென்று பாங்கியொடு கூறி நீங்குதல்.

---

காலைப் பொழுது கடும்பரித் தேர்பண்ணிக் கானகம்போய்
மாலைப் பொழுது வருகுவல் யான்றஞ்சை வாணனன்னாட்
டாலைப் பழன மணிந்தவெம் மூர்நும் மகங்குளிரச்
சோலைப் பயில்குயில் போன்மொழி யாயென் றுணிவிதுவே.

இ - ள். சோலையிடத்துப்பழகுங்குயில்போலமொழியாய்! கதிரோன் உதிக்குங்காலத்திற்கடுகிச்செல்லும்பரியையுடையதேரைப்பண்ணமைத்துத் தஞ்சைவாணன் நாட்டிடத்துக் கரும்பு வளர்ந்தெழுந்த வயல் சூழ்ந்த எம்மூர்க்குக் கானகங் கடந்துபோய், நும் அகங்குளிரக் கதிரோன் மறையு மாலைக்காலத்தில் யான் வருகுவல், எனமனத்தின்கண் துணிவிது. எ - று.

தேர் பண்ணல்-தேர்செலுத்தற்குரியன வெல்லாம்அமையச்செய்தல். ஆலைப்பழனம் - கரும்பமவயல். கடும்பரி - கடுகிச்செல்லும்பரி. "காலைப் பொழுது கடும்பரித் தேர்பண்ணிக் கானகம்போய் - மாலைப் பொழுதில் வருகுவல் யான்" எனில் "வரைவிடை வைத்துப் பொருள்வயிற்பிரிவோரிருதுவின் கண்ணுடைத் தென்மனார் புலவர்." என்னுஞ் சூத்திரத் தொடு மாறுகொள்ளுமே யெனின் அற்றன்று; காலைப் பொழுதிற்போய் மாலைப் பொழுதில் வருகுவனெனப் பாங்கி கருதத் தன்கருத்தில் வருஞான்று மாலைப்பொழுதில்வருவதாயெண்ணித் தலைவன் கூறியவாறென்க.

இக்கருத்தானே யன்றே, தலைவன் மீண்டு வருங்கால் 'பாகனொடு சொல்லல்' என்னுங் கிளவிச்செய்யுளில் "சென்மாலையந்திகண்டாற் றரியா ளென் றிருந்தனையே" எனக் கூறியதூஉமெனக் கொள்க.

### பாங்கி தலைவிக் கவன்சேல வுணர்த்தல்.

(இது வெளிப்படை.)

வில்லேய் குறும்பு மிறும்பும்வெவ் வாயும் விராயவெவ்வாய்க்
கல்லேய கவ்வைக் கடங்கடந் தாரன்றோ காயந்தெதிர்ந்தார்
செல்லேய முரசச் செருவென்ற வாணன்றென் மாறையினின்
வல்லேய முலைவிலை தானறந்து நாளை மணம்பெறவே.

இ - ள். சினந்து எதிர்ந்தார் இடிக்கொப்பான பல்லியம் முழக்கும் போரைவென்ற வாணன் தென்மாறை நாட்டில் நின்னுடைய வல்லுக் கொப்பான முலை விலைதந்து நாளை மணம்பெற வேண்டுமென்பது கருதி, நம்மன்பர் விற்களைச் சாத்தியிருக்கின்ற குறும்புகளும் சிறுமலைகளும் எவ்விடமுங் கலந்து நடப்போர் கால்களை யறுக்கும் வெவ்விய வாய்களையுடைய கற்களும் பொருந்திய கவர்வழியையுடைய காட்டைக் கடந்தார். எ - று.

குறும்பு - பாலைநிலத்து வேடரிருக்கும் ஊர். இறும்பு - சிறுமலை. கவலை - கவர்வழி. கடம் - காடு. செல் - இடி. வல்லு - சூது. (உசுங)

### பூந்துறை யிரங்கல்.

பூங்குழையிரங்கல் எ - து. தலைமகளிரங்கல்.

---

இப்பேருவகை யினிப்பிரியேனென்று மென்முன்சொன்ன
அப்பேருரைப்பழு தாமென்ன வேயிர வஞ்சுமந்த
மைப்பேரலைகடல் வையகந் தாங்கிய வாணன்றஞ்சைச்
செப்பேரிளங்கொங்கை மங்கைசெப் பாதன்பர் சென்றதுவே.

இ - ள். பாம்பாயிரந் தலையாற் சுமக்கப்பட்ட நீலநிறப் பெரிய அலைகடல் சூழ்ந்த புவிப்பாரத்தைத் தாங்கிய வாணனது தஞ்சையி லிருக்குங் கடைந்த செப்புப்போன்ற இளங்கொங்கையையுடைய நங்காய்! அன்பர் என்னுடன் சொல்லாது சென்றது இயற்கைப்புணர்ச்சியிற் கூடிய ஞான்று இப் பெரிய மகிழ்ச்சியை இனிப் பிரியேனென்று என்முன் சொன்ன அப் பெரிய சொல் பிரிவலென்று சொல்லிற் பழுதாமென்றோ.

இவ்வாறு தலைவனை அசதியாடுதல்போலக் கூறிய வுரையை மறந்தா ரென்று குறிப்புத்தோன்றக் இரங்கிக் கூறினளெனக் கொள்க. உவகை - மகிழ்ச்சி. உம்மை - அசைநிலை. மங்கை - அண்மைவிளி. (உசுச)

### பாங்கிகொடுஞ்சொற்சொல்லல்.

பாங்கி கொடுஞ் சொற்சொல்லல் எ - து. இவ்வாறு நீயிரங்குவதெனைனென்று கழறிக்கூறல்.

---

ஆரணத் தானருள் பாரளித் தானடங் காதவரை
வாரணத் தால்வென்ற வாணன்றென் மாறை வயங்கொளிசேர்
பூரணத் தாமதி போன்முகத் தாயென்று புலம்புகின்ற
காரணத் தாலல்ல வோபிரிந் தாரின்று காதலரே.

இ - ள். பிரமனாலுண்டாகிய நிலவுலகத்தைக் காத்துப் பகைவரை யானைப்படையால் வென்ற சந்திரவாணன் தென்மாறை நாட்டில்விளங்கிய ஒளிசேர்ந்த பூரணைத்திதியினாலே நிறைந்தமதி போன்ற முகத்தாய்! என புலம்புகின்றாய், நின்னை மணம்புணர் காரணத்தாலல்லவோ காதலரின்று பிரிந்தார் எ - று.

ஆரணத்தான் - பிரமன். பூரணை - பூரணைத்திதி (௨௬௫)

### தலைவிகொடுஞ்சொற்சொல்லல்.

தலைவிகொடுஞ்சொற்சொல்லல் எ-து கழறிய பாங்கியை மனத்தினொந்து கூறல்.

---

மண்டுந் திரைவையைச் சூழ்தஞ்சை வாணற்கு வன்புலியும்
செண்டுங் கொடுத்தகல் செம்பியர் போலன்பர் சென்றுழிமுள்
இண்டுங் கழையும் பயிலும்வெங் கானிபங் கேட்டிந்நோய்
கண்டுங் கலங்கல்செல் லாதிந்த ஆறென் கழறன்னறே

இ - ள். திரைநெருங்கும் வையைசூழ்ந்த தஞ்சைவாணனுக்கு வலிய புலிக்கொடியையுஞ் செண்டாயுதத்தையுங் கொடுத்தகலப்பட்ட சோழனைப்போல அன்பர் சென்றவிடத்தில் முள்பொருந்திய ஈகைச்செடியும் மூங்கிலும் நெருங்கும் வெவ்வியகாட்டினிலக்கணத்தைக்கேட்டு யான்றுயருழக்கும் வேட்கை நோயைக்கண்டு மனத்திடத்துக் கலக்கஞ் செல்லாது இந்த ஆறென்னைக்கழறுதல் நன்றே. எ - று.

பாங்கிகழறியவதனை ஊரின்மேல்வைத்துக்கூறியது.

வாணனுக்கு வன்புலியுஞ் செண்டுங் கொடுத்தகல்செம்பியர்போலத் தலைவன்சென்றானென்று தலைவனுக்கு இகழ்ச்சிதோன்றியதெனின், தலைவனூர் விட்டுக்கானிடைச் சென்றதற்கு உவமை கூறியதல்லது பதிகொடுத்ததற்கு உவமை கூறியதன்றாதலான் இகழ்ச்சிதோன்றாதென்றுணர்க.

மண்டுதல் - நெருங்குதல். புலியும் - செண்டும் - ஆகுபெயர், செம்பியர்-சோழர். இண்டு - ஈகை, கழை - மூங்கில். (௨௬௬)

## வருதவர்மீண்டெனப் பாங்கிவலித்தல்.

வருகுவர்மீண்டெனப் பாங்கிவலித்தல் எ-து. பாங்கி தலைவர்மீண்டு வருவரெனக்கூறுதல் வலித்தல் - கூறுதல்.

---

தேர்த்தானை வாணன்றென் மாறைமின் னேயஞ்சல் செம்புருக்கி
வார்த்தா லனைய வழிநெடும் பாலை மடப்பெடைநோய்
பார்த்தா தவந்தணி பாதவ மின்மையிற் பைஞ்சிறகால்
போர்த்தாலு மஞ்ஞைகண் டுமேபோவ ரோநம புரவலரே.

இ-ள். தேர்ப்படையையுடையவாணன்தென்மாறைநாட்டிலிருக்கு மின்னே! அஞ்சலை; செம்பையுருக்கி வார்த்தாலொத்த வெப்பத்தைத் தருகின்ற வழி நெடிதாகிய பாலைநிலத்து மடப்பத்தொடு கூடிய பெடைமயிலினது வெயிலானாகிய துன்பத்தைப் பார்த்து,அவ் வெயிற்றணிக்கின்ற மரங்களில்லாமையால், தனது பசியசிறகினாலே போர்த்து ஆகவும் மயில் கண்டு நம்புரவலர் போவரோ! மீண்டுவருவரோ! எ - று.

எனவே,-தலைவன் ஏகுங்கால சுரத்து நிகழுந்தன்மை பாங்கியறிந்தவா றென்னையெனின், தலைவன்செல்லுங்கால சுரம் இத்தன்மையவென்று சொல்லியவாற்றால் அறிந் திருந்தாளாகலின், இவ்வாறு கூறினளெனக.

இவ்வாறு சொல்லியதை ‡ "அரிதாயவறனெய்தி" எனனும் கலித் தொகையானுமுணர்க.

தானை - படை, ஆதவம் - வெயில். பாதவம் - மரம். ஓகாரம் - எதிர் மறை. (உகஎ)

## பருவங்கண்டுபெருமகள் புலம்பல்.

பருவங்கண்டு பெருமகள்புலம்பல் எ-து தலைவன்பிரியுங்கால கார்க்கு முன்னேவருவலென்று குறிப்பாற்கூறிய போயினனாகையால காரப்பருவங் கண்டு தலைமகள்புலம்பிக் கூறுதல்.

குறிப்பாற் கூறியதெங்ஙனமெனின்"நீடேனென்றவனீங்கல்"செய்யு ளில் 'மாலைப்பொழுதுவருகுவலயான'என்றது மாலைகுறித்தாகியபொழுது கார்காலமென்று குறிப்பானறிவித்தவாறுணாக அக்குறிப்பறிந்து பாங்கி தலைவிகருக் கூறியவதனால் தலைவி காரகண்டு புலம்பினளென்பது. அன்றியும், மேற்கிளவி இருவைமபாகததோன்றியது தலைவன் கூறிய கார்ப்பருவமன்றெனப் பொருள் கொள்ளக்கிடந்தன யாவுங் குறிப்பாற் கூறிய தென்றுணாக.

---

‡. கலித்தொகை, பாலைக்கலி, செ. கo.

மிகவும் பரந்த கரியகண் ணீர்செங்கை வெள்வளைபோல்
உகவுந் துறந்தவ ருன்னல ராலுறை கார்பொழிய
மகவுந் துணையுங் கலைதழு வுந்தஞ்சை வாணன்வெற்பின்
அகவும் பெடைமயி லுந்தமி யேனெங்ங னாறுவலே.

இ - ள் சிவந்த கையினிடத்துச் சங்கவளையுகுந்ததுபோலமிகவும்விரி வாகிய கரியகண்ணினீர் துளிததுளியாயுதிரவுந் துறந்ததலைவா நினைந்திலா, ஆதலால், காரானது துளிகளைப்பெய்ய மழைத துன்பததாலஞ்சி மகவும் துணையும் முசுக்கலையைத்தழுவும தஞ்சைவாணன் வெற்பிற பெடைமயி லும மகவுந்தனியாயிருக்கப்பட்ட யான் எங்ஙன மாற்றியிருப்பேன! எ-று.

'செங்கைவெள்வளைபோல மிகவும்பரந்த' எனக்கூட்டுக. உகுத்தல - உதிர்தல். உன்னலா - நினைந்திலா. உறை - துளி. கா - முகில. துணை - பெண்குரங்கு. கலை-முசுககலை.

* "கலையென்காட்சி யுழைக்கு முரித்தே." "நிலையிற் றப்பெயா முசு வின் கண்ணும்.' என்னுஞ் சூத்திரங்களால் கலை முசுவின ஆணபெய ரென்றுகொள்க. பெடைமயில் எனபுழி உம்மைத்தொகை. (உகஅ)

இருளை வம்பென்றல்.

இருளைவம்பென்றல. எ-து. அவ்வாறு புலம்பியதலைவி தேறும் வண் ணம பாங்கி இது காலததின்வந்த மேகமன்று, இடையே வம்பாகததோன றியதென்றுகூறியது, வமபு-காலமல்லாதகாலததிற் றோன்றும பொருள்.

---

தனஞ்சேர்ந்த வஞ்சிநின் சாயலகண டஞ்சித் தனிததனிபோய்
வனஞ்சேர்ந தயாந்த மயில்களெல லாந்தஞ்சை வாணனவெறபில்
கனஞ்சேர்ந தலாதுளி கா லுமுன னேவமபு கா லுமென்று
இனஞ்சேர்ந் தகவின நாந்தனி வாழ் யிருத்தலகணடே.

இ - ள். திரண்டதனத்தையுடைய வஞ்சி! நினது சாயலைக்கணடஞ்சி ஒன்றொடொன்று கூடாமல்தனிததனியாயப் போயககாட்டிற சோந்தயர்ந்த மயில்களெல்லாம தஞ்சைவாணன் வெறபினிடத்துக் காககாலம் வந்து மேகங்கள் கூடிப் பருதத துளிகளையும முன்னே வம்பாகமழையைப் பெய்யு மென்றெண்ணி, நாம அனபரைப் பிரிந்து, தனியாய் வாழ யிருததலைககண்டு, கூட்டங் கூடி அகவாநின்றன; ஆதலால், இதுதலைவன கூறிய காலததில் வருங்காரன்று. எ - று.

காரியத்தைக் காரணமாக வுபசரிக்கப்பட்டது. தனம்-முலை. சேர்தல்- திரட்சி; § "சேரே திரட்சி" என்னும உரிச்சொலலியற் சூத்திரததானு முணர்க.

---

* தொல். பொருள். மரபியல், சூ. சுரு-சுகூ.
§ தொல். சொல். உரியியல், சூ. கூஎ.

அயர்தல் - இளைத்தல். அலர்தல் - பருத்தல். † "தண்கமழ்மலரிறால் சினைய" எனனுந்திருமுருகாற்றுப்படையுட் கூறியதனுனுணர்க. அன்றியும், ¶ "மலர் முலைப்பாங்கியருளியல்கிளத்தல்" என்னும அகபபொருட் சூத்திரத்தானுமுணர்க. (உசுக)

இறைமகள்மறுத்தல்

இறைமகள் மறுததல எ - து. தலைவி பாங்கி கூறியவதனை மறுத்துக் கூறல்

---

வாவித் தகையன்ன மேதஞ்சை வாணன் வரையகத்தென்
பாவித் தனிநெஞ்சு மாததஞ்சு மேகண பயின்றகண்ணூர்
தூவித் தலைமயில கோபங்கொள் ளாவரத் தோன்றியைச்சோந
தாவித் தகந்தள ரும்மணி காலு மராவென்னவே.

இ - ள். வாவியிலிருக்கும் அழகுபொருந்திய அன்னம்போல்வாய்! தஞ்சைவாணன் வரையிடதது என்கண்பார்த்துப் பாவித்தனி நெஞ்சு அஞசாநிற்கும, நெருங்கிய கணைகளார்நத சிறகாகிய தலையையுடைய மயில் காநதளை அரிய மணியையுமிழும் நாகமெனச் சினங்கொண்டு வரலல்லாமையினுல காநதளைச்சோநது பெருமூச்செறிந்தன ஆதலால் வம்பன்று, காலத்தில் வந்தகாரிது. எ-று.

எனவே,-காந்தள்மலருங் காலங் கார்காலமென்பது தோன்றக்கூறினுளென்க. தகை-அழகு. அன்னம்-ஆகுபெயர். 'வரையகத்தென்கண்பார்த்து' எனவியையும். 'கண்பாாத்து' எனனும் வினையெச்சம் தன்வினையைக் கொண்டு முடியாது, 'நெஞ்சஞ்சும' எனப்பிறவாற்ருன்முடிந்தது என்னையெனின்; "உரற்கால் யானை யொடித்துண்டெஞ்சி யாமரநிழற் றுஞ்சும் ~~செக்கரேயத்தை~~" என்முற் போலுங் கொள்க.

தூவி - சிறகு. கோபம் - சினம். தோன்றி - காந்தள். ஆவித்தல் பெருமூச்செறிதல். காந்தள் என்புழி இரண்டனுருபுதொகுத்தல். காலுதல்- உமிழ்தல். (உஎஉ)

அவர்தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனத்துணைவிசாற்றல்.

அவர் தூதாகிவந்தடைந்ததிப்பொழுதெனததுணைவிசாற்றல் எ - து. தலைவிகார்காலம் வந்ததென்று கூறிய சொற்கேட்ட பாங்கி தலைவன் தான் வருகின்ற செய்தியை யறிவிததற்கு விடுபப இப்பொழுது இக்கார்தூதாய் வந்தடைந்ததென்று கூறல்.

---

† திருமுருகாற்றுப்படை, பழமுதிர்சோலை.

¶ இறையனர் அகப்பொருள், சூ ௩.

இன்னே வருவர்நின் காதல ரேதில ரேங்கவினிக்
கொன்னே யிரங்கி வருந்தல்கண் டாய்கொற்ற நேமிவிந்தை
மன்னே யெனவந்த வாணன்றென் மாறை வரவுணர்த்த
முன்னே நடந்தன காண்கடுங் கால முகிலினமே.

இ-ள். அலர்தூற்றும் அயலாரேங்க நின்காதலர் இப்போதே வருவர்; இனி வீணேயிரங்கி வருந்தலை; வெற்றியாழியைப் புனைந்த சயமாதுக்கிறைவனென வந்த வாணன்தென்மாறை நாட்டில் தலைவர் வரவுணர்த்த விரைவொடு கூடிய முகிலின முன்னே நடந்து வந்தன காண்பாயாக. எ-று.

இன்னே - இப்போதே. ஏதிலர்-அயலார். கொன்னே - வீணே. கண்டாய் - முன்னிலையசை. கொற்றநேமிவிந்தை - சயமாது. மன்-இறைவன். முகிலினம் - முகிற் கூட்டம். (௨௭௧)

**தலைமகளாற்றல்.**

(இது வெளிப்படை.)

இன்புற்ற காலத் திருவர்க்கு மொன்றுயி ரென்றுசொன்னார்
அன்புற்ற காதல ராதலி னாலகன் றாரெனநாம்
துன்புற்ற காலத் தவருமுறா ரல்லர் தோழிசொல்லும்
வன்புற்ற காரளிக் கூந்தஞ்சை வாணன்றென் மாறையிலே.

இ-ள். கார்போற் கொடுக்குந் தஞ்சைவாணன் தென்மாறை நாட்டில் தோழி சொல்லுஞ் சொல்லும் வற்புறுத்தலைப்பொருந்திய; அன்றியும், அன்புற்றகாதலர் தாம் இன்புற்றகாலத் திருவர்க்கும் உயிரொன்றென்று சொன்னார்; ஆதலால், மனம் பிரிந்தாரென்று நாம் துன்பமுற்ற காலத்து அவரும் வாராரல்லர். எ-று.

எனவே,-வருவரென்பதாயிற்று. 'அன்புற்ற காதல ரின்புற்றகாலத்து' எனவும் 'உயிரொன்று' எனவும் மாறுக. உறாரல்லர்-வாராரல்லர். வற்புறுத்தல்-ஆற்றுவித்தலைப்பொருந்தல். காரளிக்கும் என்பது உவமத்தொகை. ()

**அவனவட்புலம்பல்.**

அவன்வட் புலம்பல். எ-து. பொருளீட்டச் சென்ற தலைவன் தன் கருமமுற்றியபின்றையே அவ்விடத்துத் தலைவியை நினைத்துப்புலம்பல்.

---

விழுக்குழை யும்படி தேர்வழி பார்த்தணை வீழ்ந்துவண்டு
கொழுதியி ருங்குழல் சோரக் கிடந்து குடங்கையின்மேல்
ஒழுகிய வஞ்சன வெள்ளத் துணங்கு மணங்கைமுன்சென்
றெழுகென நெஞ்சமென் னேயவ ரோவெனி லெனசொல்லுமே.

* [இது பிறசெய்யுட்கவி] (௨௭௨)

---

* அம்பிகாபதிக்கோவை, செ. ௨௮௨.

### மீண்டுவருங்காலைப்பாகனொடுசொல்லல்.
(இது வெளிப்படை.)

வன்மா முடுகு வலவதிண் டேரினி வாணன்றஞ்சைக்
கென்மா லுருநெஞ்சின் முன்செல நாகிள வேறுபுலிப
பொன்மா மணியும் பிரிந்திருந் தாரும் புலம்புமன்றி
சென்மாலை யந்தி கண்டாற் றரியாளென் னிருந்திழையே.

இ - ள். கழுத்திற்கட்டிய இரும்பிற் செய்தபெரிய மணியும், கணவரைப்பிரிந்த மாதரும் புலம்புறப் பசுவாயினது மழவிடையைச் சேர்ந்து மன்றத்திற் செல்லுமாலையாகிய அந்திக்காலத்தைக் கண்டால் என் இருந்திழை யாற்றாள்; ஆதலால், பாகனே! வாணன் தஞ்சையூர்க்கு என்னுடைக் கொண்ட நெஞ்சு செல்வதற்கு முன்னே, இன்று திண்ணியதேர் செல்லத் தேரிற்பூட்டிய வலியகுதிரைகளை முடுகச்செய். எ - று.

வல் - வலிமை, விரைவுமாம். குதிரைமுடுகச்செய்யென்பது செய்யுள் விகாரத்தாற் றொக்கது. வலவன் - தேர்ப்பாகன், அண்மைவிளி. * ஏறு - "எருமையும் மரையும் பெற்றமு நாகே" என்னும் மரபியற் சூத்திரவிதியானு முணர்க.

ஏறு - விடை. பொன் - இரும்பு.

‡ "வேண்டற்க வென்றிடினுஞ் சூதினை வென்றதூஉந்,
தூண்டிற்பொன் மீன்விழுங்கி யற்று."—என்றார்பிறரும்.

"கங்கையார்தாங்குங்கானப்பெருங்கவலை
யெங்குமறவோரிரைதேத்தெழுந்தார் - திங்களைக்கண்
டென்றுகாண்வேட்கைமடிசுரப்பத்தோன்றுவ
கன்றுகாண்மெய்குளிரப்பினைகண்டு."—என்றார்பிறரும்.

மாலையந்திமிசை என்பதுபோல் நின்றது. திருந்திழை : அன்மொழித் தொகை. (உ௪௪

### மேகத்தோடுசொல்லல்.

மேகத்தொடுசொல்லல். எ - து. தலைவன் வருங்காலத்து மேகத்தை நோக்கிச் சொல்லல்.

---

வேண்டும் பொருளைத் தரும்பொருட் போய்முற்றி மீண்டவென்
றூண்டும் பரிமுன் றுனைமுகில் காள்சென்று சொல்லுமின்று [றேர்
நீண்டுங் கொடிமதில் சூழ்தஞ்சை வாணனைச் சேரலர்போல்
ஈண்டும் பசலைமெய் போததிருப் பார்தமக் கென்வரவே.

---

* தொல், பொருள். மரபியல், சூ ௬௰.
‡ திருக்குறள், ௯௪, ௯௩௧.

இ - ள். விரும்பப்பட்ட எப்பொருளையுங் கொடுக்கும்பொருட்டுப் போய்முடிவாகி மீண்ட எனது தேரிலே பாகன் செலுத்தும் பரிமுன்னுக விரைந்தோடும் முகில்காள்! அத்திங்களைத் தீண்டுங் கொடிகட்டிய மதில்சூழ்ந்த தஞ்சைவாணனைச் சேராதவர்போல் நெருக்கும் பசலைநிறம் மெய்யெங்கும் போர்த்திருப்பவர் தமக்கு எனதுவரவினைச் சென்று சொலவீர். எ-று.

வேண்டல்-விரும்பல். 'பொருட்போய்' என்புழி நான்கனுருபு தொககது. முற்றல் - முடிதல். தூண்டல் செலுத்தல். பரி - குதிரை. துனை - விரைவு, †"கதழ்வுந் துனைவும் விரைவின்பொருள." எனனும் சூத்திரவிதியானுணர்க. இந்து - திங்கள். சேரலர் - பகைவர். தீண்டல - நெருங்குதல். சொல்லருந்துன்பத்தால் மெய்ந்நிறம் வேறுபட்டிருப்பராதலால், உவமை கூறியவாறுணர்க. (உஎ௫)

## பாங்கி வலம்புரிகேட்டு அவன் வரவறிவுறுத்தல்.

பாங்கி வலம்புரிகேட்டு அவன் வரவறிவுறுத்தல். எ - து. பாங்கி வலம்புரியோசையைக்கேட்டுத் தாய்அவனவரவை யறிவுறுத்தல்.

---

பொருகின்ற செங்கயல் போலவிழி யாய்பண்டு போயநின்கைக்
குருகின் றணிந்திறை கொள்வது காண்கநங் கொண்கர்பொற்றேர்
தருகின்ற சங்கந் தருவன்ன வாணன் றமிழ்த்தஞ்சைவாய்
வருகின்ற தென்றுமுன் னேயோகை கூறும் வலம்புரியே

இ-ள். ஒன்றொடொன் றெதிர்க்கின்ற செங்கயல்போலும்விழியாய்! முன்னுள் கழன்று போய நின்கைவளை இன்று புனைந்து தங்குவதழகு; நங்கொண்கர் ஏறிவரும் பொற்றேரானது தருகின்ற சங்கநிதியையுங் கற்பகத்தருவையுமொத்த வாணன் தமிழ்த்தஞ்சை வீதிவாய் வருகின்றதென்று முன்னேவலம்புரிச்சங்கமானது மகிழ்ச்சிகூற நின்றது, நீ கேட்பாயாக.

குருகு - வளை. இறை கொள்வது - தங்குவது. காண்க - அழகுதக. * 'சித்திலமுலையினுர்தன்னெடுங்கணுனேக்கப்பெற்றும்-கைத்தலந்தீண்டப்பெற்றும் களிந்தனமலர்ந்த' என்னுஞ் சிந்தாமணிச்செய்யுளில்'காண்க'என்னுஞ்சொற்கு அழகுதக என்று நச்சினர்க்கினியர் கூறிய உரையானுமறிக. கொண்கர் - தலைவர். ஓகை - உவகை. (உஎசு)

---

† தொல். சொல். உரியியல், சூ கக.
* சிந்தாமணி, விமலையாரிலம்பகம், செ. ௱உ.

### வலம்புரிக்கிழத்திவாழ்த்தல்.

(இது வெளிப்படை.)

மால்வண் டெனமன்னி வாணன் றென்மாறை மன்னன்புகழ்
போல்வண் டமிழ்மன்னர் போற்ற விளங்குக பொன்கொழிக்குங்
கால்வண்டல் வையைக் கரைமல்கு மல்லிகைக் கான்முகையின்
மேல்வண் டிருந்தது போற்கரு மாமுக வெண்சங்கமே.

இ - ள். பொன்கொழிக்கும் வண்டல்பரந்த வாய்க்கால்பொருந்திய வையையாற்றங்கரையில் நிறைந்த மல்லிகையினது காம்பொடுகூடிய முகையின்மேல் வண்டிருந்ததுபோலக் கரியமுகத்தொடுகூடிய பெரிய வெண்சங்கமானது திருமாலன்கைச் சங்கேபோல என்றும் அழியாமையாய் நிலைபெற்ற வண்மைபொருந்திய தமிழ்வேந்தராலே போற்றநின்ற வாணனாகிய தென்மாறைநாட்டுமன்னன் புகழ்போல்விளங்க. எ - று.

கால் - வாய்க்கால். வண்டல் - திரைபுறண்டிருக்கையும் பரப்பிய மண். மல்குதல் - நிறைதல். காம்பு முகத்தது பெழுகமைந்ததலால் கருமுகமென்றது. மா - பெருமை. 'கருமுகமா வெண்சங்கம்' எனக் கூட்டுக. (௨௭௭)

### தலைவன்வந்துழிப்பாங்கிநினைத்தமைவினவல்.

தலைவன் * * * வினவல் எ - து. வரைவிடைவைத்துப் பொருள் வயிற் பிரிந்தோன் பிரிந்த முப்பத்தைந்தாநாள் வந்தானென்று நாள் வரையறை கூறியதென்னையெனின், "களவொழுக்கமையிருதிங்கள்." என்று வரையறை கூறினமையானும், * "களவினுட்டவிர்ச்சி வரைவினீட்டம் திங்களிரண்டினகமென மொழிப." என்ற இறையனாரகப்பொருளுரையில் 'திங்களிரண்டினகம்' என்பதற்குத் திங்களிரண்டின் கண்ணென்றும், ஐந்துநாள் ஆறுநாள் அவர்வரைவு முடியுமென்றும் கூறினாராகலானும், 'ஒருவழித் தணத்தல்' என்பது வரைக்கும் இவ்வுரையில் பதினைந்து நாளென்று கூறுவதனாலும், வரைவியல் ஆறுநாள் மணமுடிந்ததாகக் கூறுதலானும், ஆக ஐம்பத்தாறுநாளென்று வரையறையாய் நிற்றலின், ஈண்டு முப்பத்தைந்தாநாள் வரையறை கூறியதெனக்கொள்க.

"வரைவிடைவைத்துப் பொருள்வயிற்பிரிவோர் இருதுவின்கண்ணுடைத்தென்மனார்புலவர்" என்னுஞ்சூத்திரவிதியான் இருதிங்கள் சென்றதென்று கூறாது முப்பத்தைந்துநாள் சென்றதென்று கூறியதென்னையெனின், இருதிங்கள் சென்றதென்று வருவதல்லது இதற்குள்ளாகவருவதன்றென இலக்கணங் கூறிற்றிலா; இருதுவின்கண்ணுடைத்தெனக் கூறுதலான், இவ்விருதுவிடை எவ்வளவு வரையறைப்பட்டதோ அவ்வளவே இலக்கணமெனக்கொள்க.

---

இறையனார் அகப்பொருள், சூ ௧௪.

அன்றி இருதிங்கள் சென்று வந்தானெனின் களவொழுக்க மூன்று திங்களாம்; ஆகவே, இலக்கணவழுவாய் அகப்பொருள் சிதைவாமெனக் கொள்க.

---

நினையீர் பொருட்குப் பிரிந்தய லூட்டுழி நின்றுழிவேள்
அனையீர் நினைந்து மறிதிர்கொல லோவஞ் சொலாலறிவோர்
வனையீ ரிதழ்க்கண்ணி வாணன்றென் மாறையை வாழ்த்தலர்போ
னனையீ ரிதழ்க்கண்வை காவெவ்வ நோயுற்ற நவ்வியையே. [ல்

இ - ள். வெள்வளையீர்! அழகியசொல்லாலே புலவர் புனையப்பட்ட சொல் ஓரிதழும், பொருள் ஓரிதழுமாகிய தமிழ்மாலையையுடைய வாணன் தென்மாறையை வாழ்த்தாதவர்போல், நீரால நனைநத இரண்டிதழையுடைய கண்ணுறங்காததுன்பந் தரப்பட்ட வேட்கை நோயையுறற மான் போன்றவளை நினையீர்; அப்பொருள் காரணமாகப் பிரிநத நாட்டிடததுத் தங்குமிடத்தில நீர்நினைந்தும் அறிதிரோ? எ - று.

அறிவோர் - புலவர். வைகுதல் - தங்குதல். எவ்வம் - துன்பம். நோய் - வேட்கை. நவ்வி - மான், இவ்விரண்டும் ஆகுபெயர். (௨௭௮)

தலைவனினைத்தமைசெப்பல்.
(இது வெளிப்படை)

காநெடுங் குன்றங் கடந்துசென் றேனொரு காலுமைதோய்
மானெடுங் கண்ணி மறந்தறி யேன்வண்கை வாணன்றஞ்சை
நீனெடும் பெண்ணைக் குரும்பை யுஞ்சூது நெருங்குகொங்கைத்
தேனெடுங் கண்ணி மென்பூங் குழன்மாதர் திருமுகமே.

இ - ள். மைதோய்ந்து மான்போன்ற நெடியகண்ணையுடையாய் வாணன்தஞ்சைநகரின்கண் நீலநிறமாகிய நெடியபனையினது குரும்பையும், சூதுமொப்பு நெருங்குங் கொங்கையையும,வண்டுறையும் நெடிய மாலையணிந்த மெல்லிய பொலிவினையுடைய மாதர் அழகிய முகத்தையும் காடும் நெடிய குன்றுங் கடந்து சென்றேனாகிய யான் ஒருகாலும் மறந்தறியேன்.

† "உள்ளுவன் மன்யான் மறப்பின் மறப்பறியே
னொள்ளமர்க் கண்ணாள் குணம்".— என்பதனானறிக.

எனவே, - மறந்திலனாதலால் நினைந்திலன் என்று கூறியவாறாயிற்று.

'காநெடுங்குன்றம்' என்புழி உம்மைத்தொகை. நீலம் - நீல் எனக் கடைக்குறைந்தது; நீனிறவண்ணன் என்புழிப்போல. பெண்ணை - பனை. சூது - வல். தேன் - வண்டு. (௨௭௯)

† திருக்குறள் - செ. ௧௧௨௫.

## ஆற்றுவித்திருந்த அருமைசாற்றல்.

ஆற்றுவித்திருந்த அருமைசாற்றல் எ - து. பாங்கி தலைவியையாற்றுவித்திருந்த அருமையைத் தலைவற்குக் கூறல்.

---

உயராமலகத் தருங்கனி நீர்நசைக் குணசுரம்போய்
வியராமல் இல்லின் விடுத்தகன் றானென்பூஞ் சிலம்பா
அயராமல் அஞ்சலென் றாற்றுவித் தேனிவ் வவனியெல்லாம்
மயராமல் வந்தபி ரான்றஞ்சை வாணன்றென் மாறையிலே.

இ - ள். இப்புவியெல்லாம் மயங்காமல் வந்தபிரானாகிய தஞ்சைவாணனது தென்மாறைநாட்டின் மெல்லிய பூமலிந்த சிலம்பனே! உயர்ந்த நெல்லியின் கரிய கனியை நீர்வேட்கைக்குண்ணப்பட்ட சுரத்திடையுடன் போய் வெயர்வடையாமல் இல்லின்கண் விடுத்து நீர் பிரிந்தவளை இளையாமல் அஞ்சலென்று ஆற்றுவித்தேன். எ - று.

ஆமலகம் - நெல்லிக்கனி. நீர் நசை - நீர்வேட்கை. வியராமல் - வியர்வடையாமல். அயராமல்-இளையாமல். மயராமல் - மயங்காமல்.

'என்பொருட் பிரிவுணர்த்த தோழிக்கென்றல்' பிரிவறிவுறுத்தற்குரியது. 'பாங்கியின்பொருட் பிரிவுணர் நீயவட்கென்றல்' பிரிவுடன்படாமைக்குரித்து. 'தலைமகன் நீடேனென்றல்' பிரிவுடன் படுத்தற்குரித்து. 'பாங்கிதலைவிக்கு அவன்செலவுணர்த்தல்' பிரிவுடன் படுதற்குரித்து. 'தலைமகளிரங்கலும்,' 'கொடுஞ்சொற்சொல்லலும்,' 'பருவங்கண்டு பெருமகள் புலம்பலும்,' 'மறுத்தலும்,' ஆகிய நான்கும் பிரிவுழிக்கலங்கற்குரிய 'பாங்கி கொடுஞ்சொற்சொல்லலும்,' 'வருகுவர் மீண்டெனப் பாங்கிவலித்தலும்,' 'பருவமன்றுவம்பென்றலும்', 'அவர் தூதாகிவந்தடைந்ததிப்பொழு தென்றலும்,' ஆகிய நான்கும் வன்புறைக்குரிய. 'தலைமகளாற்றல்' வன்பொறைக் குரித்து. தலைமகள் மீண்டுவருங்காலை 'அவனவட்புலம்பலும்,' 'பாகனொடு சொல்லலும்' 'மேகத்தொடுசொல்லலும்', ஆகிய மூன்றும் வருவழிக்கலங்கற்குரிய. 'பாங்கி வலம்புரிகேட்டவன் வரவறிவுறுத்தல்' முதலெட்டும் வந்துழி மகிழ்ச்சிக்குரிய. (௨௮௦)

வரைவிடைவைத்துப்பொருள்வயிற்பிரிதல் முற்றும்.

முதலாவது களவியல் முற்றிற்று.

---

இரண்டாவது

# வரைவியல்.

---

வரைவு எ-து. தலைமகன் தலைமகளைக் குரவர்முதலாயினோர் கொடுப்பவும் கொடாதொழியவும் வதுவைச சடஙகொடுபொருநதி மணஞ் செய்து கோடல். ஆதியிலெடுத்துககோடறகணணே களவென்றும, கறபென்றும் கைகோளின் இரணடெனவைத்து அவ்விரண்டுக்கு நடுவேவரைவியலென்று கூறியதனால் முன்னதனோடு மாறுகொளளுமெனின் மாறுகொள்ளாது. எனனை,— கறபிறகு நிமித்தமாய வரைவு கூறுதலான இதுவும் கற்பின் பாற்படுமே. ஆயின், இதனைக கறபினபாறபடுத்துக கூறாது வரைவியலெனவேறாகக் கூறிய தெனனையெனின, வரைவுமுதலாக உடனபோக்கிடையிறுகப் பலவகைப்படடு ஒவ்வோர்வகைககுக கிளவிகளும பலவாக அதிகாரப்பட்டுநடத்தலின் விளங்குதற்கு வரைவியலெனவேறு கூறப்படும். என்னை,—புணர்தலும் புணாதல் நிமித்தமும குறிஞசியாயினவாறுபோல, இலவாழ்க்கையும் இல்வாழ்க்கை நிமித்தமுமாயவரைவும கற்பெனப்படுமென்றுணர்க. * "வரைவு மலிவேயறத் தொடுநிலையென-றாயமையிரணடும் வரைவிற் குரிய-கிளவிதொகை யெனக் கிளத்தினர்புலவர்" —என்னுஞ் சூத்திரவிதியால் வரைவு மலிவு மறத்தொடு நிலையுமென இரண்டு வகைப்படுமே. அவற்றுள், வரைவுமலிவெனபது - வரைவுதொடங்கி நடக்கு முயற்சி மிகுதல். * "வரைவுமுயல் வுணர்த்தல் வரைவெதிர் வுணர்தல வரைவறிந்து மகிழ்தல் பராவல் கண்டுவத்தலென றொருநால் வகைத்தே வரைவுமலிதல்". — எனனுஞ் சூத்திரவிதியால் வரைவுமலிதல நாலவகைப்படும்.

### வரைவுமலிவு

### காதலன் முலைவிலைவிடுத்தமை பாங்கிகாதலிக் குணர்த்தல்

(இது வெளிப்படை.)

தொலைவிலை யாகிய பலபொருள் காதலர் சூதமர்கின்
முலைவிலை யாக முகநதளித் தார்முனை வேநதர்தமமைத்
தலைவிலை யாகத் திறைகொணட வாணன் றமிழ்த்தஞ்சைநீ
உலைவிலை யாகுக பொன்வண்ண மாறுக வொணணுதலே.

---

* அகப்பொருள்விளக்கம, வரைவியல், சூ. ௨, ௩.

இ - ள். ஒள்ளிய நுதலை யுடையாய்! காதலர் எடுக்க வெடுக்கத் தொலையாத பலவாகிய பொருள்களைச் சூதுபோற் பொருந்தும் நின் முலைவிலையாக வம்பன்ன அளவையான் முகந்தளித்தார், பகைவேந்தர்தம்மை அவர்கள் தலையைக்கொள்ளாது விடுதற்கு அவர்கள் கொடுக்கும் பொன்னை விலையாகத் திறைகொண்ட வாணன தமிழ்த்தஞ்சையிலிருக்கின்ற நீ வருத்தமிலலையாகுக, பசலைநிறத்தையொழிப்பாயாகுக. எ - று.

சூதுமுலை-உவமத்தொகை. அமாதல்-பொருந்துதல். முலைவிலை-கோடற்குரியார் கொடுத்தற்குரியார்க்குக் கொடுக்கும்பொருள. முனை - பகை. திறை - கப்பம் உலைவு - வருத்தம. பொனவண்ணம - பசலை. (உ௮க)

காதலிநற்றயுள்ளமகிழ்ச்சியுள்ளல்.

காதலிநற்றாயுள்ளமகிழ்ச்சியுள்ளல் எ-து தலைவன்விடுத்த முலைவிலைப் பொருள்களைக்கண்டு நமக்கு மணக்கால மென்று நற்றாய மகிழுமுள்ளத்து மகிழ்ச்சியை நினைத்தல்.

---

கயமா மலரொனறுங் கண்ணியை வண்டொனறுங் காளைபல்புள்
இயமா மணமபுண ரீாந்துறை நாட ரெதிாந்தவர்மேல
வயமா நடத்திய வாணன றெனமாறை வருகுவரேல
நயமா மணவணி கணடியாயு மினபுறு நமமினுமே.

இ - ள். குளத்திறருமரை மலரொன்றுங்கண்ணியை வண்டொனறுங் காளை பலபுளளிரைச்சையே முரசமாக மணமபுணரப்பட்ட குளிாந்ததுறையையுடைய நாடா எதிாந்த பகைவர்மேல யானையைச்செலுத்திய வாணன் தெனமாறைநாட்டில் வருகுவாராகில, அவரது நன்மணக்கோலத்தைக் கண்டு நமமினும யாயுமினபுறும. எ - று.

மாமலா-திருவிருக்குமலா 'கயமாமலரென்றுங கண்ணியை வண்டொனறுங்காளை பல்புள-ளியமாமணம்புண ரீாந்துறைநாடா' என்றதனால் குலமே குளமாகவும, குளத்திறபூத்த தாமரைப்பூ தலைவியாகவும், தாமரை மலாமணம் உண்ணவரும வண்டு தலைவனாகவும, பலபுளளியமே வாத்தியமாகவும உளளுறையுவமந் தோனறியதெனின, இவ்வாறு தலைவன் மணமுடியாமல் உடனபோக்கு நிகழ்தலான இறைசசிப்பொருளென்று கொள்க இயம் ஓசை. ஈர்ந்துறை. குளிாந்ததுறை 'ஈாஙகைவிதிரா' என்றாற்போலக்கொளக. வயமா-யானை. மணவணி - மணக்கலம, உம்மைசிறப்பு.

### பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல்.

பாங்கி தமர்வரைவெதிர்ந்தமை தலைவிக்குணர்த்தல் எ-து. பாங்கி தலைவன்றமர் மணங் கூறிவந்துழித் தலைவி தமர் மண மெதிர்ந்தமை தலைமகட்குக் கூறல்.

---

மணிப்பா லிகைமுத்தம் வைத்தாங் கடம்பலர் வார்திரை தூய்
அணிப்பாய் துவலை யரும்பும் துறைவர்க் கணியெதிர்ந்து
பணிப்பா சிழையல்குல் வெண்ணகை யாய்நமர் பாரநின்னோய்
தணிப்பான் முரசறைந் தார்தஞ்சை வாணன் றமிழ்நிலத்தே.

இ-ள். பசிய பொன்னாற்செய்த மேகலையணிந்த அல்குலையும் வெள்ளியநகையுமுடையாய்! தஞ்சைவாணன் தமிழ்நிலத்தின் மணிப்பாலிகையின் முத்தம்வைத்தாற்போல அடம்பமலரில் நெடியதிரை தூவப்பட்ட நீராய்ப் பரந்ததிவலை தோன்றும் துறைவர் தமக்கு நமரணியால் மணமெதிர்ந்ததுமன்றி, நின்வேட்கைநோய் தணிக்கும்பொருட்டு முரசறைந்தார், அம்முரசொலி கேட்பாயாக. எ-று.

ஆங்கு-உவம உருபு. ‡'பலர்புகழ்ஞாயிறு கடற்கண்டாங்கு' என்புழிப்போல. வார்திரை - நெடியதிரை. தூய - தூவி; ‡ 'உருவப்பல்பூத்தூய வெருவர' என்புழிப்போல. துவலை - திவலை. அணியெதிர்ந்து என்புழி அம்மெனொருவிக்க. பணி-பாம்பு. நோய்-வேட்கை. எஞ்ஞான்றும் மணச்சடங்கு போற்றுன்றும் துறைவராதலால் இங்குவரவே மணச்சடங்குண்டாமென்பது தோன்றி நின்றது. (௨௮௫)

### தலைமகளுவகையாற்று துளத்தோடுகிளத்தல்.

தலைமகளுவகையாற்றா துளத்தொடுகிளத்தல் எ-து. தலைவி மகிழ்ச்சியடங்காது நெஞ்சொடு கூறல்.

---

சோகா குலமெய்தல் காணநெஞ் சேநந் துறைவனொனும்
மீகா னுடன்பள்ளி நீள்வங்க மேறி நிலம்புரக்கும்
மாகா விரியன்ன வாணன்றென் மாறைமன் னன்பகையும்
ஏகா விருட்கங்கு லாங்கடற் கானலு மெனுங்கரையே.

இ-ள். நெஞ்சே! நம்முடைய துறைவனொன்னும் மீகாமனும் படுக்கையாகிய மரக்கலமேறி நிலத்தைக்காக்கும் பெரிய காவிரிக்கொப்பாகிய வாணனாகிய தென்மாறை மன்னனுக்குப்பகையாகினாரும் ஏகுதற்கரிய

---

‡ திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம்.

இருண்ட கங்குலாங் கடலைக்கடந்து காலையென்னுங் கரையைக் காண்குதும்; ஆதலால், நீசோகத்தால் ஆகுலமெய்தலை. எ - று.

சுப்பிரயோகம், விப்பிரயோகம், சோகம், மோகம், மரணம் என்னும் மாரன் அம்பால்வரும் அவத்தை ஐந்தனுள் சோகம் மரணத்தால்வரும் அவத்தையென்றுணர்க. ஆகுலம் - துன்பம் காண்டும் - எதிர்காலமுற்று வினைச்சொல். நீகான் - மீகாமன். பள்ளி - படுக்கை. வங்கம் - மரக்கலம் புரத்தல் - காத்தல். காலை - விடியற்காலம். பகையும் என்புழி உம்மை இழிவுசிறப்பு. இதனுள் இயைபுருவகம் வந்தவாறுகாண்க. (உஅச)

தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

(இது வெளிப்படை.)

மாரியஞ் சுங்கொடை வாணன்றென் மாறையில் வாழிவண்டார்
வேரியந் தொங்கல் விரைகமழ் மார்ப விடாதவம்பல்
சேரியம் பொய்கைத் துறையலர் வாடநுஞ் செவ்விமணம்
தூரியஞ் சங்கதி ரக்காட்டு நீயன்று சூட்டலரோ.

இ - ள். வண்டுணணுங் கள்பொருந்திய மாலை மணங்கமழு மார்பனே! மறந்துவிடாத வம்பலையுடைய சேரியாகிய பொய்கைத்துறையிலே தோன்றிய அலர்வாட நின்னழகாகிய மணக்கோலத்தாலன்று சூட்டின அலரையின்று பலருமறியத் தூரியமுஞ் சங்குமதிர நீ சூட்டிக்காட்டு முகிலஞ்சுங் கொடையையுடைய வாணன் தென்மாறைநாட்டில் நெடுங் காலம் வாழ்வாயாக எ - று.

மாரி - முகில். அஞ்சும் என்னும் பெயரெச்சம் தன்வினைமுதலைக்கொண்டு முடியாது பிறவாறானு முடிந்தது. வாழி முன்னிலை வினைமுற்றுச் சொல். *"வாழிய வென்னும் சேயெனகிளவி இறுதியகரங்கெடுதலு முரித்தே." என்பதனுன் வாழியென்பது நெடுங்காலமென்பதும் அவ்வுரையானுமுணர்க. ஆதல் - உண்டல். வேரி - கமழ். தொங்கல் - மாலை. விரை - மணம் மார்ப - அண்மைவிளி. அம்பல் - முகிழ் முகிழ்த்தல். அலர் - வாய்திறந்து ஒருவர் ஒருவரை நோக்கித் தூற்றுஞ் சொல். செவ்வி - அழகு. மணம் - மணச் சடங்கு. தூரியம் - முரசம். அலர் - மாலை, ஆகுபெயர். (உஅரு)

தலைவி மணப்பொருட்டாக வணங்கைப் பாங்கிலைகாட்டல்.

தலைவி மணம்பொருட்டாக வணங்கைப் பாங்கிலைகாட்டல் எ - து. தலைவிமணம் பொருட்டாகத் தெய்வத்துக்குச் சிறப்புச் செய்து வாழ்த்திக் கொண்டு நிற்குநிலையைப் பாங்கி தலைவற்குக்காட்டல்

* தொல். எழுத். உயிர். சூ. ௪0.

உரவிப் பெருங்கலித் துன்பங்கள் போய்முதனூழியின்பம்
வரவிப படிதன்னை வாழ்வித்த வாணனறென் மாறையன்னாள்
புரவிப் புனைநெடுந் தேரண்ணலேநின் பொருட்டணங்கைப
பரவிப் பரவினை றேவரம வேண்டுதல பாராதருளே.

இ - ள். புரவிபூட்டி யலங்கரிதத நெடியதேரையுடைய மன்னவனே! வலிய இப்பெருங கலியுகததுனபங்கள போயக் கிரேதாயுகததினபம் வர இப்புவியை வாழச்செயத வாணன தெனமாறைநாடுபோலவாள் நினபொருட்டாகத தெய்வததைவாழ்ததி வாழ்ததி வரமவேணடுதலைப் பாராதருளவாயாக. எ - று.

உரம் - வலி. கலி - கலியுகம. முதனூழி - கிரேதாயுகம். படி - புவி. புரவி - குதிரை. (உஅசு)

பராநிலைகண்ட தலைவன்மகிழ்தல்.

(இது வெளிப்படை.)

இவ்வித் தகமிவட் கெய்திய தெவ்வண மெவ்வுலகும
வவ்வித் திகழ்புகழ் வாணனறென மாறை மணமபொருட்டால்
நவ்வித் தொகையின நாணுமென னோக்கி நறைபுகையாச்
செவ்வித தகைமலர் தூய்தெய்வம வாழ்த்துந திருததகவே.

இ - ள். எவ்வுலகததையுங கவாநது திகழப்பட்ட புகழையுடைய வாணன் தென்மாறைநாட்டில மானின தொகுதியின நாணப்பட்ட மெல லிய நோக்கையுடையாள மணங்காரணமாக நறுமபுகையைப் புகைதது நாட்கொண்ட அழகையுடைய மலரைத தூவித தெயவததை வாழததுஞ சிறநதமுறைமையாகிய இவவலலபம இவட்குபபொருந்தியதெப்படி? எ-று.

வித்தகம் - வல்லபம பொருட்டு - காரணம. 'மென்னோக்கி மணம பொருட்டு' என இயையும் நவவி - மான. தொகை - இனம. நறை-நறும புகை. செவ்வி - காலம. தகை - அழகு. திருததகவு - சிறந்த முறைமை.

'காதலனமுலைவிலை அடுததமை பாங்கி காதலிக்குணாததலும்' 'தலைவி 'மணம்பொருட்டாக அணங்கைப்பராநிலைகாட்டலும்'வரைவு முயல்வுணாத தல். 'பாங்கி தமாவரை வெதிரநதமை தலைமகட்குணாததல' ஒனறுமவரை வெதிரவுணாததல. 'நறுநயுள்ள மகிழ்சசி யுள்ளலும்', 'உவகையாற்று துளத்தொடு கிளத்தலும்' 'தலைவனைப் பாங்கிவாழ்ததலும்' 'வரை வெதிர்ந்து மகிழ்தல். 'தலைமகளணங்கை பராநிலைகண்டோன் மகிழ்தல்' ஒன்றும் பராவல்கண்டுவெத்தலெனக்கொள்க. (உஅஎ)

இத்துணையும் ஐம்பத்தோன்றுநாட் செய்தியென்றுணர்க.

# அறத்தொடுநிற்றல்.

அறத்தொடுநிற்றல் எ - து. களவைமுறையே வெளிப்படுத்தி நிற்றல். முறையே வெளிப்படுத்திநிற்றலாவது தலைவி பாங்கிக் கறத்தொடு நிற்கும், பாங்கி செவிலிக்கறத்தொடு நிற்கும், செவிலிநற்றாய்க் கறத்தொடு நிற்கும், நற்றாய் தந்தை தன்னையாக கறத்தொடுநிற்குமென்று கொள்க. அறத்தொடுநிற்றற்குப் பொருள் முறையேவெளிப்படுத்தி நிற்றலென்பது, இப்பொருள் எவ்விடத்திற்குமாகாது. இவ்விடத்திற்குமாத்திரமென்றுகொள்க. ஆதலால், இக்களவை வெளிப்படுத்தற்கு மாத்திரம் மெய் அறத்தொடுநிற்றலென அவரால் நாட்டப்பட்ட பெயராயிற்றெனக்கொள்க.

* "முன்னிலை முன்னிலைப்புறமொழி யென்றாங்-கன்னவிருவகைத்தறத்த்தொடுநிலையே."— என்னுஞ் சூத்திரவிதியான அறத்தொடுநிற்றல் இருவகைப்படும்.

## கையறு தோழி கண்ணீர் துடைத்தல்.

கையறுதோழி கண்ணீர்துடைத்தல் எ-து. ஆற்றிக் கையற்ற தோழியருகிருந்து கண்ணீர்துடைத்தல. கையறல - செயலறல்.

வரைவுமலிவான் மனமகிழ்ச்சியடைந்திருக்கும் தலைவி யழுதுகொண்டிருத்தல் மாறுபாடெனின் மாறுபடாது. என்னை, - களவுப்புணர்ச்சியால அலர் மிகவுமெழுதலகண்டு தந்தையாமுதலாயினோர்வெறுப்படைந்ததறிந்த தலைவன் பிரிந்தேக பிரிவாற்றாமல் தலைவியழுதனளெனக. வெறுப்படைந்ததனால மணத்தை மறுக்க, அதனால தலைவன பிரிந்தேக ஆற்றாமையினால் தலைவியழுதனளென்று செயயுளிற்கூறியது. இனமெனின,மேலே கற்பொடுபுணர்ந்த கவ்வையின்மகளிங்கே போயினளென்று செவிலிபாங்கியை வினவுழி, ¶ 'வெறுத்தாரொறுத்தரை மேலு நங்கேளிர் விழைதலின்றி, மறுத்தாரவற்குமணமதனை' எனபதனாறகண்டுகொளக.

---

அயிரா திரைவந்துன வண்டலம பாவை யழித்தனவோ
செயிராத வன்னை செயிர்த்தன ளோசெறி நாரைதிணைபோர்
வயிரா நரலும வயற்றஞ்சை வாணனறென் மாறையிலென்
உயிரா கியதைய லீகலுழ வாளென ஞளங்குழைந்தே.

இ - ள். நெருங்கிய நாரைகள போர்க்களத்தி லொலிக்குங் கொம்பு போலொலிக்கும் வயலையுடைய தஞ்சைவாணன தென்மாறைநாட்டில் என்னுயிர்போன்ற தையலே ! நீ யுளங்குழைந்து கலுழக் காரணமென்னே? நுண்மணலார்ந்த திரைவந்து உன் வண்டலம பாவையழித்தனவோ? ஒருகாலுஞ் சினவாத அன்னை சினந்தனளோ? யானறியக்கூறுவாயாக. எ-று.

---

* அகப்பொருள்விளக்கம், வரைவியல சூ. ரு.

¶ தஞ்சைவாணன்கோவை, செ. ௩௩௪.

அயிர் - நுண்மணல். வண்டல்ப்பாவை - மண்ணாற்செய்த பாவை. செயிர்த்தல் - சினத்தல். உயிர்-போர்க்களத்திலொலிக்கும் கொம்பு. நரலுதல் - ஒலித்தல். கலுழ்தல் - அழுதல். என்-யாதுகாரணம்? இதனுட் கூறுவாயாக என்பது சொல்லெச்சமாக நின்றது. (உ௮௮)

தலைமகள் கலுழ்தற்காரணங்கூறல்.

(இது வெளிப்படை)

தாரணி கொண்ட விருதோ ளொருவர் தனித்துழிப்பின்
வாரணி கொங்கை மணந்துசென் றார்தஞ்சை வாணனொன்னார்
தேரணி வென்ற செழும்புகர் வேல்விழித் தேனினஞ்சூழ்
காரணி மென்குழ லாயது வேகலுழ் காரணமே.

இ-ள். தாரை யழகாகக்கொண்ட இருதோளையுடைய ஒருவர் தனித்தவிடத்து என்வாரணிந்த கொங்கையைக்கூடிச் சென்றார். தஞ்சைவாணன் ஒன்னாரது தேர்நிரையைவென்ற செழுமையாகிய இரத்தக்கறை நிறத்தையுடைய வேல்போன்ற விழியையும், வண்டினஞ்சூழ்ந்த மேகத்தினழகைக்கொண்ட மெல்லிய குழலையுமுடையாய்! யான் அழுங் காரணமது.

தார் - மாலை. வார்-கச்சு. தேரணி - தேர்நிரை. புகர் - உதிரக்கறை. கார் - மேகம். அணி - அழகு. (உ௮௯)

தலைவன் தெய்வங்காட்டித்தெளிப்பத் தெளிந்தமை யெய்தக்கூறல்.

தலைவன் * * * யெய்தக்கூறல் எ-து. தலைவன் தெய்வத்தைக் காட்டிக் கரியென்று சூளுறவு சொல்லை மெய்யென்று தெளிந்து அதனைப் பாங்கிக்குப் பொருந்தக்கூறல்.

---

துதித்தே னணங்கொடு சூளுற்றே னென்ற சொல்லைமெய்யா
மதித்தே னியாந்து மதியிலி யென்றஞ்சை வாணன்வையை
நதித்தே னினம்புணர் மாதர்கண் போல நகைக்குநெய்தல்
பொதித்தே னுகர்ந்தக லுங்கழிக் கானற் புலம்பர்வந்தே.

இ-ள். தஞ்சைவாணன் வையைநதியிலே குலாவப்பட்ட வண்டினம் மடவார்கண்போல் ஒளிவிடும் நெய்தற் பூவினிடத்துப் பொதிந்த தேனை நுகர்ந்து பிரிந்துபோங் கழிக்கரைச்சோலையுடைய புலம்பர் வந்து துதித்துத் தெய்வத்துடனே சூளையுமுற்றேனென்று அவர் சொன்ன மெய்யாய் மதியிலியாகிய யான் மறந்து மதித்தேன். எ-று.

சூள் - ஆணைகூறல். அயர்ந்து - மறந்து. தேனினம் - வண்டினம். நகை - ஒளி. பொதிதல் - நிறைதல். வண்டினம் தலைவனாகவும், நெய்தற்பூ தானாகவும், தேன் தன்னிடத்தின்பமாகவும், அவ்வண்டு தேனுகர்ந்து நீங்கியதுபோலத் தலைவன் தன்னிடத்து இன்பநுகர்ந்து பிரிந்து போயினானென்னும் உள்ளுறையுவமங்கொள்ளக்கிடந்தது. இவ்வாறு தெய்வத்தொடு சூள் முற்றினேனென்று சொல்லியது எக்கிளவிப் பொருளெனின், வன்புறையில் 'பிரியேன்' என்னும் கிளவியிலென்றுணர்க. ஆணைகூறல் அக்கிளவிச் செய்யுளிலலையாலெனின் 'பிரியேன்' என்றது வேறோர் கிளவியினுமில்லையால் அதுவே பொருளென்றுணர்க. (௨௧௦)

இறைவி தலைவன் இகந்தமையியம்பல்.

இறைவி தலைவன் இகந்தமையியம்பல் எ-து இறைவி தலைவன் நீங்கினமைகூறல்.

---

வரியோல வண்டலை தண்டலைசூழ் தஞ்சை வாணன்வண்மைக்
குரியோ னுயர்வையை யொண்டுறை வாயுர வோர்தெளித்தும்
கரியோர் பிறரிலை யென்றகன் றானின்று காரிகையாய்
பெரியோர் மொழிபிற ழாதென்று தேறுதல் பேதைமையே.

இ - ள். காரிகையாய்! பண்ணையொலிக்கப்பட்ட வண்டுகள் செலவும்வரவுமாய் அலையப்பட்ட சோலைசூழ்ந்த தஞ்சைவாணனாகிய கொடைக்குரியோனுடைய உயர்ந்த வையையாற்றின் ஒள்ளிய துறையிடத்தில் உரவோர் தெய்வமுன்னாகத் தெளியச்செய்தும் கரியோர் பிறிதொருவருமில்லை யென்று நம்மைப்பிரிந்து போயினார், ஆதலால், இனிப் பெரியோர்சொல்லிய சொல் தப்பாதென்று தெளிவது பேதைமை எ - று.

வரி - பண். ஓலம் - ஆரவாரித்தல். தண்டலை - சோலை. உரவோர் - அறிவோர். தெளித்தல் - தெய்வத்தின் முன்னாகத் தெளியச்செய்தல். உம்மை - சிறப்பு. கரியோர் - சான்று கூறுவோர். பிறழ்தல் - மாறுபடுதல். பெரியோர்மொழி பிறழாதென்று தேறுதல் பேதைமையென்பது †"இன்பத்தை வெறுத்தல் துன்பத்துப் புலம்பல்" என்னும் மெய்ப்பாட்டியற் சூத்திரத்தில் தெளிந்துரைத்தல் ஆங்கு'நெஞ்சழிதல்' என்பதனால் 'அறனளித்துரைத்தல்' என்னும் மெய்ப்பாடு கூறியவாறுணர்க. (௨௧௧)

பாங்கியியற்பழித்தல்.

பாங்கி யியற்பழித்தல் எ - து. தலைமகன் இயல்பை பாங்கி பழித்துக்கூறல்.

---

மழவே துறந்து மறந்தவர் போற்றஞ்சை வாணன் வென்றி
முழவேய முந்நீர் முழங்கிருங் கானன முழுதுலகும்
தொழவே தகுந்தெய்வ நோக்கிச்செல லேலென்று சொல்லியுநீ
அழவே துறந்தன ரானல்லர் நல்லரவ் வாடவரே.

---

† தொல். பொருள். மெய்ப். சூ. ௨௨.

இ - ள். தஞ்சைவாணனது வெற்றி முரசொலிக்கொப்பாகக் கடல் முழங்கப்பட்ட பெரிய கழிக்கரைச் சோலையிடத்து உலகமுழுதுந் தொழத் தக்க தெய்வத்தை நோக்கிப் பிரியேனென்று சொல்லியும் இளமைப்பருவத்தே துறந்து மறந்தவர்போல நீ அழத்தக்கதாகத் துறந்து போயினாராதலால் அவ்வாடவர் நல்லா நல்லர். எ - று.

மழவு - இளமை. முழவு - முரசு. ஏய - ஒப்பாக. முந்நீர - கடல். இருமை-பெருமை. கானல - சோலை 'உலகமுழுதும்'என இஙஙனம், நல்லார் - நல்லர். தீயார - தீயர் என இகழ்ச்சிக் குறிப்பினகண் வந்த அடுக்குமொழி. 'அவ்வாடவர் நல்லார நல்லர்' என இயையும். (௨௬௨)

தலைமகளியற்படமொழிதல்.

தலைமகளியற்படமொழிதல் எ-து. அங்ஙனங்கூறக்கேட்ட தலைமகட் சொறபொருள ஓரியலபுபட மொழிதல.

---

மாகப புயன்மண்ணில வந்தன வாணன்றென் மாறைமுந்நீர்
நாகப புகர்சசெய்ய புள்ளிப்பைங்கான் ஞெண்டு நாகிளந்தண
பூகக குளிர்நிழற பேடையொ டாடும புலமபரினார்
ஆகக கருதிலை லாரினி யாரினி யாருளரோ.

இ - ள். நலலாய! வானத்திடத்திலிருககும மேகம மண்ணிடத்தில் வந்தது போன்ற வாணன் தென்மாறை நாட்டுக கடலிடத்துப்புன்னைமரத் தடியிலிருககும புகராகிய சிவந்தநிறப புளளியையும பசியகாலையுமுடைய ஆண ஞெண்டு நாகுபபருவத்தையுடைய வளமையையும தட்பத்தையுமுடையகுளிர்ந்த கமுகினிழலில பெடைஞெண்டுடைய பிரியாமறகூடுமபுலமபரைப பொலலாராகக் கருதின்நமக்கு இனியராயுளளார இனியார? எ-று.

அவரே நமக்கு இனியராயவந்துகூடுவாராதலால் அவரை இயறபழித்துக் கூறத்தக்காதென்றவாறாயிறறு.

மாகம்-'ஆகாயம.-புயல-மேகம. நாகம புன்னை. நாகு-இளங்கன்றுப் பருவமாகிய கருக்கொளளுங்காலம. என்னை, பசு எருமைமுதலியவற்றில கருக்கொள்ளும் பருவத்திற்கு நாகு எனனும பெயருலக வழக்கினுள கண்டுகொள்க. புலமபன்-நெய்தற்றலைவன். பூகம்-கமுகு. பெடை-பெடைஞெண்டு. இன்னார்-பொல்லார். இனியார - நலலார்.

புன்னைமர நிழலிலிருக்கும ஆண்ஞெண்டு பூகமர நிழலிலிருக்கும பெடையொடு கூடும்; புலமபா என்பதனால் தலைவன் தலைவியை வந்து கூடுமென உள்ளுறையுவமங்கொள்ளக் கிடந்த தெனின், அங்ஙனங் கூட்டம பெருவாய்ப் பிரிந்துவருந்துகின்ற ளாதலால உள்ளுறையுவம

மாதாது இறைச்சி பிறக்கும் பொருளாயிற்றெனக் கொள்க. இறைச்சியிற் பொருளாவது *"இறைச்சிதானே பொருட்புறத்ததுவே." "இறைச்சியிற் பிறக்கும் பொருளுமாருளவே-திறத்தியன் மருங்கிற் றெரியுமோர்க்கே." என்றாராகலின் இறைச்சியென்றும்-இறைச்சியிற் பொருளென்றுங் கூறிய சூத்திரங்கட்கு நச்சினார்க்கினியார் செய்த வுரையிற் கண்டுகொள்க. (உகங)

### தெய்வம்பொறைகொளச்செல்குவமென்றல்.

தெய்வம் பொறைகொளச் செல்குவ மென்றல் எ - து. தெய்வத்தின் பிரிவேயென்றுணைகூறிப் பிரிந்துபோனாரால் தெய்வங் கொடுந்தெய்வமாதலால் சீறுதபடி அவர் எங்கட்குக் குற்றஞ்செய்தாரல்லர், நீ பொறுத்துக் கொள்ளென்று வேண்டிக் கோடற்கு இருவேமும் போதுவோமென்று தலைவி பாங்கியுடன் கூறியது.

மாதங்க நல்குங்கை வாணன்றென் மாறைவை யைத்துறைவர்
ஏதம் பயந்தில ரெங்கட்கு நீயெம் மிகந்ததனால்
கோதம் படாத கொடுந்தெய்வ மேயென்று கூர்பலிதூய்ப்
பாதம் பரவநல் லாயிரு வேமும் படர்குவமே.

இ - ள். புலவோர்க்குப் பெருமையையுடைய தங்கங்களைக் கொடுக்குங் கையையுடைய வாணன் தென்மாறைநாட்டில் வையைத்துறைவர் எங்கட்குக் குற்றத்தைத் தந்தாரல்லர், எம்மைப் பிரிந்ததனாலே கொடுந்தெய்வமே! நீ குற்றப்படாதையென்று மிகுந்த பலிகளைத் தூவிப் பாதத்தைத் துதிக்க இருவேமுஞ்செல்வோம். எ - று.

நல்கும் - கொடுக்கும். ஏதம் - குற்றம். பயந்திலர் - கொடுத்திலர். குத்துதல் - இரிதல். கோது - குற்றம். அம் - அசைநிலை. படர்தல் - செலுத்தல். (உகச)

### இல்வயிற்செறித்தமைசெப்பல்.

இல்வயிற் செறித்தமை செப்பல் எ - து. தலைவிதன் மெய்வேறுபாட்டாலும் ஊரிலுள்ளார் அலர் தூற்றலாலும் நற்றாய் உளத்தில் வெறுப்பாகி மனையிடத்தில் என்னைக் காவல் செய்தாளென்று பாங்கிக்குக் கூறல்.

தன்போது லுலகம் புரக்கின்ற வாணன் றமிழ்த்தஞ்சையார்
மன்போ லெவர்க்கும் வழங்கி யுணர்ந்தவர் வைத்திழக்கும்
பொன்போ லிருக்கப் பொதிந்து கொண்டாளன்னை பூவையின்மேல்
வன்போ தியமட வாரலர் தூற்றிய வாறுகண்டே.

* தொல். பொருள். பொருளியல், சூ. கூரு, கூசு.

இ - ள். பூவைபோல்வாய்! தனதுயிர்போல உலகத்திலுள்ள வுயி ரையெல்லாங் காக்கின்ற வாணனாகிய தமிழ்த்தஞ்சையார்வேந்தைப்போல யாவர்க்கும் வழங்கியுண்ணுதவர் வைத்திழக்கப்பட்ட பொன்னைப்போல எனனை-அன்னை எனமேற் பொலலாங்கு கூறப்பட்ட நமக்கு அயலாராகிய மடவார் அலர் தூற்றிய முறைமையைக் கண்டு இறுக முடிந்துகொள்ளு தல போலுஞ் செறிப்புச் செய்தாள். எ - று.

புரத்தல் - காத்தல். பொதிதல - முடிதல். வனபு - பொல்லாங்கு. 'உண்ணுதவர் வைத்திழக்கும பொனபோல' எனவே, அன்னையுநதன்னை யிழப்பவளாதலால் 'அலாபோல பொதிநதுகொணடாள' என உள்ளுறை யுவமங்கொள்க. (உகரு)

செவிலி கனையிருள்அவன்வரக் கண்டமைகூறல்.

செவிலிகனையிருள் அவன்வரக் கணடமைகூறல எ-து. செவிலி செறி ந்த இருட்குறி யிடத்துத தலைவன வரககணடாளெனத தலைவி பாங்கிக குணாத்தல.

---

வெங்கார் முகவெமபுருவ மினனேயன்னை மேலொருநாள்
எங்கா தலரிருளெயதலகண டாளிந்த வேழுலகும
மங்காமல வநதருள வாணனறென மாறைவண டானமஞ்சச்
சங்காழி கொணடேறி யுங்கணடல வேலியந தண்டுறைக்கே.

இ - ள். வெவ்விய விறபோன்ற வெய்ய புருவத்தையுடைய மின் னே! இந்த ஏழுலகுங் கெடாமல்வந்து காக்கப்பட்ட வாணன தென்மா றைநாட்டில் 'வணடானம் மஞ்சக் கடலானது சங்கைககொணடேறியும் தாழைவேலி செய்தாற்போன்றிருக்கின்ற தணணியதுறையினகண எம் முடையகாதலர் இருட்குறி வருதலை முன்னம ஒருநாள் அன்னைகணடாள். எ - று.

காரமுகம் - வில். மஙகாமல் - கெடாமல். வண்டானம்-நாரை. 'ஆழி சங்கு' எனஇயையும். கணடல் - தாழை. சஙகுகொணடேறிதல - திரை விசையால் சஙகினை யுநதுதல். (உகசு)

இவற்றுள் களுழ்தற் காரணங் கூற லொன்றுமொழித்து ஏனைய வெல்லாம் பாங்கி வினவாதொழியவும் தலைவி அறத்தொடுநிற்கு நிலை தனக்குரியவாமாறு அறிந்துகொள்க.

### செவிலிதலைமகள்வேற்றுமைகண்டுபாங்கியைவினாதல்.

(இது வெளிப்படை.)

பொன்னுற்ற கொங்கையு முத்துற்ற கண்ணுமிப் போதுகண்டேன்
பண்ணுற்ற சொல்லுமின் பாலுங்கொள் ளாள்பதி னாலுலகும்
மன்னுற்ற வண்புகழ் வாணன்றென் மாறையென் மானனையாட்
கென்னுற்ற தென்றறி யேன்புனங் காவ லிருந்தபின்னே.

இ - ள். பொன்போன்ற பசலைநிறம்பொருந்திய கொங்கையும் முத்துப்போலநீருற்றகண்ணும் இப்போது கண்டேன், அதுவன்றியும் யான்சொல்லுஞ்சொல்லும் இனிய பாலையுமுட்கொள்ளாள், ஆதலின், பதினாலுலகும் மன்னுற்றவளவிய புகழையுடைய வாணன் தென்மாறைநாட்டில் புனங்காவலிருந்தபின் என்மான்போன்றவட்கு யாதுற்றதென்றுயானறியேன்.

‘பதினாலுலகும்’ என்புழி உம்மை முற்றும்மை. ‘புனங்காவலிகந்த பின்னே’ என்று பாடமோதுவாருமுளர். (உகஎ)

### பாங்கிவெறிவிலக்கல்.

பாங்கி வெறிவிலக்கல் எ - து. செவிலி வெறியாட்டாளனை யழைத்து மகட்கு நோயுற்றவாறும், அது தீருமாறும் சொல்லவேண்டுமென்று கேட்புழி; தெய்வம்வந்தாடும்போது பாங்கி அத்தெய்வத்தை ஆடவேண்டாமென்று விலக்குதல். வெறியாட்டாளன் ஆடு பலிகொடுத்தால்தீருமென்புழி அவ்வாட்டைக் கொல்லாமல் விலக்கலெனினும் அமையும்.

---

அறியா மையினொன்று கேட்கலுற் றேனும்மை யாவதொன்றுங்
குறியா மறியுயிர் கொள்ளவென் றோகுரு திப்பலிகூர்
வெறியா லிவளுயிர் மீட்கவென் றோவென்றி வேல்வலத்தீர்
சிறியார் மனையில்வந் தீர்தஞ்சை வாணன் சிலம்பினின்றே.

இ - ள். வெற்றிவேலை வலத்திலுடையவரே! நும்மையாம் அறியாமையினால் ஒன்று கேட்கலுற்றேம் ஆவதொன்றுங் குறியாது மறியுயிரைக் கொள்ளவென்றோ அந்த விரதப்பலி தரும் மிகுந்த வெறியினாலே இவள் உயிரைமீட்கவென்றோ தஞ்சைவாணன்சிலம்பினின்றுஞ் சிறியார்மனையில் வந்தீர்! திருக்கோயிற் கெழுந்தருள்வீர். எ - று.

மறி - ஆடு. ‘திருக்கோயிற்கெழுந்தருள்வீர்’ என்றது அவாய்நிலையான் வந்தது. (உகஅ)

## வெறிவிலக்கியவதனும் சேவிலி பாங்கியைவினுதல்.

(இதுவெளிப்படை.)

மணகுன்ற வந்த கலியினை மாற்றிய வாணன்றஞ்சை
ஒண்குன்ற மங்கையர் முன்னாமின் னேயுமை யாணமகனைப்
பண்குன்ற வென்றசொல வள்ளிதன கோனைபபைக் தாரயிலால்
வெணகுன் றெறிந்தசெவ் வேளையிவ் வாறென் விளமபியதே.

இ-ள். உலகங் குன்றவந்த கலியுகத்தைமாற்றிய வாணன் தஞ்சைய தொள்ளிய குனறிடதது மின்னே!உமையாள் மகனைப் பண்குறை வென்ற சொல்லையுடைய வளளிககு நாயகனைப பசியமாலைசூடிய வேலினுலே வெண்குனறமாகிய குருகுபெயாக்குன்றத்தையெறிந்த செவ்வேளை மஙகையாமுனனர் இவ்வாறு நீவிளமபியதெனை? எ-று.

அயில் - வேல். வெண்குன்று - கிரவுஞ்சகிரி. 'குன்ற மின்னே' எனவும், 'செவ்வேளை மஙகையாமுன்னே' எனவும் 'விளம்பியதென்னே' எனவு மியையும். (உ௯௯)

## தோழிபூத்தருபுணர்ச்சியால்அறத்தொடுநிற்றல்.

தோழிபூத்தரு புணாசசியா லறததொடுநிறறல் எ-து. பூவைக்கொடுத்ததனுற் புணாநத களவை வெளிபபடுததிககூறல.

---

போருறை நீக்கணை போலுநின் கணைகண்டு போதவஞ்சி
நீருறை நீலமு நீயுநண் பாகென்று நின்மகட்கோர்
தாருறை தோளவர் தநதனர் வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
காருறை சோலையில யாமவினை யாடிய காலையிலே

இ-ள். அன்னய்! போருறைநத நீயகணையை யொக்கும் நினது கண்ணைக்கண்டு மிகவுமஞ்சி நீரிலேயொழிததுறைநதநீலமும் நீயும் உறவாக வென்று நினது மகட்கு ஒரு தாருறைநததோளையுடையவா வாணன்தமிழ்த் தஞ்சையைச் சூழ்ந்து புயலுறைநத சோலையிடதது யாம விளையாடிய காலத்தில் நீலப்பூவைததநதனா. எ-று.

நண்பு - உறவு. தார் - மாலை. கார் - புயல். (௩00)

## புனறருபுணர்ச்சியால்அறத்தொடுநிற்றல்.

புனறறுபுணர்ச்சியா லறத்தொடுநிற்றல் எ-து. புனலாற் கூடும் புணர்ச்சியை வெளிப்படுத்திக் கூறல்.

---

ஒழிதோற் றியசொல்ல லுன்மக ளோதிக் குடைந்தகொண்டல்
பொழிதோற் றிரளுந்தி வந்தசெந் நீருந்திப் பொற்பினுக்கோர்
சுழிதோற் றிடும்பகை தீர்க்கின்ற போதொரு தோன்றலுமவ்
வழிதோற்றி வந்தெடுத் தான்றஞ்சை வாணன்றென் வையையிலே.

இ - ள். அன்னையே! நின்மகள் ஓதிக்கொப்பில்லா துடைந்த மேகம் தோற்ற பகைதீர்த்தற்காய்ப் பொழியப்பட்ட யானைத்திரளைத் தள்ளிக் கொண்டு வந்த சிவந்த நீர்வெள்ளந் தஞ்சைவாணன் தென்வையையிடத்துப் பெருக நின்மகளும் நதிக்குத்தோற்றுப்போன பகையைத் தீர்த்தற்கு யாம் நீராடியகாலத்தில் சுழிவந்து நின்மகளை வாங்கிக்கொண்டு போம் போதில் அவ்வழியிலே வருவானொருவேந்தன் வந்தெடுத்தான், ஆதலால் நின்கருத்தில் தோன்றியதனைச் சொல்லுத லொழிவாயாக எ - று.

எனவே,-புணர்ச்சியுண்மை குறிப்பின்றோன்றியவாறாயிற்று. ஓதி-கூந்தல். கொண்டல் - மேகம். தோல - யானை. உந்தி-தள்ளி. உந்தி-கொப்பூழ். தோன்றல்-வேந்தன். (௩௱௧)

களிறுதருபுணர்ச்சியால் அறத்தொடுநிற்றல்.

களிறுதருபுணர்ச்சியாலறத்தொடுநிற்றல் எ - து களிறுதரு புணர்ச்சியாற் களவை வெளிப்படுத்தல்.

---

மண்ணலை யாமல் வளர்க்கின்ற வாணன்றென் மாறைவெற்பில்
அண்ணலை யாயிழை பாகனென் றஞ்சின மஞ்சனந்தோய்
கண்ணலை நீரிடப் பாகமு மேல்வந்த கைக்களிற்றின்
புண்ணலை நீர்வலப் பாகமுந் தோயப் பொருதன்றே.

இ - ள். அன்னையே! இப்புவியை அலையாமல் வளர்க்கின்றவாணன் தென்மாறை வெற்பில் யாம் சோலையில் விளையாடுகையிலோர் யானைபாய வரும்போது நின்மகள் அலறிக்கூவ, அப்போது அவ்வழியில் வருகின்றானொருவேந்தன் விரைந்துவந்து அஞ்சலை யென்று நின்மகளை இடப்பக்கத்தி லணைத்துக்கொண்டு வலத்துகையில் வேலைவாங்கி மேல்வந்தகையொடுங் கூடிய யானைமுகத்தி லழுத்திப்பொருதவன்று ஆனைப்புண்ணில் அலைபோல் வருங்குருதிநீர் வலப்பாகமெல்லாம் நனைத்தலால் வலப்பால்சிவந்தும், அவள் அழுதபோது கரைந்து கண்ணூறிய கடலில் வருநீர் இடப் பாகங் கறுத்தும், ஆணுருவும் பெண்ணுருவு மொன்றாய்த் தோன்றிய வதனால் அவ்வேந்தனை ஆயிழைபாகனென்ன யாம் அஞ்சினம். எ - று.

எனவே,-குறிப்பால் புணர்ச்சி யுண்மை யறிவித்தவாறு காண்க. அண்ணல் - வேந்தன். ஆயிழைபாகன் - சிவன். அஞ்சனம் - மை. அலை-கடல்

### தலைமகள் வேற்றுமைகண்டு நற்றாய் செவிலியைவினாதல்.
(இது வெளிப்படை.)

தண்டார் தழுவிய வேலண்ணல் வாணன்றென் றஞ்சைவெற்பில்
வண்டார் குழலிதன் வண்ணமுங் கண்ணும் வடிவுமுன்னாள்
கண்டா ரறியும் படியன வேயல்ல காரணமொன்
றுண்டா லுயிரனை யாயயி ராமலுரை யெனக்கே.

இ-ள். உயிரனையாய்! தண்ணியமாலையணிந்தவேலுடைய வாணனது அழகிய தஞ்சை வெற்பிடத்து வண்டார்ந்த குழலையுடையாளது நிறமும் கண்ணும் வடிவும்முன்னாள் கண்டார்க்குஇப்போதுவேறுபட்டிருத்தலால் அறியுந்தன்மையனவேயல்ல, இவ்வடிவு வேறுபடுதற்குக் காரணம் ஒன்றுண்டாதலால் இக்காரணத்தை ஐயுறாமல் எனக்குரைப்பாய் எ-று.

ஐயுறுதல் - சொல்லத்தகாதென்று மறைத்தல், தண்டார் - மாலை. தழுவிய-அணிந்த. தென் -அழகு. வண்ணம் - நிறம். அயிர்த்தல் - அயாப்புறுதல் (௩௦௩)

### செவிலிநற்றாய்க்கு முன்னிலைமொழியால் அறத்தொடுநிற்றல்.

செவிலிநற்றாய்க்கு * * * அறத்தொடுநிற்றல் எ-து முன்னிலைப் புறமொழியாலுணர்த்தாது முன்னிலை மொழியினாலே களவை வெளிப்படுத்திக்கூறல்.

---

மலைவந்த தோவெனும் வாரண வாணன்றென் மாறைமதி
சிலைவந்த தோவெனு நன்னுத லாயொரு செல்வரிங்கோர்
கலைவந்த தோவென வந்துவி னாவிநங் காரிகைக்கு
முலைவந்த தோவிலை யோவென்னு நாளின் முயங்கினரே.

இ-ள் மலைவந்ததோவென்று ஒப்புக்கூறும் வாரணத்தையுடைய வாணனது தென்மாறைநாட்டில் மதிவந்ததோ! சிலைவந்ததோ! என்று ஐயந்தரு நல்ல நுதலையுடையாய்! புனங்காக்குநாளில் ஒருதலைவர்வந்து இங்கோர் கலைவந்ததோவென்று வினாவி, நம்முடைய பெண்ணுக்கு முலைவந்ததோ இல்லையோவென்னும் பேதைமைப் பருவத்து முயங்கினர். எ-று.

வாரணம்-யானை, 'வந்ததோ' என்பதனை மதிக்குங் கூட்டுக. மதி - பிறை. முயங்கல் - புணர்தல். 'செல்வர்வந்து' என இயையும். ஓகாரம் அனைத்தும் ஐயம்.

'தலைவி பாங்கிக்குமுன்னிலைமொழியால் அறத்தொடுநிற்றலும்' செவிலி நற்றாய்க்குமுன்னிலைமொழியால் அறத்தொடுநிற்றலும்' ஆகிய இரண்டும் 'பூத்தருபுணர்ச்சி' முதல் மூன்றும் முன்னிலைமொழி. வெறிவிலக்கல் ஒன்றும் முன்னிலைப் புறமொழி. (௩௦௪)

அறத்தொடுநிற்றல்-முற்றிற்று.

---

## உடன்போக்கு.

அஃதாவது, தலைவன் தன்னூர்க்குத் தலைவியை யுடன்கொண்டு போதல்.

† "போக்கேகற்பொடு புணர்ந்தகௌவை
மீட்சியென்றாங்கு விளம்பியமூன்றும்
வெளிப்படைக்கிளவியின் வழிப்படுதொகையே"— என்னுஞ்
சூத்திரத்தால் உடன்போக்கு மூவகைப்படும்.

† "போக்கறிவுறுத்தல் போக்குடன்படாமை
போக்குடன்படுத்தல் போக்குடன்படுதல்
போக்கல்விலக்கல் புகழ்ந்தேற்றலென்
றியாப்புடையுடன்போக்கிருநான்குவகைத்தே."— என்னுஞ்
சூத்திரவிதியால் உடன்போக்கு எட்டுவகைப்படும்.

### பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல்.

பாங்கி தலைவற்கு உடன்போக்குணர்த்தல் எ - து காப்புமிகலால் உன்னூர்க்குடன்கொண்டுபோதியென்ப பாங்கி தலைவற்குணர்த்தல்.

---

மைந்நீர் நெடுங்கண் மடந்தை யுடன்றஞ்சை வாணன்வெற்பா
செந்நீர் விழவணி நின்னகர்க் கேகொண்டு சேர்ந்தருண்மற்
றிந்நீர்மை யல்லதொ ராறின்றா லிங்கெம்மைய ரொன்றல
முந்நீ ருலகுங்கொள் ளார்விலை யாக முலையினுக்கே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பா! இவ்விடத்தெம்மையர் கருத்துச் சொல்லின் முலையினுக்கு விலையாக முந்நீர்சூழ்ந்த இவ்வுலகத்தையுங்கொள்ளார்கள். ஆதலால், குங்குமநீராடும் வசந்தத்திருவிழா வலங்காரத்தை யுடைய நின்னகர்க்கு மையெழுதிய நீர்மையையுடைய நெடியகண்ணை யுடைய மடந்தையையுடன்கொண்டு சேர்ந்தருள்வாய். இம்முறையல்லாது நீ வரைவதற்கு வேறோர் வழியில்லை. எ - று.

'வெற்பா இங்கெம்மையர்' எனவும், 'முலையினுக்கு விலையாக முந்நீருலகங்கொள்ளார்' எனவும், 'நின்னகர்க்குமைந்நீர்நெடுங்கண்' எனவும், 'உடன் கொண்டு' எனவும் இயையும். மற்று - வினைமாற்று. செந்நீர் - குங்குமநீர். ஆறு - வழி. (௯௭)

---

† அகப்பொருள் விளக்கம், வரைவியல், சூ. க௦, கக.

### தலைமகன் மறுத்தல்.

(இது வெளிப்படை.)

பாரோ முலைவிலை யென்பர் நின்கேளி ரொன் பல்கிளைவாழ்
ஊரோ வணியதன் றொணடொடி யாபவிஙைத யுணகணகளோ
தாரோ வளரும புயன்றஞ்சை வாணன் றரியலாபோல
யாரோ தனிநடப பாரரு‌ங கானமிவ ளுடனே.

இ - ள். ஒளளியவளையினையுடையாய்! நின் சுறறத்தார பாரை முலை விலையென்று சொலவாரோ? உடன்கொணடுபோதறகு என சுறறததார் வாழுகினற ஊரணிததனறு. அ ஈறியும, போவாமெனனில கரியமாதினை மையுண்டகணகளோ தாரோவளரும புயததையுடைய தஞ்சைவாணனுக் குத் தரியலாபோல அரியகாட்டில இவளுடன தனியாய் நடப்பவர்யாா?

எனவே, - தரியலாசெலலுங் கானததில ஏனறோசேறல அரிதென்று கூறியவாறாயிறறு. பாரோ எனபுழி ஓகாரம் என்பா் எனபதனோடு கூட்டுக. அவ்வோகாரம-வினா. ஊரா-யாா எனபுழி, ஓகாரம இரண்டும அசைநிலை. கண்களோ, தாரோ எனபுழி ஓகாரமிரணடும எணணினகணவநதன. ()

### அவளுடன்படுத்தல்.

அவளுடன்படுததல் எ - து. பாஙகிதலைவனை யுடன்படுததல்.

---

சுருளேய் குழலுஞ் சுணங்கேய் முலையுஞ் சுமந்துநற்புப
பொருளே யெனச்சுரம போதுமப் போது புகழ்வெயிலான்
மருளேய் கலியிருண மாற்றிய வாணனறென் மாறையினின
அருளே யொழியவுண் டோநிழ லாவ தணங்கினுககே.

இ - ள். சுருள்பொருந்திய குழற்பாரமுஞ் சுணஙகியையுந்தமுலைப்பா ரமுஞ் சுமந்து, பொருளாவது கறபேயெனததெளிநது சுரததிறசெல்லும் போது தன்புகழருளாகிய வெயிலினாலே மயககமபொருநதிய கலியாகிய இருளைமாற்றிய வாணன் தென்மாறை நாட்டிலிருககின்ற அணங்கினுக்கு நிழலாவது நின்னருளையே நிழலெனறுகொள்ளுவதல்லாது வேறொன்றை நிழலென்று கொள்ளப்படாது. எ - று.

சுருள் - கடைகுழற்சி, சுணங்கு - மாமைநிறம். உயமை - எண். பொருளே என்புழி ஏகாரத்தைக் கற்பொடுகூட்டித தேற்றப்பொருண்மை யுரைக்க மருள் - மயக்கம். மருளோ என்புழி ஏகாரம் ஈற்றசை. (௩௦௭)

## தலைவி நாணழிவிரங்கல்.

தலைவிநாணழிவிரங்கல் எ - து. உடன்போகலில் நாணழியுமே யென்று தலைவி யிரங்கிக்கூறல்.

---

மறவாளை வேலங்கை வாணனை மாறைநாட மன்னனைத்தம்
உறவாக வெண்ணி யுறாதவர் போலுயிர் போம்பிறிவென்றும்
துறவாத நாணந் துறப்பது வேண்டலிற் றொல்லுலகில்
பிறவா தொழிகென் றேயொரு காலமும் பெண்பிறப்பே

இ - ள். வீரத்தால் வெற்றிகொண்ட வேலை யகங்கையிற் பிடித்த வாணனை மாறைநாட்டார்க்கு மன்னவனைத் தம் முறவாக வெண்ணி யுறாத பகைவர்போல் உயிர்காத்தற் பொருட்டு என்றுந் துறத்தற்குத் தகுதியல்லாத நாணத்தைத் துறப்பது வேண்டியிருத்தலான், பழையதாகிய உலகில் ஒருகாலமும் பெண்பிறப்புப் பிறவா தொழிந்துவிடலான்று. எ - று.

மறம்-வீரம். வாகை-வெற்றி. அங்கை-அகங்கை. * "அகமென் கிளவிக் குக்கை முன்வரினே - முதனிலை யொழிய முன்னவை கெடுதலும் - வரைநிலையின்றே யாசிரியர்க்க," என்னுஞ் சூத்திரத்தானுணர்க. ஓம்பல்-காத்தல்.

## கற்புமேம்பாடு பாங்கி கூறல்.

கற்புமேம்பாடு பாங்கி கூறல் எ - து. கற்பின் மேம்பாட்டைப் பாங்கி தலைவிக்குக் கூறுகிற்றல்.

---

செங்கான் மலரிற் றிருவன்ன கோலத் தெரிவைபாக்கு
மெய்நா ணுயிரினு மிக்கதென் றோவிர வாவரசர்
தந்நாண் முறைமை தவிர்த்தருள் வாணன் றமிழ்த்தஞ்சைநாட்
டந்நா ணழும்பட வாய்க்கற்பு நோக்க வழகிதன்றே

இ - ள். மடப்பத்தையுடையாய்! சிவந்த முறுக்கவிழ் பருவத்ததாய் தாமரைமலரிருக்கின்ற திருவையொத்த அழகையுடைய தெரிவையர்க்கு மெய்யின்கணிருக்கின்ற நாண் உயிரினுஞ்சிறந்ததென்று சொல்லின், உறவு கலவாத வேந்தர் தம்முடைய வாழ்நாள் முறைமை தவிர்த்தவர் இளையாயுள்ளவரிடத்து அருளைத்தரும் வாணன் தமிழ்த்தஞ்சைநாட்டில் நீ சொல்லப்பட்ட இந்நாணமுங் கற்பைநோக்குமிடத்தில அழகிதன்று. எ - று.

---

* தொல். எழுத். புள்ளிமயங்கியல், சூ. உ௦

நீரென்று கூறினமையால் செங்கான்மலர்-தாமரைமலர். கோலம்-அழகு. விரவுதல்-கலத்தல். * "உயிரினுஞ் சிறந்தன்று நாணே நாணினுஞ்-செயிர்தீர் காட்சி கற்புச்சிறந்தன்று" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. (௯௧௪)

## தலைவியொருப்பட்டெழுதல்.

(இது வெளிப்படை.)

பலரே சுமந்த வுரைகளுந் தாயர்தம் பார்வைகளுஞ்
சிலரே சுமந்து திரியவல் லார்செய்ய செண்பகநாண்
மலரே சுமந்த வயற்றஞ்சை வாணனை வாழ்த்தலர்போல்
அலரே சுமந்து சுமந்திந்த வூரினை யழுங்குகவே.

இ-ள். பலரேசிச்சொல்லும் அந்தவார்த்தைகளும் தாயார் சினந்து பார்க்கின்ற கொடியபார்வைகளும் சுமந்து திரிய வல்லமையுடையார் சிலருளர், என்னான் முடியாது, சிவந்த சண்பக நாண்மலரைச்சுமந்த வயல் சூழ்ந்த தஞ்சைவாணனை வாழ்த்தாப் பகைவர்போல வசைகூறுஞ் சொல்லையே சுமந்து சுமந்து இந்தவூரிலுள்ளார் நின்றிரங்குக. எ-று.

'சுமந்து திரியவல்லார் சிலரோ' வெனக்கூட்டுக. 'என்னான்முடியாது' என்பது அவாய்நிலையான்வந்தது 'இந்தவூரினை யழுங்குகவே' என்பது இடத்துநிகழ்பொருளின்றொழில் இடத்துமேல் நின்றது. அழுங்குதல்-இரங்குதல், கெடுகவென்று பொருள்கூறுவாருமுளர் இவள் கற்புடையளாதலால் கூறியசொற்பிழையாளாதலால், அவ்வாறன்றி மீண்டுவந்து மணமுடித்தலல்லது பொருளன்மையுணர்க. இரங்கல் பொய்க்குமோவெனில் இருவருடன் போயின்பின்னர் அவ்வூரிலுள்ளாரிரங்குதலின் பொய்யாதாயிற்று.

## பாங்கி சுரந்தியல்புரைத்துழி தலைமகள் சொல்லல்.

(இது வெளிப்படை.)

செலவிற் கொடியகளிற் றண்ணல் வாணன்றென் மாறைமன்னன்
வில்லிற் கொடியபுருவமின் னேயென் விளம்புதிநீ
சொலவிற் கொடியநம் மன்னையைப் போல்பவர் சூழ்ந்திருக்கும்
இல்லிற் கொடியகொல் லோசெல்லு நாட்டவ் விருஞ்சுரமே.

இ-ள். இடியினுங் கொடியதாகிய களிற்றுப் பெருமையையுடைய வாணனாகிய தென்மாறை மன்னனது கையிற்பிடித்த வில்லினுங் கொடிய புருவத்தையுடைய மின்போன்றவளே! யான் செல்லுநாட்டில் அப்பெரியசுரமானது சொல்லிலே கொடியளாகிய நம்மன்னையைப்போல்வார் சூழ்ந்திருக்கும் இல்லினுஞ் சுரங் கொடியதோ? எ-று.

---

* தொல். பொருள். களவியல், சூ. ௧௧௩.

'சுரங்கொடியதென நீ விளம்புதி' என்றிவையும், சொல்லின் எண்புழு நெறிப்புமை தொகுத்தல். செல்-இடி. அண்ணல்-பெருமை கொல்-அசை. நீகாரம்-எதிர்மறை. சுரம்-காடு. (௩௧௩)

பாங்கி கையடைகொடுத்தல்.

பாங்கி கையடைகொடுத்தல்- எ - து பாங்கி தலைமகளைத் தலைமகற்கு கையடைகொடுத்தல். கையடை-அடைக்கலம்.

---

"பறந்திருந் தும்பர் பதைப்பப் படரும் புரங்கரப்பச்
சிறந்தெரி யாடிதென் றில்லையன் னாடிறத் தஞ்சிலம்பா
அறந்திருந் துன்னரு ளும்பிறி தாயி னருமறையின்
றிறந்திரிந் தார்கலி யும்முற்று மற்றுமிச் சேணிலத்தே."

[இது பிறசெய்யுட்கவி.]

† "வடமால் வரைகிளை சாயினும் வண்புயல் வாரிபுகும்
கடனு கியநெறி கைவிட நீங்கினுங் கருதலரும்
அடன்மா களிற்றண்ப நின்னையன் றாரிவ்ளை யென்னைமொன்றோர்
உடனுய கேண்மை யொழிந்தறி யாரிவ் வுலகத்திலே."—இது உரைகாரர் எடுத்துக்கூறிய பிறசெய்யுட்கவி. (௩௧௪)

பாங்கிவைகிருள்விடுத்தல்.

பாங்கிவைகிருள்விடுத்தல் எ - து பாங்கியிருளார்ந்த இடையாமத்தில் விடுத்தல். வைகுதல் - தங்குதல்.

---

பொழிநான மன்றலம் பூங்குழ லீர்கள் புணர்ந்துசெலலும
வழிநாடி நும்பின வருகுவல யான்றஞ்சை வாணனவையைச்
சுழிநாணு முந்திகின் றூலகிளைக் கேற்பன சொல்லியினறு
மொழிநா வடங்க மொழிந் தயலாரை முகங்கவிழ்த்தே.

இ - ள்: மான்மதம் பொழியப்பட்ட மணத்தோடுகூடியபூவையணிந்த குழலையும் தஞ்சைவாணனை வையைச் சுழிநாணப்பட்ட வுந்தியையுமுடையாய்! நின்பழமையால்வருகின்ற சுற்றத்தாக் கேற்பனசொல்லி அயலாரை அலர்கூறியநாவடங்க மொழிந்து தலைவனையச்செய்துநீங்கள்கூடிச்செல்லும் வழிதேடி யானும் பின்னேவருவேன். எ - று.

---

* திருக்கோவையார், செ. உ௩௩.
† அம்பிகாபதிகோவை, செ. ௩௨௫.

கானம் - மான்மதம். மன்றல் - மணம். புணர்தல் - கூடல். கிளை - சுற்றம். இன்றுமொழி-அலர்மொழி. 'மன்றலம் பூங்குழல்தஞ்சைவாணன் வையைச் சுழிநாளுமூந்தி' எனக்கூட்டி ஆகுபெயராகக்கூறுக. (கூகநூ)

தலைமகளைத்தலைமகன்சுரத்துய்த்தல்.

தலைமகளைத் தலைமகன் சுரத்துய்த்தல் எ - து. ஐம்பத்து மூன்றாம் தலைமகன் தலைமகளைச் சுரத்திற்செலுத்தல்.

---

துளிபோற் கொடைபயில் சந்திர வாணன் றமிழ்த்தஞ்சையான்
அளிபோற் குளிர்ந்த விளமரக் காவும வன்புகழின்
ஒளிபோல் விளங்கிய வெண்மணல் யாறுமு வந்துகண்டு
நளிபோ தவிழ்குழ லாய்மெல்ல மெல்ல நடந்தருளே

இ - ள் குளிர்ச்சியையுடைய மலர் முறுக்கவிழ்ப்பட்ட கூழலையுடையாய்! மேகம்போற்கொடுக்குந் தொழில்பழகிய சந்திரவாணனுடைய தமிழ் விளங்கப்பட்ட தஞ்சையான அன்புபோலக்குளிர்ந்த இளமரச்சோலையும் அவனது புகழினொளியைப்போல வெண்மணல செறிந்தகான்யாறும் கண்டுமகிழ்ந்து மெல்ல மெல்ல நடந்தருள்வாயாக. எ - று.

துளி-மேகம் பயிலுதல்-பழகுதல. அளி-அன்பு. கா-சோலை. யாறு-கான்யாறு. உவத்தல்-மகிழ்தல். நளி-குளிர்ச்சி. 'கண்டுவந்து' என இயையும்.

தலைமகன் றலைமகளசைவறிந்திருத்தல்.

(இது வெளிப்படை.)

அசைவு-வருத்தம். அன்புகொண்டமடப்பெடையசைஇயவருத்தத்தை என்றார் பிறரும். அசைஇய-வருந்திய.

---

வரமாமை வேற்படை வாணன் றென்மாறை வணங்கலர்கள்
புரமான வல்லழல் பொங்குவெங் கானிற் பொருந்தியகூர்
அரமான கலனுன் னடிமல ராற்றல வாதலினும்
சுரமாறு மளவுநல் லாயிருப் பாமிந்தச் சோலையிலே.

இ- ள். நல்லாய்! வரத்தையுடைய மாமைநிறம்பொருந்திய வேற்படையையுடைய வாணன்தென்மாறையை வணங்காதார் நகரைப்போலவெயிலழல்பொங்கியெழும் வெய்யக்காட்டிலேகூர்பொருந்திய அரத்துக்கொப்பானகற்கள் உன்அடிமலர் பொறுக்குந்தன்மையவல்ல; ஆதலால், சுரமாறுமளவும் நாம் இந்தச்சோலையிலே யிருப்பாம். எ - று.

மாலை குருகிப்புள்ளினிறம். 'வரமாலைவேற்படை வாணன்' என்று பாடமோதிப் பெருமையுங் கூர்மையுமுடைய வேற்படையெனப்பொருள் கூறுக. 'கூர்பொருந்திய' என்பதுமது. அரமானனையபுழிஉவமைத்தொகை, புரமான - புரம்போல. ஆற்றல - பொறுத்தல். † 'ஆற்றுவாராற்றல் பசியாற்றல்' என்றாரபிறரும்.

சுரம-வழி. ஆறுதல - வெப்பந்தணிதல எல்லை அளவு. (கூகஎ)

உவந்தலர்சூட்டியுண்மகிழ்ந்துரைத்தல்.

உவந்தலர் சூட்டி யுண்மகிழ்ந்துரைத்தல் எ - து. தலைமகனை மகிழ்ந்து அவள்கூந்தற்கு அலரைச்சூட்டி அதனால பரவசமகிழ்ச்சியடைந்து கூறுதல. உவகை அறிவொடுகூடியது, மகிழ்ச்சி யறிவழிந்தது. என்னை, - ‡ "உள்ளக்களித்தலுங் காணமகிழ்தலுங், கள்ளுக்கில் காமத்திற்குண்டு." என்னுங் குறட்குப் பரிமேலழகர் உரையானுமுணர்க,

---

அடிமலர் போற்றவும் போற்றியன் பாலிவ ளாய்முடிக்கியான்
கடிமலர் சூட்டவுங் காட்டிய தாற்களவா காய்ந்தெறியுந்
துடிமலா சீர்க்கெதிர் கூகை யிரட்டுஞ் சுரத்திடையோர்
வடிமலர் வேறபடை யானவாணன் மாறையென மாதவமே.

இ - ள். களவா சினந்தடிக்குந் தடியின்கண் விரிவாகிய தாளவோசைக்கு எதிராகக் கூகையொலிக்குங் காட்டிடை ஒப்பற்ற கூர்மை விரிந்த வேற்படையுடையவாணன் தென்மாறைநாட்டிலிருக்கின்ற என்னுடைய மாத[illegible]இவளடிமலரைப்போற்றவும் போற்றி அன்பால இவளாய்ந்துமுடித்த கொண்டைக்கு யான் மணமலரைச்சூட்டவும காட்டியது. எ - று.

கடிமலர்-மணமலர். காய்தல்-சினத்தல. எறிதல-அடித்தல், துடி - பாலைநிலத்துப்பறை. மலர்தல்-விரிதல் சீர்-தாளவோசை. இரட்டுதல்- ஒலித்தல். சுரம்-காடு வடி-வடித்தற்றொழில. (கூகஅ)

கண்டோரயிர்த்தல்.

கண்டோரயிர்த்தல எ - து. வடிவின்மேம்பாட்டாற் கண்டோரைய முறக்கூறுதல்.

---

சையத் திரள்புயன் சந்திர வாணன் றனிபுரக்கும்
வையத் துறைகின்ற மானிட ரோவன்றி வானவரோ
கையப் படுமழல வெஞ்சுரத் தூடு நடந் தவரொன்
றையப் படுவதல் லானுண மைசால வறிவரிதே.

---

† திருக்குறள், செ. உஉரு.
‡ ஷை, செ. கஉஅந.

இ - ள் வருகின்றோர் உளமனையப் பாலைஅழல்படும்வெய்ய சுரத்தில் நடந்த இவர் மலைபோலதிரண்டபுயத்தையுடையவனாகிய சந்திர வாணனை ஒப்பிலாது காததளிக்கும புவியினகண உறைகின்றமானிடரோ ! அல்லது வானுலகினகணுளளவரோ! என்று ஐயபபடுவதலலாமல உண்மையை மிகவும அறியவரிது. எ - று

சையம - மலை திரள்புயம் - வினைததொகை புரததல-காததல். வையம் - புவி 'அழலபடும' என இயையும சால-மிகவும. (௬௧௯)

### கண்டோர்காதலின்விலக்கல்.

கண்டோர்காதலின் விலக்கல எ - து கண்டோர்காதலினாலபோக்கை விலக்கி எமபாடியிற் றங்கிப்போமென்று கூறுதல

---

கண்டோராவார் - பாலைநிலத தெயிற்றியர். ஆடவர் கண்டோரெனில் வருங்குற்றமெனின், 'செவிலிகலந்துடனவருவோரைககண்டு கேட்டல' என்னும் கிளவிசசெய்யுளில யானதலைவனைக் கண்டேனெனின காதலி தலைவியைக கண்டாள எனபதனோடு மாறுபடு மெனறுணர்க.

---

மானுந் திருவு மெனவரு வீர்தஞ்சை வாணன்றெவ்வூர்
போலுஞ் சுரமினிப் போகவொண் ணாது பொருப்படைந்தான்
ஆலும் புரவி யருக்கனிந் கங்கு லடற்கடமான்
பாலுந் தசையுமுண் டேதங்கு வீரெங்கள் பாடியிலே

இ - ள். மானுந்திருவுமென்று சொலல வருவீர்! தஞ்சைவாணனை பகைவரிருக்கும ஊர்போலும் பாழாகிய சுரம இன்று இவவிடம விட்டு அப்பாற்போகததகாது ஆரவாரஞ்செய்யும புரவி பூட்டிய தேரில்வரும அருக்கன அததமலையடைந்தான. இருள்சேருங்காலமாகிய இக்கங்குலில் போர்செய்யும கடமானபாலும தசையும யாங்கள தருதும, அதனையுண்டு எங்களபாடியில தங்குவீர். எ - று.

தெவ்வூர் பாழாய மக்களியக்கமின்றி யிருததலின சுரம் உவமையாயிற்று. 'அருக்கன பொருப்படைந்தான' எனக் கூட்டுக. ஆலுதல்-ஆரவாரித்தல். அடல - போர். (௬௨௦)

### தன்பதியணிமைசாற்றல்

தன்பதியணிமைசாற்றல எ - து இவ்விடத்தில நயமூரில கைகிப் போதல்வேண்டுமென்று தலைவி கூறியவழித தலைவனதன்பதி அணித்தென்று கண்டோர் கூறுதல.

---

தொடங்கும் பிறைநுதற் றோகையு நீயுமுன் றோன்றுகின்ற
கடங்குன் றிரண்டுங் கடந்துசென் றூர்கம லத்தடமும்
கிடங்கும் புரிசையுஞ் சூழ்ந்தெதிர் தோன்றுங் கிளைத்தபைந்தார்த்
தடங்குங் குமநெடு தோள்வாணன் மாறையுந் தஞ்சையுமே.

இ - ள். வளரஆரம்பிக்கும் பிறைபோலும் நுதலையுடைய தோகை போன்றவளும் நீயும் முன்னே தோன்றுகின்ற காடுஞ் சிறுமலையுமாகிய இரண்டும் கடந்து சென்றால் கமலப்பொய்கையும் கமுகும் புரிசையுஞ் சூழ்ந்து வாவியிற் கிளைத்த நீலத்தாரணிந்த பெருமையுடைய குங்குமம் பூசிய நெடியதோளையுடைய வாணன்மாறையும் தஞ்சையும் எதிராகத் தோன்றும். எ - று.

தொடங்குதல் - ஆரம்பித்தல். தோகை - ஆகுபெயர். கடம் - காடு. குன்று - சிறுமலை. கிடங்கு - அகழ். புரிசை - மதில். கிளைத்தல்-தோன்றுதல். 'கிளைத்த பைந்தார்' என்பது * "குண்டு சுனைபூத்தவண்டுபடுகண்ணி" என்றாற்போல ஒற்றுமையத்தாற் செய்யப்படு பொருண்மேல் நின்றது.()

தலைவன்தன்பதியடைந்தமைசாற்றல்.

தலைவன் தன்பதி யடைந்தமை சாற்றல் எ - து. தலைவன் தலைமகட்குத் தன்பதி யடைந்தமை யுணர்த்தல்

---

சந்தனந் தோய்ந்து தயங்குமுத் தாரந் தரித்துவிம்மும்
நந்தனந் தாங்கி நடுங்கிடை போல நடந்திங்ஙனே
நொந்தனங் காலென்று நோவல்பொன் னேயொரு நோயுமின்றி
வந்தனங் காணிது காவலவாணன் மாறை வளநகரே.

இ - ள். பொன்போன்றவளே! சந்தனந்தோய்ந்து விளங்கப்பட்ட முத்துமாலையணிந்து பூரிக்கும் நமது தனந்தாங்கி நடுங்குமிடைபோல நடந்து இவ்விடத்தில் காலநொந்தனமென்று நோவற்க; ஒருதுன்பமுமின்றி வந்தனம், வாணன் மாறை வளநகரிது காண்பாய். எ - று.

தான்அவன்என்னும் வேற்றுமையின்மையான் நந்தனம் என்றுகூறினுனென்க. பொன் - ஆகுபெயர். நோய்-துன்பம். 'வந்தனங்காண்' என்புழி காண் உரையசை.

இவற்றுள் பாங்கி 'தலைவற்குடன் போக்குணர்த்தலும்,' 'தலைவிக்குடன் போக்குணர்த்தலும்' ஆகிய இரண்டும் போக்கறிவுறுத்தல் 'தலைமகன் மறுத்தலும்,' 'தலைவி நாணழிந்திரங்கலும்' ஆகியஇரண்டும் போக்குடன் படாமை.

* திருமுருகாற்றுப்படை, குன்றுதோராடல்.

'பாங்கி தலைவனை யுடன்படுத்தலும,' 'தலைவி கற்பினமேம்பாடு பூண்மு லைப்பாங்கி புகறலும்' ஆகிய இரண்டும் போக்குடன்படுத்தல். 'தலைவனபோக் குடன்படுத்தலும,' 'தலைவியொருப்படடெழுதலும,' 'பாங்கிசுரத்தியல்புரை த்தழிச்சொலலலும்' ஆகியமூன்றுமஉடனபோக்குடனபடுதல். 'பாங்கிகைய டைகொடுத்தலும,' 'வைகிருள விடுத்தலும,' 'தலைமகன தலைமகளைச சுரத்து யத்தலும்' ஆகிய மூன்றும போக்கல 'தலைவன தலைவி அசைவறிந்திழுத்த லும,' 'கண்டோர்காதலினவிலக்கலும்' ஆகிய இரண்டுமெவிலக்கல. 'தலைவன் தலைவியையுவந்தலர்சூட்டியுணமகிழ்ந்துரைத்தலும,' 'கண்டோரயிர்த்தலும்' ஆகிய இரண்டும புகழ்தல. 'கண்டோர்தனபதியணிமைசாற்றலும,' 'தலைவன் தன்பதியடைந்தமை தலைவிக்குணர்த்தலும' ஆகிய இரண்டும தேற்றலெனக் கொள்க. (கூஉஉ)

உடனபோக்கு முற்றிற்று.

---

## கற்பொடுபுணர்ந்தகவ்வை.

கற்பொடு புணர்ந்தகவ்வை எ - து தலைவி தலைவனதுடைமையாய்க் கற்பொடுகூடிய வதனை அயலார் விராய சேரியாபலருமறிதல

† "செவிலிபுலம்பல நற்றாயபுலம்பல
கவாமனைமருட்சி கண்டோர்ரக்கம்
செவிலிபினதேடிச சேறலெனறாங்கு
கறபொடுபுணர்ந்த கவ்வையவகைத்தே." — எனனுஞ்

சூத்திரவிதியால கறபொடு புணர்ந்த கவ்வை ஐவகைப்படும.

### செவிலிபாங்கியைவினாதல்

(இது வெளிப்படை)

நலம்புனை யாயமு நீநற் றாயொடு நானுநனபொன
சிலம்புயர் சோலையுஞ் சிற்றிலும் பேரிலுந் தெண்டிரைமேல
வலம்புரி யூர்வயல சூழ்தஞ்சை வாணன வாழ்கதலர்போல
புலம்புற மாதரெங் கேமக ளேதனிப போயினளே.

இ - ள். நலமபுனைந்த ஆயமும நீயும நறறாயொடு நானும, நல்லஅழகிய மலைபடைத்து உயர்ந்தசோலையும அவள விளையாடுஞ்சிற்றிலும அவளியங்கித் திரியும்பெரியமனையும தெளிந்ததிரையினமேலவலம்புரிசசங்குஊர்ந்துவரும் வயல்சூழ்ந்த தஞ்சைவாணனைவாழ்த்தாதபகைவர்போலப் புலம்புதலுடைய மாதர். எங்கே தனியாய்ப்போயினாள்? யான் அறியசசொலவாயாக. எ - று.

நலம்புனையாயம்-தலைவிக்கழகாயலங்கரிக்கும ஆயம. ஒடு-எண்ணொடு.

---

+ அகப்பொருள விளக்கம், வரைவியல், சூ கரு.

## பாங்கிசெவிலிக்குணர்த்தல்.

(இது வெளிப்படை.)

வெறுத்தா ரொறுத்துரை மேலுநங் கேளிர் விழைதலின்றி
மறுத்தா ரவற்கு மணமதனாற் றஞ்சை வாணர்பிரானை
கறுத்தார் புரந்து நடந்தனள் காளைபின் காமர்கற்பால்
பொறுத்தா ளழற்சுரந் தன்னையன் றோவின்ன பொலங்கொடியே.

இ - ள். அன்னாய்! நின்பொலங்கொடி நஞ்சுற்றத்தார் வெறுத்தார்; அதன்றியும், ஒறுத்த சொல்லைச் சொல்லுதல் மேலும் விழைதலின்றி அத்தலைவற்கு மணத்தை மறுத்தார்; அதனால் தஞ்சைவாணர் குலத்துக்குப்பிரானை கோபித்த பகைவருராகிய காட்டில் காளைபின் நடந்தனள், அழகிய கற்பினால் சுரத்தழல் அன்னை பொறுத்தாள். எ - று.

ஒறுத்துரை-சினத்துப் பலகாற் கூறுதல். விழைதல் - விருப்பம். கறுத்தல்-கோபித்தல். காளை-பாலைநிலத்துத் தலைவன். காமர்-அழகு. 'மணத்தை மறுத்தார்' எனவும், 'சுரத்தழற்றன்னை' எனவும் இயையும். (௩௨௪)

## பாங்கியினுணர்ந்து செவிலி தேற்றுவோர்க் கெதிரழிந்து கூறல்.

(இது வெளிப்படை)

அழிந்து கூறல் - நொந்து கூறல்.

மாறா வளவயல் சூழ்தஞ்சை வாணன்றென் மாறையென்கண்
ஆறா வருந்துய ராற்றுகின் றீரறி வேகொளுந்தி
ஊறா வனகடிந் தென்முலை யூறமிர் தூட்டியின்சொல்
கூறா வளர்த்ததற் கோவன்னை நீத்ததென் கோல்வளையே.

இ - ள். வளமாறாத வயல் சூழ்ந்த தஞ்சைவாணன் தென்மாறையில் என்னிடத்தில் ஆறாத அருந்துயரையாற்றுகின்றவரோ! அறிவைப்பொருந்தித் துன்பமானவை கடிந்து என்முலையிலூறும் அமிழ்தத்தை யூட்டி இனியசொல்லைக்கூறி அரிதாய் வளர்த்ததற்கோ என் அழகிய வளையையுடையாள் என்னை விட்டுநீங்கியது! எ - று.

'வளமாறா' எனஇயையும். ஏகாரம்-ஈற்றசை. கொளுத்தல்-பொருந்தல். ஊறு-துன்பம். கூறா-கூறி. நீத்தல் - துறத்தல். கோல்வளை - ஆகுபெயர். கோலம்-அழகு, கோல் எனக்கடைக்குறை. கோல்வளையிற் புள்ளியென் பாருமுளர். (௩௨௫)

### செவிலி தன்னறிவின்மை தன்னை நொந்துரைத்தல்.

செவிலி தன்னறிவின்மை தன்னை நொந்துரைத்தல் எ - து. தலைவி போதற்குத் தன் குறிப்பினால் அறிவித்த தன்மையை யறிந்திலே னென்று தன்னறிவின்மை தன்னைத் தெளிந்து கூறல்.

---

வழியா வரும்பெரு நீர்த்தஞ்சை வாணனை வாழ்த்தலார்போல்
கழியாத வன்புடைக் காளைபின் னாளைக் கலந்துகொண்டல்
பொழியாத வெஞ்சுரம் போகுவ லியானென்று போங்குறிப்பால்
ஒழியாதென முன்புசொன்னாள் பேதை யேனொன்றை யோர்ந்திலனே.

இ - ள். வாய்க்கால் நிறைந்து வழிந்துவரும் பெரிய நீர் சூழ்ந்த தஞ்சைவாணனை வாழ்த்தாத பகைவர் போல நீங்காத அன்பையுடைய காளைபின்னே நாளைகலந்து ஒருக்காலும் கார்வந்து பெய்யாத வெவ்விய காட்டில் யான்போகுவலென்று போங்குறிப்பையெல்லாம் விடாது என்முன்பு சொன்னாள், யானறிவிலேன் ஆதலால், ஒன்றையும் ஆராய்ந்தறிந்திலேன். எ - று.

வழியா - வழிந்து. கழியாத - நீங்காத. ஒழியாது - விடாது. ஆல் - அசை. ஒன்றையும் என்புழி சிறப்பும்மை விகாரத்தாற் றொக்கது. (௩௨௬)

### செவிலி தெய்வம் வாழ்த்தல்.

(இது வெளிப்படை)

இணங்கிப் புவனத் தெவருமில் லாவென் னிளங்கொடியாள்
உணங்கிக் கழிதல் லொழியவென் பாலவ ருன்னையன்பால்
வணங்கிப் பலமுறை வாழ்த்துகின் றேனறஞ் சைவாணன்றெவ்வை
அணங்கித் திரள்புயத் தான்மல யாசலத் தாரணங்கே.

இ - ள். பகைவரை வருத்திய வரைபோன்ற பூரித்த திரண்ட புயத்தை யுடையவனாகிய தஞ்சைவாணனது பொதிய மலையிலிருக்கின்ற அரியதெய்வமே! இப்புவனத்து ஒப்புக்கூறத்தக்கவரும் இல்லாத என்னிளங்கொடி போல்வாள் வாடிப் பாலைவனத்துப் போதலையொழிய என்னிடத்துவர உன்னை அன்பாற் பலமுறை வணங்கித்துதிக்கின்றேன், வரின் நினக்குச் சிறப்புச்செய்வேன்.

இணங்கல் - இணங்கென்னத் திரிந்துநின்றது, *"காப்பிற் றொப்பி னூர்தியி னிழையின்" என்னும் வேற்றுமையியற் சூத்திரத்தின் இழைத்தல் என்னும் சொல் இழை என நின்றாற்போலக் கொள்க. உணங்கி - வாடி. கழிதல் - போதல். அணங்கி - வருத்தி. மலயாசலம் - பொதியமலை. ஆரணங்கு - அரிய தெய்வம். 'வரின் நினக்குச் சிறப்புச்செய்வேன்' என்பது அவாய்நிலையான் வந்தது. இவை மூன்றுகிளவியும் செவிலிபுலம்பற்குரியவாமென்க. (௩௨௭)

---

* தொல். சொல். வேற்றுமையியல், சூ. ௭௨.

## செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல்.

செவிலிநற்றாய்க்கறத்தொடுநிற்றல் எ - து. செவிலி நற்றாய்க்கு உடன்போக்கை வெளிப்படுத்திக் கூறல்.

---

சகநல்க வந்தருள் சந்திர வாணனறென் றஞ்சைநல்லாய்
முகநல்கி நல்க முலைகொடுத் தாரின்முத் தங்கொடுத்தார்
மிகநல்ல ரென்பது மன்பதை தேர விடலைபின்னே
மகநல்கு மந்தியங் கானடந் தாளுன் மடந்தையின்றே.

இ - ள். உலகத்தில் மகிழ்ச்சி கொடுக்கவந்தருளப்பட்ட சந்திரவாணனது அழகியதஞ்சையிலிருக்கின்ற நல்லாய்! முகங்கொடுத்து மேலைக்கு மகிழ்ச்சியைக் கொடுக்கவெண்ணி முலைகொடுத்தாரின் இன முத்தங் கொடுத்த கணவரோ மிகநல்லரென்பது உலகத்து மக்களெல்லாந் தெளிய உன்மடந்தை இன்று மகப்பெறுமந்திகளியங்குங் காட்டில்விடலைபின்னே நடந்தாள். எ - று.

சகம் என்புழி ஏழனுருபுதொக்கது. நல்லாய - நற்றாய். மன்பதை-மக்கட்கூட்டம். தேற-தெளிய. மக - குரங்குக்குட்டி ‡ "கோடுவாழ்குரங்குங் குட்டி கூறுப." ‡ "மகவும் பிள்ளையும் பறழும் பார்ப்பு மவையுமன்னவப் பாலன." என்பதனுணர்க. மந்தி-பெண்குரங்கு ‡ 'குரங்கு முசுவு மூகமு மூன்றும." என்பதனுணர்க. கான-காடு. (௩௨௮)

## நற்றாய்பாங்கியோடுபுலம்பல்.

(இது வெளிப்படை,)

முன்னே யிதனை மொழிந்தனை யேனுந்தை முந்தமணம்
பின்னேய் குழலி பெறுளல்ல ளேபிறழா தெவர்க்குந்
தன்னேயம் வைத்தரு ளுந்தஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பில்
பொன்னே யனையநல் லாயவ மேசுரம் போக்கினையே.

இ - ள். எவர்க்கும் நிலைவிட்டுப் பெயராது தன்னுடைய அன்பை வைத்தருளுகும் தஞ்சைவாணன் பொதியமலையிடத்துப் பாற்கடற்பிறந்த மடவார் பலருள்ளும் திருமகளே [illegible]பாகிய நல்லாய்! சுரம்போவதற்கு முன்னமே இதனைமொழிந்தனையாகின் நுந்தந்தை முற்காலத்தில் என்னை மணஞ்செய்தது போலப் பின்னுதல் பொருந்திய குழலையுடையாள் மணம் பெறுவாளே! இச்செய்தியை என்னுடன் சொல்லாமல் மகளை நீணேசுரத்திற்போக்கினையே! எ - று.

---

‡. தொல். பொருள். மரபியல், சூ. ௧௫, ௧௪, ௨௨.

நுந்தை - நுந்தந்தை. முந்தை-முன்பு. மணம் என்புழி உவமத்தொகை. பிறழ்தல்-பெயர்தல். நேயம்-அன்பு போன்னே என்புழி ஏகாரம் பிரிநிலை, அவளுடன் பிறந்தார் பலருள்ளும் அவளையே பிரிந்து வாங்குதலின். அவம்-வீண். சுரம்-கான். (௩௨௯)

அது கேட்டபாங்கியழுங்கல்கண்டு நற்றய்புலம்பல்.

(இதுவெளிப்படை)

இல்லுங் கழங்கா டிடங்களு நோக்கி யிரங்கல்வம்பும்
வல்லும்பொருங்கொங்கை மங்கைநல் லாய்தஞ்சைவாணனொன்னார்
புல்லுந் துணைவியர் போல்வினை யேன்பெற்ற பூவையன்னாள்
செல்லுஞ் சுரத்தழ லன்றுகண் ணீரொற றெறுகின்றதே

இ - ள். கச்சும் சூதும் தம்முட்பொருங் கொங்கையையுடைய மங்கை நல்லாய்! தஞ்சைவாணனுக்குப் பகையாயினோர்கூடும் மனைவியர்போலத் தீவினைசெய்தயான் பெற்றபூவைபோன்ற மகள் ஒருந்திச்செல்லும்பாலைச் சுரத்தில் விழாவிருக்கும் அழலன்று, அழுகின்ற கண்ணீரோ வென்னைச்சுடுகின்றது; மகள் ஒடுங்கித்திரிகின்ற மனையையும் அவள் கழங்காடுகின்ற இடங்களையும் நோக்கி நீ கலுழற்க. எ - று.

கழங்காடுதல்-கழங்காயேழு கைப்பிடித்தாடுதல். இரங்கல்-அழுதல். வம்பு-கச்சு. வல்லு-சூது. வம்பும் வல்லும் பொருதல்-வலவொப்புப் பார்க்க வருங்கால் வம்பே மறையறக என்புழி நீ யொப்பாகாயென்று வம்பு விலக்குழி ஒன்றோடொன்று பொருதலாயிற்று. தெறுதல்-சுடுதல். (௩௩௦)

நற்றய்பாங்கியரோடுபுலம்பல்.

(இதுவெளிப்படை)

நேயம் புணைதுணை யாகவெங் கானக நீந்தவெண்ணி
ஆயம் புலம்ப வகன்றனள் ளோர்கல் லகங்குழைய
மாயம் புகலொரு காளையின் வாணன்றென் மாறையன்னீர்
சேயம் புயமலர் போலடி நோவவென் சில்வளையே.

இ - ள். வாணன் தென்மாறைநாடுபோன்ற பெண்காள்! கல்லும் நெஞ்சங்குழையப் பொய்சொல்லப்பட்ட வொருகாளையின் என்து சில்வளையையுடையாள் சிவந்த தாமரைமலரையொக்கும் அடிகள்நோவ வெவ்விய காடாகிய வெள்ளத்தை நீந்தவெண்ணி அன்பினைத் தெப்பமாந்துணையுமாக ஆயக்கூட்டம் புலம்பப்பிரிந்து போயினள். எ - று.

நேயம்-அன்பு புணை துணை என்புழி உம்மைத்தொகை. நீந்தல் என்பதனால் வெள்ளம் வருவிக்கப்பட்டது. ஏகாரம் ஈற்றசை. கல் என்புழி சிறப்பும்மை தொக்குநின்றது. "குன்றி நெஞ்சுபகவெறிந்த வெஞ்சுடர் நெடுவேல்" என்பதுபோலக்கற்கு நெஞ்சுகூறினென்றுணர்க. மாயம்-பொய். அம்புயம்-தாமரை. சில்வளை - ஆகுபெயர். (௩௩௧)

### நற்றாய் அயலார் தம்மொடுபுலம்பல்.

(இதுவெளிப்படை)

மேனாள் வரங்கிடந் தென்போல வருந்தி மிகவுமெய்ந்நொந்
தீன்றவர் துன்ப மெய்துவ ரோவிமை யோருலகந்
தானண நீடு மதிற்றஞ்சை வாணன் றமிழ்ச்சிலம்பின்
மானார் விழியனை யாள்விளை யாடிய வண்டல்கண்டே.

இ - ள். தேவருலகத்தானாண நீண்ட மதில்சூழ்ந்த தஞ்சைவாணன் தமிழ்ச்சிலம்பில் விழிமான்போன்றவள் விளையாடிய வண்டலம்பாவையைக்கண்டு 'பண்டைநாளில் வரங்கிடந்து என்னைப்போற் பத்துமாதஞ் சுமந்து வருந்தி மிகவும் மெய்நொந்து பெற்றார் துன்பம் எய்துவரோ? யானும் பெற்றிராது பெற்ற துன்பத்தை யெய்தினேன். எ - று.

மேனாள் - பண்டைநாள். ஈன்றவர் - பெற்றவர். வண்டல் - ஆகுபெயர். (௫௫௨)

### நற்றாய்த்தலைமகள்பயிலிடந்தம்மொடுபுலம்பல்.

நற்றாய்த் தலைமகள் பயிலிடந் தம்மொடு புலம்பல் எ - து. நற்றாய் தலைவிபழகி விளையாடுமிடங்களோடு நொந்துகூறல்.

---

செயலைத் தருவின வருநிழ லேபெருஞ் சிற்றிலமே
வயலைக் கொடிநொச்சி மண்டப மேதஞ்சை வாணனொன்னார்
இயலுந் தனித்தனி தந்தன ளேநமக் கின்றிதன்றோ
கயலைப் பொருதகண் ணாண்மேலும் வாழ்விக்குங் கட்டளையே.

இ - ள். அசோகத்தருவின் அழகிய நிழலே! பெரிதாய்வளர்ந்த சிற்றிலமே! வெளியிலே செய்த கொடிகட்டிய மதில் சேர்ந்த மண்டபமே! தஞ்சைவாணனுக்குப் பகைவரிலக்கணத்தை நமக்கின்று தனித்தனி தந்தாள் கயலுடனே போர்புரிந்தகண்ணாள், இனிமேலும் நம்மை வாழ்விக்குங் கட்டளையிதுவன்றோ! எ - று.

செயலை - அசோகு. திரு - அழகு. பெருஞ்சிற்றில் - அவரவர் விளையாடுஞ் சிற்றில் அறம் பெரிதாய் வளர்ந்தசிற்றில். வயலை - வெளி. நொச்சி - மதில். 'தனித்தனிதருதல்' பகைவர் பலராதலால் அவரவர்படுந்துன்பங்களை வேறு வேறு கொடுத்தல். மேலும் - இனிமேலும். கட்டளை - முறைமை. இவை யைந்தும் நற்றாய் புலம்பற்குரியவாமென்க. (௫௫௩)

## நிமித்தம்போற்றல்.

வடியேய புகாமுக வாள்வல வாணனறென மாறையுள்யான
அடியே தொழுந்தெய்வ மாகநிற் பேணி யரும்பலியிப்
படியே தருகுவ லென்றுமின னேயிப பதியுவகைக்
கொடியே வரகரை நீகொடி யேன்பெற்ற கொம்பினையே.

இ - ள். இப்பதியிடத்து மகிழ்ச்சிகொண்டிருக்கின்ற காகமே! பாவியாகிய யான்பெற்ற கொம்புபோல்வாளை ஈண்டுவர நீயழையாய், அழைத்தவுடனே வருவள், அவள்வந்தால் வடித்ததொழில்பொருந்திய புகாநிறத்தை முகத்திலுடைய வாட்டொழிலில்வல்ல வாணனது தென்மாறையுள்ளான வழிபடுகடவுளாக நினைப்போற்றி, சோறுதசைமுதலிய அரியபலியை இன்று கொடுத்தாற்போல என்றுந் தருவேன் எ - று.

வடி - வடித்ததொழில். புகா - இரத்தக்கறைப்புள்ளி. அடிதொழுந் தெய்வம் - வழிபடுகடவுள். பேணி - போற்றி அரியபலி - கிடையாதபலி. இன்னே-இப்போதே. கொடி-காகம் கரைதல்-அழைத்தல். காகமழைத்தல் ஊர்க்குப் போயினார் வருவரென்னும் உலகியல்புபற்றிக் கூறினளென்றுணர்க. இன்னேவரவென இயைபு. (௩௩௪)

## சுரந்தணிவித்தல்.

சுரந்தணிவித்தல் எ - து. சுரத்தின்வெம்மை குளிருமாறு கூறுதல்.

வெஞ்சுர நாடு வியன்சுர லோகமும் வெங்கடுங்கான்
ஐஞ்சுர தாரு வனங்களு மாக வகிற்புகைபோல
மஞ்சுர வாட்க மாமதில் சூழ்தஞ்சை வாணன்வெற்பில்
பஞ்சுர மாகு மொழிச்சுரு ளோதியென் பைந்தொடிக்கே.

இ - ள் அந்நகரிலுள்ளார் குழற்கூட்டும் அகிற்புகைபோன்ற முகில் தவழப்பட்ட வலியபொன்மதில்சூழ்ந்த தஞ்சைவாணனது வெற்பிடத்துப் பஞ்சுரமென்னும் பண்ணாகக்கொப்பாகிய மொழியையும், சுருண்ட குழலையுமுடைய என்பசிய தொடியையணிந்தாட்கு வெய்யபாலையுலகும், விரிவாகிய தேவருலகும், வெய்யகடியகாடும், அத்தேவருலகிலுண்டாகிய பஞ்சதருச்சோலையுமாக. எ - று.

சுரநாடு பாலையுலகம். வியன்-விரிவு. ஐந்துசுரதருவனம் - சந்தானம், அரிசந்தனம், மந்தாரம், பாரிசாதம், கற்பகம். பஞ்சுரம் - பாலைநிலத்துப் பண். ஓதி-குழல். மொழிச்சுருளோதி - உம்மைத்தொகை. பைந்தொடி - அன்மொழித்தொகை. (௩௩௫)

**தன்மகள்மென்மைத் தன்மைக்குஇரங்கல்**

*தன்மகள் மென்மைத்தன்மைக்குஇரங்கல் எ - து நற்றாய் தன்மகள் மெல்லிய இயல்பாகிய தன்மைக்கு இரங்கல்.*

*தாமே தமக்கொப்பு மற்றில் லவாதில்லைத் தண்ணனிச்சப்
பூமேன் மிதிக்கிற் பதைத்தடி பொருங்குருங் காவெரியுந்
தீமே லயில்போற் செறிபரற் கானிற் சிலம்படிப்பாய்
யாமே நடக்க வருவினை யேன்பெற்ற வம்மனைக்கே.* (௩௩௬)

¶[இதுபிறசெய்யுட்கவி.]

**இளமைத்தன்மைக்கு உளமெலிந்திரங்கல்.**

*இளமைத்தன்மைக்குளமெலிந்திரங்கல் எ - து. நற்றாய் தலைவியின் இளமைத்தன்மைக்கு மனமெலிந்திரங்கிக்கூறல்.*

*இரும்பா மனங்கொண்ட வாறென்னை நீதன்னை யேதிலன்பின்
வரும்பா வலர்க்கருள் வாணன்றென் மாறை வளவயலிற்
கரும்பார் மொழியா யழலென்னு கண்ணீர் துடைத்தணைத்துன்
அரும்பா முலைசெய்ய வாய்ப்பசும் பாவைக் களிக்குமின்னே.*

இ - ள் வினையேன்மெ பாவையை நோக்கித் தன்னைத்துதித்துவரும் புலவர்க்கு என்றும் அருளப்பட்ட தென்மாறை நாட்டுவளவயலில் வளருங் கரும்புபோன்ற மொழியினையுடையாய்! அழாதையென்றுகண்ணீர்துடைத்தணைத்து உன்மார்பில் அரும்பாந்முலையைச் செய்யவாயையுடைய பசும் பொன்னாற்செய்த பாவைக்களிக்கும் இளமைத் தன்மையையுடைய மின் போன்றவளே! என்னைவிட்டுப் பிரிந்துபோக நீ இரும்பையொக்கும் மனங் கொண்ட முறைமை எப்படி? எ - று.

பாவலர்-புலவர் பசும்பாவை என்றதனால் பொன்வருவிக்கப்பட்டது மின் - ஆகுபெயர் (௩௩௭)

**அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல்**

*அச்சத்தன்மைக்கு அச்சமுற்றிரங்கல் எ - து. நற்றாய்தலைவியது வெருவுந் தன்மையை நினைந்து தானச்சமுற்றிரங்குதல்*

*காண்மா தவிமலர் நாறிருங் கூந்த னடந்தவழிக்
கோண்மா ~~குமுறுங்~~ கொடுங்குரல் கேட்டொறுங் கூர்ங்கணையால்
வாண்மா முனைவென்ற வாணன்றென் மாறை மணிவரைவேய்த்
தோண்மா வெருவுங் கொல்லோ வென்றென் றுருயிர் சோர்கின்றதே.*

¶ திருக்கோவையார், செ. உஉ௭.

இ - ள். குருக்கத்தியினது முருக்கவிழ் மலர் மணக்குங் கரிய கூந்தலையுடையாள் நடந்த பாலைவழியில் கொலைசெய்யும் விலங்குகள் குமிறப்பட்ட கொடிய குரலைக்கேட்குந்தோறும் கூரிய கணையினுடன் வாள்பிடித்துவரும் பெரியபகையை வென்றவாணன் தென் மாறைநாட்டிலிருக்கின்ற மணிவிளையும் வரையிடத்துண்டாகிய வேயைப்போலுந்தோளையுடைய திருப்போல்வாள் அருகுமோ வென்று என்னுயிர் வாடுகின்றது எ - று.

'மாதவிநாண்மலர்' என இயையும். மாதவி-குருக்கத்தி. கோள்-கொலை. மா-விலங்கு. குமிறுதல்-சினத்து முழங்குதல், கேட்குந்தோறும் என்னுஞ் சொல் கேட்டோறும் என விகாரப்பட்டுநின்றது. முனை-பகை. வெருவுதல்-அஞ்சுதல். சோர்தல்-வாடல்.

இவை ஐந்தும் மனமருட்சிக்குரியவாமாறு காண்க (௩௩அ)

கண்டோரிரக்கம்.

இரங்கல்-அழுங்கல்.

நொந்துங் கலுழ்ந்துந் துணைவியர் ஆற்றலர் நோக்கொடின்சொல்
தந்துங் கவையுந் தணந்துசென் றுள்ளனத் தாள்பணியார்
மைந்துய் கதழ்ந்த கடிந்தருள் வாணன்றென் மாறையன்னாள்
பந்துங் கழங்குமெல் லாங்கண்டு வாடும் பயந்தவளே.

இ - ள் தம்மிடத்துப் பார்க்குங் குளிர்ந்த பார்வையோடு இனியசொல் தந்ததனையும் அயலார் தூற்றும் அலரையும்விட்டு நீக்கிச்சென்றுள்ளன நொந்தும் கலுழ்ந்தும் துணைவியர் ஆற்றலர், தாள்பணியாதார் வலியையும் சினத்தையும்போக்கிய வாணன் தென்மாறையன்னாள் விளையாடிய பந்தும் கழங்கும் மற்றுமுள்ளனயாவையுங் கண்டு பயந்த அவள் வாடும். எ - று.

கலுழ்தல்-அழுதல். 'நோக்கொடின்சொற்றந்ததற்கு நொந்தும் கவவை தணந்ததற்குக் கலுழ்ந்து மாற்றலராயினார்' என நிரனிறையாய்ப் பொருள் கொள்க. தந்ததும் என்பது தந்தும் என விகாரப்பட்டு நின்றது. †பாலொடுதேன்கலந்தற்றே' என்புழி 'கலந்தற்றே' என்பது கலந்தற்றே என நின்றாற்போற்கொள்க. கவவை கவையென இடைக்குறைந்து தணந்து-விட்டுநீங்கி. மைந்து-வலி கதம்-சினம். பயந்தவள்-ஈன்றாள். (௩௩௯)

இஃதொன்றும் கண்டோரிரங்கற்குரித்து, கண்டோர்-மாதரார் எனவுணர்க.

செவிலி ஆற்றத்தாயைத்தேற்றல்

செவிலி ஆற்றாத தாயைத்தேற்றல் எ - து. செவிலி ஆற்றாத நற்றாயைத் தேறுமாறு கூறுதல்.

---

† திருக்குறள், செ. ௧௧௨௧

கவையும் - தழுவியும்.

கன்றே யிதென்று முகமுக நோக்கி நகைநகையாம்
அன்றே யலர்சொல்லு மாதாமுன னேதஞ்சை வாணன்றெல்சீர்
சென்றே பரந்த திசைகளெல்ல லாஞ்சென்று தேர்ந்தணங்கை
இன்றே தருவனன் னேவருந் தாதிங் கிருந்தருளே.

இ - ள். அன்னே! இவள் ஒருவன் பின்னே சுரம்போயின் இது நன்றாயிருந்ததென்று ஒருவர்முகம்ஒருவர்நோக்கி நகையைநகைத்து வெளியிலே அலர்தூற்றும் மாதாமுன்னே, தஞ்சைவாணனது பழகிய கீர்த்தி போய்ப்பரந்த திசைகளெல்லாம்போய்த்தேடி அணங்குபோல்வாளை இற்றைப்பொழுதேதருவேன், யான் போயவருமளவும் வருந்தாது இங்கிருந்தருள். எ - று.

முன் ஏகாரமூன்றும் ஈற்றசை, பின் ஏகாரம் ஒன்றும் தேற்றம் 'நன்றேயிது' என்னுங் குறிப்புமொழி அசதிக்கண் நிதையுணர்த்திநின்றது.நகையா-நகைத்து.மன்று-வெளி. தேர்தல்-தேடல். அணங்கு-ஆகுபெயர் (௩௪0)

## ஆற்றிடைமுக்கோற்பகவனைவினாதல்.

ஆற்றிடைமுக்கோற்பகவனைவினாதல் எ - து. செவிலி தேடிப்போங் கால் வழியிடை எதிர்வரு முக்கோலுடைய அந்தணனை வினவுதல்.

ஒருவெண் குடையிரு நீழன்முக் கோலகொண் டொழுக்கத்தினல்
அருவெங் கனரியைத் தாறுசெல் வீரரு ளீரொழுபார்
மருவெண் டிசைபுகழ் வாணன்றென் மாறையென் வஞ்சியன்னாள்
பொருவெஞ் சுடரிலை வேலொரு காளைபின் போயினளே.

இ - ள் ஒருவெண்குடையினது பெரியநீழலிலே மூன்று தண்டு கொண்டு ஆசாரத்தினால் அரிய வெவ்விய கனாநிலத்திலியைந்து வழிச்செல் வீர்! எழுபாரிலுமமருவியஎண்டிசையிலுளளோரால்புகழப்பட்ட வாணனது தென்மாறைநாட்டிலிருக்கும் என்னுடைய வஞ்சிக்கொம்பு போன்றவள் போர்செய்யும் சுடர்பொருந்திய இலைபோலும் வேலையுடைய ஒருகாளை பின் போயினள், மீண்டு வரக்கூறிஅருள்புரிவீராக. எ - று.

இருமை - பெருமை. முக்கோல் - திரிதண்டு. ஒழுக்கம் - ஆசாரம். இயைந்து-பொருந்தி ஆறு-வழி. 'மீண்டுவரக்கூறல்' அவாய் நிலையான்வந்தது.ஒன்றுமுதலெட்டளவும் ஒழுங்காய்த்தொகை காட்டிவருதலால் செய்யுட்கு இஃதோரலங்காரந் தோன்றியவாறு காண்க. (௩௪௧)

## மிக்கோரேதுக்காட்டல்.

மிக்கோரேதுக்காட்டல் எ - து. செவிலி வினயதற்கு மிக்கோர் அது உலகவியல்பென்று காரணமெடுத்துக்காட்டல்.

இயங்கா வனமென மகளொரு காளைபின் னேகினளென்
றுயங்கா தொழியஃ துலகியல் பாலு வும்புயன்றோய
வயங்கா டகமதில் சூழ்தஞ்சை வாணன் மணங்கமழ்தார்
புயங்காதல் கொண்டணைந் தாளய னார்தந்த பூமகளே.

இ - ள். ஒருவருஞ் சஞ்சரியாதவனத்தில் என்மகளொரு காளைபின் னேகினளென்று வருந்தாதொழி, அவ்வாறேகுதல் உலகவியல்பு; யாங்ஙனமெனின், வானத்துலவும் புயலைத்தீண்டி விளங்கப்பட்ட பொன்மதில் சூழ்ந்த தஞ்சைவாணனது மணங்கமழ் மாலையணிந்த புயத்தைக் காதல்கொண்டு அயனார் படைத்த பூமிதேவியணைந்தாள். எ - று.

இயங்கல் - சஞ்சரித்தல். ஏகினள் - போயினள். உயங்கல்-வருந்தல். வயங்கல் - விளங்கல். ஆடகமதில் - பொன்மதில். அயனார் - பிரமனார். பூமகள் - பூமிதேவி. (௩௫௨)

### செவிலியெயிற்றியொடுபுலம்பல்.

செவிலியெயிற்றியொடு புலம்பல் எ - து. செவிலி பாலைநிலத்துப் பெண்ணொடு புலம்பிக்கூறல்.

செருமக ளேயும் புயத்தய லான்பின் செலவிடுத்தென்
ஒருமக ளேயென் றுனையயிர்த் தேன்புனை யோவியம்போல்
வருமக ளேதஞ்சை வாணன்றெ னார்துன் னும்வனசுரத்தே
அருமக ளேயுரை யாயவள் போன வதரெனக்கே.

இ - ள். போர்மகள்பொருந்திய புயத்தையுடைய அயலான்பின்னே போகவிடுத்த உன்னை என்னுடைய பெற்ற மகளேயென்று ஐயமுற்றேன், அலங்கரிக்குஞ் சித்திரப்பாவைபோல வரப்பட்ட பெண்ணே! தஞ்சைவாணனது பகைவராயுள்ளார் நெருங்கும் வலியகாட்டிலிருக்கும் எயினருக்கு அருமையாகிய மகளே! அம்மகள் போனவழியை எனக்குச் சொல்லாயாக. எ - று.

செருமகள்-வீரமகள். அயிர்த்தல்-ஐயமுறல். ஓவியம்-சித்திரப்பாவை. அதர்-வழி. இப்பாட்டில் இரண்டு முன்னிலைவந்ததற்கு இலக்கணமும் உதாரணமும் களவியலிற்கூறினும் ஆண்டுக் காண்க. (௩௫௩)

### செவிலிதாவொடுபுலம்பல்.

(இது வெளிப்படை.)

இரவேய குழலியிவ் வேதிலன் பின்செல்ல லென்றுசொல்லாக்
குரவே யறவுங் கொடியைகண் டாய்கொடிக் கோகனகம்
தரவே யென்வந்த சந்திர வாணன் றரியலர்போம்
சுரவே யழல்வழி யேதனிய போயவென் றோகையையே.

இ - ள். தருந்தற்குக் கொடியோடுகூடிய பதுமநிதியென்வந்த சந்திரவாணன்றரியலார்போந்த காட்டில் மூங்கிலுழலபொருந்திய வழியிற்றனியே போன என்றோகைபோலவாளை நீ இவ்விடைக்கண்டுழி இருள்போன்ற குழலாய்! இவ்வயலானபின் செல்லறகவென்று சொல்லாதக்குரவே! நீமிகவுங் கொடியை எ - று.

எனவே,—நீசொன்னால் மீளாளல்லள், வாளாவிருத்தல் அறவுங்கொடியையென்று கூறினாள். ஏதிலன - அயலான 'குரவேகொடியை' என இயையும் கொடை மிகுதியாற் கட்டிய கொடி வாணன்மேலேற்றுக, கோகனகம்-பதுமநிதி வேயழல - மூங்கிலிற்பிறந்தவழல. தோகை - ஆகு பெயர். (௩௪௪)

## சுவடுகண்டிரங்கல்

சுவடுகண்டிரங்கல் எ - து. செவிலிநிலந்தினைப் போ காலமூரிய குறியைக் கண்டிரங்கிக்கூறல்.

தொடுசிலைக் கானவ ரோடிய வேற்றுச் சுவடிதுவே
அடுசிலைக் காளை யடியவை யேயறிந் தோரறிய
இடுசிலைப் பாப்புரக் குந்தஞ்சை வாண னிசைகருக்கப்
படுசிலைப் பாவை பதமிவை யேவண்டு பாடுகவே

இ - ள். அம்புதொடுக்குஞ் சிலையையுடைய ஆறலைக்கானவர் எதிர்நிற்கமாட்டாரோடிய வேறுபட்ட அடிச்சுவடிவையே! அவரைப் பொருஞ்சிலையுடனே எம்புரப்பக்கத்திலவீழ்த்துநந்திய காளையது அடிச்சுவடிவையே! தன்றுவிரதத்தை அறிவுடையோரறியச் சயத்தம்பமநாட்டி உலகத்தைச் காக்குந்தஞ்சைவாணனது பொதியமலையிடத்திருக்கும் பாவையடியிவை எ-று.

, எனவே,- அடிச்சுவடு கண்டவுடன் தலைவியை நினைந்திரங்கியவாறாயிற்று பலராய வந்தெதிர்ந்து தலைவனெதிர்நிற்கமாட்டாது ஒருவர்போனவழியொருவர் போகாதோடுவாரது அடிச்சுவடொருவரடிபோலொருவரடியிராது வேறுபட்டுத் தோன்றுதலால் கானவரோடிய வேற்றுச்சுவடிவையென்றும், தனித்து நிற்றலினபாவைபதமிவை யென்றும் கருதிக்கூறினாளெனக. இடு சிலை - வெற்றியாலிடுஞ் சயத்தம்பம் இசைகருகப்படுசிலை - இராவணன் பிணிக்கக் குறுமுனிபாடுமிசைக்கு உருகப்பட்ட பொதியமலை. பாடு-பக்கம் உருகுதல்-விழுதல். (௩௪௫)

## செவிலிகலந்துடன்வருவோர்க்கண்டுகேட்டல்.

செவிலிகலந்துடன் வருவோர்க்கண்டு கேட்டல் எ - து. உடன்போக்குப்போயத் தலைவனும் தலைவியும்போல அன்புகலந்துஆற்றிடை வருவோர் இருவரைக்கண்டு செவிலிவினாதல்.

யானகம் போத வருந்தநும் போல்வனப் பெய்தியெய்ய
கானகம் போயினர் கண்டனி ரோகற்ப காடவிசூழ்
வானகம் போர்பயில் வானவற் கீந்தருள் வாணன்றஞ்சைத்
தேனகம் போருக யாதனை யாளுமொர் செல்வனுமே.

இ - ள். கற்பகக்காடு சூழ்ந்த வானிடத்தைப் போர்செய்யுஞ் சேரனுக்குக் கொடுத்தருளப்பட்ட வாணனது தஞ்சையின் வாவியிலிருக்குந் தேனொளிவிடப்பட்ட தாமரையிலிருக்கும் மாதுபோல்வாளும் ஒருசெல்வனும் உங்களைப்போல அழகுபொருந்தி யான்நெஞ்சுமிகவருந்த வெய்ய காட்டிடத்துப் போயினர், நீங்கள் கண்டீரோ? சொல்வீராக எ - று.

அகம்-நெஞ்சு. போத-மிக, வனப்பு-அழகு. கானகம்-காட்டிடம். கற்பகாடவி-கற்பகக்காடு. வானகம்-வானிடம். வானவன்-சேரன். ஈருதல்-ஒளிவிடல். (௩௬)

அவர்புலம்பறேற்றல்

அவர்புலம்பறேற்றல் எ - து. செவிலியிரங்கிப் புலம்புதலை எதிர்வந்தோர் தேற்றிக்கூறல்.

யான்கண்ட வண்ணலு மெண்ணருங் காதலி னேகியவென்
மான்கண் டனகண் மயில்கண்ட மாதரு மாதருமம்
தான்கண்ட தண்ணளிச் சாதிர வாணன் றரியலர்போம்
கான்கண்ட மெய்குளிர்ப் பொய்கைசூழ் தஞ்சை காண்பர்களே

இ - ள். யான் காணப்பட்ட தலைவனும் என்னுடைய தலைவியாகிய மானையுவமை கண்டாற்போலும் கண்ணையுடைய இம்மயில்போன்றவளைக் கண்டு எண்ணுதற்கரிய காதலினாலே தலைவன்பின்போகிய மாதரும் பெரிய தருமத்தைக்கண்ட தண்ணளியையுடைய சாதிரவாணனது அரியலர் செல்லும் காட்டைக்கண்டவுடம்பு குளிர இப்போது பொய்கைசூழ்ந்த தஞ்சையைக் காண்பார்கள். எ - று.

'யான்கண்ட வண்ணலு மென்மயில்கண்ட மாதரும்' என்று கூறவே, எனக்கவன்றோன்றும்படி மறைந்திலன்றன், இவளும் அத்தன்மையளாதலின், இவள் அவளைக்கண்டதாகவும் தானவனைக்கண்டதாகவும் கூறினார். மயில் ஆகுபெயர். தண்ணளி-அன்பு. தலைவியை யான்கண்டேனென்றுகூறாது, என்மயில்கண்ட மாதென்று கூறியதென்னையெனின், தலைவன்காணுந் தன்மையளல்லள், தையலார்காணுந்தன்மையளல்லள், ஆதலால் இவ்வாறுகூறினார் என்னை, †"மலரன்ன கண்ணாள் முகமொத்தி யாயிற் - பலர்காணத் தோன்றன் மதி." என்னுந் திருக்குறளினுணர்க. (௩௭)

† திருக்குறள், சே. ௲௱௰௯.

### செவிலிபுதல்வியைக்காணாதுகவலைகூர்தல்.

செவிலிபுதல்வியைக்காணாது கவலைகூர்தல் எ - து. செவிலி தன் புதல்வியைக்காணாது துன்பமிகுதல்.

நாணினுந் தாரணி கற்புநன் றென்று நயந்துமுத்தம்
பூணினும் பாரமென் றென்னுமென் பொன்னையிப் போதெனக்குச்
சேணினுஞ் சார்புகழ் வாணன்றென் மாறைமன் சேரலரைக்
காணினுங் காணவந் தோவரி தாலிந்தக் கானிடையே.

இ - ள். நாணைப்பார்க்கவும் முலைமாலையணிந்த கற்பு நன்றெனப், தனை விரும்பிச்சென்றாள், ஆதலால் முத்தாரம்பூணினும் பாரமென்று சொல்லும் மெல்லியவியல்பினையுடைய என்பொன்னை எனக்கிப்போது சேணினுஞ்சேர்ந்த புகழையுடைய வாணனாகிய தென்மாறை மன்னன் பகைவரை இந்தக் கானிடைக்காணினுங் காணவரிது, அந்தோ யானென் செய்வேன் எ - று.

நயந்து என்புழிச் ‘சென்றாளாதலால்’ என்னுஞ் சொல்வருவித்து முடிக்க. ‘எனக்கிப்போது’ என இயையும். சேண் - தூரம். காணினும் என்னும் உம்மை அவாகரந்து திரிதலின் அருமைதோன்றநின்றது. அந்தோ-இரக்கக் குறிப்பு. ஆல் - அசை. (௩௪அ)

கற்பொடுபுணர்ந்தகவ்வை முற்றிற்று.

---

## மீட்சி.

மீட்சி எ - து. மீண்டுவருதல். செவிலி புதல்வியைக்காணாது மீண்டு வருதலும், உடன்போய தலைவனுந்தலைவியும் மீண்டுவருதலும் அடங்கப் பொதுப்படமீட்சியென்றுகூறினார்.

* ‘தெளித்தன் மகிழ்ச்சியி னுரைத்தல் செப்பலென், வெளிப்படவுரைத்த மீட்சிநால்வகைத்தே’.—என்னுஞ்சூத்திரவிதியால் மீட்சிநால்வகைப்படும்.

### தலைவிசேணகன்றமைசெவிலித்தாய்க்குணர்த்தல்.

ஏடார் மலர்க்குழல் வல்லியை யன்னையித் தீவினையேன்
நாடா விடமில்லை ஞாலத் தகல்வயி னன்கமலக்
காடார் பழனக் கழனிநன் னாடுகடந்து தன்னூர்
வாடா வளமனை கொண்டுசென் றானொரு வள்ளலின்றே.

[இது பிறசெய்யுட்கவி]

---

* அகப்பொருள் விளக்கம், வரைவியல், சூ. ௧௧.

### தலைவன்தம்மூர்சார்ந்தமைசாற்றல்.

தலைவன்றம்மூர் சார்ந்தமைசாற்றல். எ - து. ஐம்பத்து நான்கா நாள் தலைவன்மீட்சியில் தலைவியதூரைத் தாம்சார்ந்தமை தலைவிக்குச்சாற்றல்.

---

கிளையா ளெதிர்ப்பட்ட நீடிருங் குன்றிது நீகுடைந்த
சுனையா மதுமலர்ச் சோலைக ளாமிவை தூயவண்டல்
மனையா மிவையினி வாணன்றென் மாறையை வாழ்த்தலர்போல்
இனையா தெழுந்தருண் மானனை யாய்நம் மெழினகர்க்கே.

இ - ள். மானனையாய்! நின்னை யான் முன்னெதிர்ப்பட்ட நீண்ட பெரிய குன்றிது; நீ குடைந்துவிளையாடிய சுனையாமது, நீவிளையாடியமலர்ச் சோலைகளாமிவை, மாசிலாத வண்டலம்பாவைசெய்து விளையாடிய சிற்றிலமிவை, இன்று வாணன்றென்மாறையை வாழ்த்தாதவர்போல வருந்தாது நமதெழிலையுடைய நகர்க்கெழுந்தருள் எ - று.

தான் அவள் என்னும் வேற்றுமையின்மையான 'நம்மெழினகர்' எனக் கூறினார். இனி-இன்று. இனையாது-வருந்தாது (௩௰)

### தலைவிமுன்செல்வோர்தம்மொடுதான்வரல் பாங்கியர்க்குணர்த்திவிடுத்தல்

(இதுவெளிப்படை)

புனையல ரேதிலர் காதலர் தாயர் பொருமையிற்போய்
இனைதுயர் யாதொன்று மின்றிவெங் கானிகந் தியானும்பொன்
வனைகழ லானும் வருவதெல் லாஞ்சென்று வாணன்றஞ்சைத்
துணைவுட னேகுகின் றீர்சொல்லு வீரென் றுணைவியர்க்கே.

இ - ள். வாணனது தஞ்சைக்கு விரைவுடன் செல்கின்றீர்! புனைந்து அல்லாத கூறுகின்ற அயலாரென்னிடத்துக் காதலையுடையராகிய தாயர் இவர்களது பொருமையினாலே பிரியவருந்துந்துன்பம் ஒன்றுமின்றி வெவ்விய காட்டைநீங்கிப்போய் யானும் அழகியபொன்னாலே வனைந்த கழலையுடையானும் வருகின்றசெய்தியெல்லாஞ் சென்று என்றுணைவியர்க்குச் சொல்லுவீர். எ - று.

புனைதல்-இல்லதனையுண்டாக்கிக் கூறுதல். ஏதிலர்-அயலார். இனைதுயர் - வருந்துந்துயர். இகந்து-நீங்கி. துணைவு - விரைவு. * "கதழ்வுந் துணைவும் விரைவுப்பொருள." என்பதனாற்கண்டுகொள்க. (௩௧)

### முன்சென்றோர்பாங்கியர்க்குணர்த்தல்.

(இதுவெளிப்படை.)

போதலர் தல்லை முனியுமெல் லோதிப் புனையிழைதன்
காதலன் பின்வரக் கண்டன மியாங்கடல் வேலிமுந்நீர்!
மாதலந் தன்னிரு தோளில்வைத்த வாணன்றென் மாறைவண்ணச்
சூதலர்த் தொலைகவிம் மிதத்திரண் மாமுலைத் தோகையரே.

---

* தொல். சொல். உரியியல், சூ. ௧௬.

இ - ள். தாழைக்காட்டை வேலியாகவுடைய கடல்சூழ்ந்த பெரிய புவியைத் தன்னிருதோளில் வைத்தவாணன் தென்மாறைநாட்டில் அழகு பொருந்திய சூது இடுக்கண்பட்டுச் சுருங்கப் பூரித்துத் திரண்ட பெரிய முலையையுடைய தோகைபோல்வீர்! போதுகள்மலர்ந்து இருளைச்சினக்கும் மெல்லியகுழலினையும் புனைந்த பூணினையுமுடையாளைத் தன்காதலன்பின் வர யாம் கண்டனம். எ - று.

அல்-இருள். ஓதி - கூந்தல். மெல்லோதிப் புனையிழை-அன்மொழித் தொகை. கண்டல் - தாழை, புயவலியால் குறும்படக்கிப் பூமியைக்காத்தலான் 'மாதலந்தன்னிருதோள்வைத்தவாணன்' எனக்கூறினார். அலாதல்-இடுக்கண். † "அலந்தோர்க்களிக்கும்பொலம்பூட்சேஎய்" எனவும், 'அற்றார்க்கு மலர்ந்தாரக்கும்" எனவும் பிறருங்கூறிய வாற்றானுணர்க. விம்முதல்-பூரித்தல். (௧௫௰)

பாங்கியர்கேட்டுநற்றாய்க்குணர்த்தல்

(இது வெளிப்படை.)

வாளேய் விழியின் மயிலனை யாடஞ்சை வாணன்வெற்பில்
வேளே யனைய விடலைபின் னேசுரம் மீண்டினிநம்
கேளோய் பதிவரு மென்னநல் லோர்சொல்லக் கேட்டனமிந்
நாளே யனையநன் னாளுள வோசென்ற நாள்களிலே

இ - ள். வாள்போன்ற விழியினையுடைய நின்மகளாகிய மயில் போன்றவள் தஞ்சைவாணன் வெற்பிடத்துக் காமனையொத்த விடலை பின்னே சுரம்போய் மீண்டு நஞ்சுற்றத்தாரிருக்கும் நகரின்கணே வருமென்று நல்லோர் சொல்லக்கேட்டனம், ஆதலின் இந்நாளைப் போன்ற நன்னாள் கழிந்தநாள்களிலேயுளவோ? எ - று.

வேள்-காமன். விடலை - பாலைநிலத்தலைவன். கேள் - சுற்றம். ஏகாரம் மூன்றும் ஈற்றசை. (௧௫௧)

நற்றாய்கேட்டவனுளங்கோள்வேலனைவினாதல்.

(இது வெளிப்படை.) வேலன்-வெறியாட்டாளன்

தென்மாறை நன்னகர் மன்னவன் வாணன் செழுந்தஞ்சைசூழ்
பொன்மா திரத்துப் புலனுணர் வீர்சுரம் போய்வருவோன்
என்மானை யென்மனை யிற்றரு மோதன்னை யீன்றநற்றாய்
தன்மா நகருய்க்கு மோசொல்லு வீரொன் றுதானெனக்கே.

இ - ள். தென்மாறைநகர்க்கு மன்னவனாகிய வாணனது செழுந் தஞ்சையைச்சூழ்ந்த அழகிய திக்கினுள்ளார் நினைக்குமறிவை எல்லாமறி

† திருமுருகாற்றுப்படை, பழமுதிர்சோலை, வரி, ௨௭௧.

வீர்! சுரம்போய் மீண்டுவரும் தலைவன் மானனையாளை என் மனையிலே தருமோ? தன்னையீன்ற நற்றாயிருக்கும் தனபெரியநகர்க்கே செலுத்துமோ? எனக்கொன்று சொல்லுவீர் எ - று.

பொன் - அழகு. மாதிரம் - ஆகுபெயர் புலன் - அறிவு. உய்த்தல் செலுத்தல. வேலன் - முருகவேளுடையாளமாயக்கையிலே வேலபிடித்துத் திரிபவன.

தலைவன சேணகனறமை செவிலிதாய்கருணர்த்தலும் தலைவன்றம்மூர் சார்ந்தமை சாற்றலுமஇரண்டுந்தெளிதல; தலைவிமுன்செலவேர்சா தம்மொடு தன்வரல்பாஙகியாகருணர்த்திவிடுத்தலும, பாஙகியாநற்றாய்கருணர்த்தலும் இரண்டுமெசிழ்ச்சி, நற்றாய்தலைமகனுளங கோளவேலனைவினாதலொன்றும் வினாதல, பாஙகியாக்கு முனசெலவோா உணர்த்தலொனறும செப்பல்.

மீட்சிமுற்றிற்று.

---

## தன்மனைவரைதல்

தன்மனைவரைதல எ - து உடனபோய மீண்டுவந்த தலைவன்தலைவியைததன்னூர்க்குககூட்டிபபோய்த தன்மனையினகண வரைந்துகோடல்.

‡"வினாதலசெபபல் மேவலெனறிறைவன்
றனதில்வரைதற்ளமூவகைத்தே".—எனனுஞ் சூததிரவிதியால தன்மனைவரைதல மூவகைபபடும.

நற்றாய மணனயாவேட்கையிற செவிலியை வினாதல். எ - து. தலைவி நற்றாய தனமனையின் மணஞ்செயயும் விருப்பினாற் செவிலியைவினாதல். இதறகுச செய்யுளிற்கவியில்லை

*தாமாக மேவினுஞ் சுடமனைக் கேவந்து தண்சிலம்பர்
மாமா தினைமணஞ் செயவதற கேமரு வார்கமலப்
பூமாது கேழ்வன புகழததஞ்சை வாணன பொருபவிளி
யாமா றுயிரனை யாய்சொல வமோவவ ரனனையாககே. (௩௫)

### செவிலிக்கிதுவரைந்தமையுணர்த்தல்.

(இது வெளிப்படை.)

என்னு மியம்புவ தியாயககினி நாமன்னை யினறுதமமில...
கொனறு கித்திலக் கோதைநம மாதைக் கொடிநெடுந்தேர்க்
கன்னூடர் மண்கொண்ட வாணனறென மாறையிற காதலாதாம்
கனனுண மணமபுணாந் தாமொன்று தூதா நவின்றனரே.

---

‡ அகப்பொருள விளககம், வரைவியல, சூ. உ௩.

*இக்கவி யாழ்ப்பாணதது வலவை-சபாபதிபிள்ளை யவர்கள்பதிப்பித்த மூலப்பிரதியில் காணப்பட்டபடியே பதிப்பிககப்பட்டது.

இ - ள். அன்னையே! கொடிகட்டிய நெடுந்தேரையுடைய கன்னடர் மண்ணைக்கொண்ட வாணன்தென்மாறை நாட்டில் காதலர்தாம் தம்மில்லத்துப் பெருமையார்ந்த முத்துமாலையைத்தரித்த நம்மாதை நல்லநாளிலே மணம்புணர்ந்தாரென்று வந்ததூதுவர் சொன்னார், இன்று நாம்ஆய்ந்தியம்புவது இனி யென்னை? எ - று.

கொன். பெருமை. நித்திலக்கோதை-முத்துமாலை. நவிலல் - சொல்லல்.

வரைந்தமைசெவிலிநற்றாய்க்குணர்த்தல்

(இது வெளிப்படை)

ஏனைக்கே ளிருநின் றியற்றவங் கேமண வின்பமெய்தி
அனைக்கேண் மை நண்ணிய வண்ணலைப் பின் னாகநம் மன்னையின்றிம்
மனைக்கே வருமென வந்துசொன் னார்தஞ்சை வாணன்வெற்பில்
சுனைக்கேழ் நனைக்கழு நீர்க்குழ லாய்சில தூதரின்னே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பிடத்திருக்குஞ் சுனையிற்பூத்தநிறத்தையுடைய கள்பொருந்திய கழுநீரைச்சூடிய குழலாய்! எல்லாக்கேளிரும் மணப்பந்தரிலவந்துநின்று மணச்சடங்கு செய்ய, தலைவனாரில மணவின்பத்தையெய்தி அத்தன்மைத்தாகிய நட்பைப்பொருந்திய தலைவனைப்பின்னே நம்மன்னைபோல்வாள் இன்று இம்மனையிடத்து இப்போது வருமெனச்சில தூதர்வந்துசொன்னார். எ - று.

ஏனைக்கேளிரும் - எல்லாக்கேளிரும். அனைக்கேண்மை-அத்தன்மைத்தாகியவுறவு "அனைநிலைவகையோடாங்கெழுவகையால"—என்னுஞ் சூத்திரத்துஉரையாசிரியருரையானுணர்க. அண்ணல்-தலைவன். ஆக-பிரிவிலசைநிலை, †"ஆகவாகலென்பதென்னு-மாவயின் மூன்றும் பிரிவிலசைநிலை" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. 'காமொதிர் கானம்பாடினேமாக' என்னும உதாரணத்தானுமுணர்க அன்னைகாதலைப்பற்றிவந்த சொல். கேழ்-நிறம். நனை-கள். இன்னே- இப்போதே. (௩௫௭)

தலைவன் பாங்கிக்கு யான்வரைந்தமை நுமர்க்கு இயம்புகென்றல்.

(இது வெளிப்படை.)

கோபுரஞ் சோலை கொடிமதின் மாடங் குலாவிமையோ
ராபுரம் போலுந்தென் மாறைவ ரோதயன் வாணன்வெற்பில்
நீபுரந் தேதந்த மாதையங் கியாமவணா நீர்மைசொன்ன
நூபுரஞ் சூழடி யாய்சென்று கூறு நுமர்தமக்கே.

இ - ள். பொன்னால்செய்தசிலம்பு சூழ்ந்தஅடியினையுடையாய்! கோபுரமுஞ் சோலையுங்கொடியுமமதிலும்மாடமுமவிளங்கப்பட்ட அமராவதியையொக்கும் தென்மாறை நாட்டில் வரோதயனாகிய வாணன்வெற்பில்

---

† தொல், சொல் இடையியல், சூ. ௩௨,

நீபாதுகாத்துத் தந்த மாதை என்னூரில் வரைந்தநீர்மையை நுமர்தங்களுக்குச் சென்றுசொல்லாய். எ - று.

'கோபுரஞ்சோலை கொடிமதின் மாடம்' என்புழி எண்ணும்மை தொக்கு நின்றன. குலவுதல் - விளங்குதல். இமையோர்மாபுரம் - அமராவதி. புரத்தல் - காத்தல். வரைநீர்மை - வினைத்தொகை. நூபுரம் - சிலம்பு (௩௫௮)

பாங்கிதானதுமுன்னே சாற்றியதுரைத்தல்

(இது வெளிப்படை.)

அன்னைக் கியம்பினு ளாண்டகை யான்முன் னறிந்து தென்னன்
றன்னைப் பணிந்துகுற் றேவல்செய் யாது சமர்க்கெழுந்து
மன்னைப் புறங்கண்ட வாணன்றென் மாறை வரையிலெங்கள்
பொன்னைப் புணர்ந்துநுங் கேண்முன்னர் நீபொன் புனைந்ததுவே

இ - ள். ஆண்டகையே! பாண்டியனைப்பணிந்து குற்றேவற்றொழின் முறைமைசெய்யாது போர்க்கெழுந்த மன்னைப்புறங்கண்ட வாணன்றென் மாறைவரையில் எங்கள் பொன்போன்றவளைக்கூடி நுஞ்சுற்றத்தார் முன்னம் நீதிருப்பூட்டியது யான்முன்னையறிந்து அன்னைக்கியம்பினேன் எ - று.

ஆண்டகை - அண்மைவிளி. தென்னன் - பாண்டியன். குற்றேவல் - சிற்றாளாய்ச்செய்யுமேவல். பொன் - ஆகுபெயர். பொன்புனைதல் - திருப்பூட்டுதல்.

மணனயாவேட்கையினற்றாய் செவிலியைவினுதலொன்றும் வினுதல், வரைந்தமை பாங்கி செவிலிக்குணர்த்தலும், வரைந்தமை செவிலி நற்றாய்க்குணர்த்தலும், பாங்கிதானது முன்னே சாற்றியதுரைத்தலும் மூன்றுஞ்செப்பல், தலைமகனுமர்க்கியம்புகென்றென்றொன்றுமேவுதல் (௩௫௯)

தன்மனைவரைதல் முற்றிற்று

---

## உடன்போக்கிடையீடு.

உடன்போக்கிடையீடு எ - து தமர்மனையில் வரைந்துகொள்ளாது தன்னூரில் வரைந்தானென்று தலைவிசுற்றத்தார் வெறுப்படைதலால் தலைவியையுடன்கொண்டுபோம்போது தலைவி சுற்றத்தாரிடையீடுபட்டு மீண்டு தலைவிவருதல்.

‡ "போக்கறிவுறுத்தல் வரவறிவுறுத்த
னீக்கமிரக்கமொடு மீட்சியென்றாங்
குடன்போக்கிடையீ டொருநால்வகைத்தே."—என்னுஞ் சூத்திரவிதியால் உடன்போக்கிடையீடு ஒருநால்வகைப்படும்

---

‡ அகப்பொருள் விளக்கம், வரைவியல், சூ-உஎ.

### நீங்குங்கிழத்திபாங்கியர்தமக்குத்தன்செலவுணர்த்திவிடுத்தல்.

நீங்குங்கிழத்தி . . . . விடுத்தல். எ-து. ஐம்பத்தைந்தாநாள் தன்னூரைவிட்டு நீங்குங்கிழத்தி எதிர்வருவோர்தம்மொடு தலைவனுடன் செல்லுந் தனசெலவைப் பாங்கியர்க்குணர்த்திவிடுதல்.

---

வளவேய் மிடைந்த வழிபடா வீர்செங்கை வாணன்றஞ்சைத்
தளவேய் நகையென் றுணைவியர்பாற் சென்றுசாற்று மின்போர்க்
களவே லனையும் வாட் காளைபின் போயினள் கான்பனிநீத்
திளவேனில் வல்லிபெற்றாங் கெவ்வநீத் தெழி லெய்தியென்றே.

இ-ள் வளமபொருந்திய மூங்கில்மிடைந்தவழியில் செல்கின்றீர்! பனிக்காலத்தைநீத்து இளவேனிற்காலத்தை வல்லிபெற்றாற்போல் துன்ப மெல்லாமொழித்து அழகைப்பொருந்திக் காட்டிடத்தில் போர்க்களத்தின் முருகவேலையொத்த ஓர்காளைபின்போயினள் என்று சிவந்தகையையுடைய வாணன் தஞ்சையிலிருக்கும் தளவையொத்த நகையையுடைய என்பாங்கியர்பாற்சென்றுசொல்லுமின. எ-று.

மிடைதல் - நெருங்குதல். படாதல் - செல்லுதல். தளவு-முல்லை. கான்-காடு. எவ்வம்-துன்பம். எழில்-அழகு. சுறறத்தார்செய்தவெறுப்பைஎவ்வமென்த் தெனக் குறிப்பாற கூறியவாறுணர்க. (௱௫௦)

### தலைமகள்தன்செலவு ஈன்றாட்குணர்த்தி விடுத்தல்.

(இது வெளிப்படை)

வாயார நுங்களை வாழ்த்துகின் றேன்றஞ்சை வாணன்வெற்பில்
சாயாத மாதவத் தாழ்சடையீ ரன்பர் தம்மொடின்றியான்
சேயாறு தேரினைச் செலவதெல் லாமெங்கள் சேரியிற்சென்
றியாயாகி யுங்கொடி யாட்கினி தாக வியம்புமினே.

இ-ள். தஞ்சைவாணன் வெற்பில் கேடில்லாதமாதவத்திறற்கொண்ட தாழ்ந்தசடையுடைய அந்தணீர்! நுங்களை வாய்நிறைய வாழ்த்துகின்றேன்; தலைவர் தம்முடனே இன்றுயான் சேண்வழியில்தேரின்மீது செல்வதெல்லாம் எங்களூரின்கண் சென்று தாயாகிய கொடியாட்கு இப்போதே இன்பாகச் சொல்லும். எ-று.

சாயாத-கேடில்லாத. சேயாறு-சேண்வழி. இனிதாக என்பது குறிப்பாற்கூறியவெறுப்புமொழி. (௱௫௧)

## நற்றாய்க்கு அந்தணர்மொழிதல்.

(இது வெளிப்படை)

மருள்கொண்ட சிந்தை மலைகிழ வோய்தஞ்சை வாணன்வெற்பில், வெருள்கொண்ட மென்பிணை வென்றகண் ணாள்வென்றி வேல்வலங் கை, அருள்கொண்ட நெஞ்சினோ டண்ணல்பின் னேயகன் றாள கல்வான், இருள்கொண்ட கொண்டல்செல் லாவரை சூழு மிருஞ்சுரத்தே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பினிடத்து மகளைக் காணேமென்று மயக்கங்கொண்ட மலைக்கரசியே! வெருட்சிகொண்ட மென்பிணைமானை வென்றகண்ணாளாகிய நின்மகள் வெற்றிவேலை வலங்கையினும் அருளை நெஞ்சினுங்கொண்ட ஓர் வேந்தன்பின்னே அகன்ற வானிடத்துச் சூல் கொண்டமேகம் ஒருகாலுஞ்சென்றறியாத மூங்கில்சூழ்ந்த பெரியகாட்டிடத்தே யகன்றாள் எ - று.

மருள் - மயக்கம். வெருள் - வெருட்சி. பிணை-பெண்மான். 'வென்றி வேல்வலங்கை யருள்கொண்ட நெஞ்சின்' என்புழி உம்மைத்தொகை, வென்றிவேல் வலங்கையினும், அருள் நெஞ்சினும் என்றது உறழ்வணங்காக்கால் வேல்செலுத்தலும், வணங்குங்கால் அருள்செலுத்தலும் கருதியெனக். வரை - மூங்கில். (௩௬௨)

## நற்றாயறத்தொடு நிற்றலின் தமர்பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குணர்த்தல்

உவலைப் பதுக்கை முரம்பு செல்லாம லுலகமங்கை
தவலைத் தவிர்த்த தமிழ்த்தஞ்சை வாணன் றரியலர்போம்
கவலைக் கடத்துச் சிலைத்திரை கோலிக் கடும்பகழித்
துவலைப் படைக்கட ரேன்றல்பொற் றோவங்களு சூழ்கின்றதே.

நற்றாயறத்தொடு... உணர்த்தல் எ - து. அந்தணர் மொழியவறிந்த நற்றாய் குறிப்பான் அறத்தொடு நிற்றலின் தமர் சினந்து சூழ்ந்துகொண்டு பின்சேறலைத் தலைவிகண்டு தலைவற்குணர்த்தல்.

இ - ள். தோன்றலே! தழைகளொடுகூடிய சிறுதூறுகளுமூடிமேடு செல்லாமல் நிலமங்கையது வளங்கெடுதலைத் தவிர்த்த தமிழ்த்தஞ்சைவாணன் பகைவர் செல்லுங் கவர்வழியில் வில்லாகிய திரைகளையுண்டாக்கிக் கடிய அம்பாகிய துவலைகளைச்சிதறிப் படையாகிய கடல் நின்னது பொற்றோணியாகிய மரக்கலத்தைச் சூழ்கின்றது எ - று.

உவலை - தழை; * 'உவலைக் கூரையொழுகிய தெருவில்' என முல்லைப் பாட்டிற்கு நச்சினார்க்கினியர் தழையாலேவேய்ந்தகூரையென வெழுதிய

* முல்லைப்பாட்டு, வரி, ௨௯.

வுரையானுமுணர்க. பதுக்கை-சிறுதூறு, முரம்பு-மேடு. தவல்-கேடு. கவலை-கவர்வழி. கடம் - காடு. இலை - அலை. பகழி-அம்பு. வங்கம் - மரக்கலம். இஃதியைபுருவகம். (௩௬௩)

### தலைமகளைத்தலைமகன்விடுத்தல்.

(இது வெளிப்படை)

ஆறலை வெஞ்சிலைக் கானவ ரென்கை யம்பொன்றினால்
நூறலை யஞ்சலை நுண்ணிடை யாய்நும ரேல்வா முன்
சேறலை யஞ்சுவல் செல்லலை பைம்பூகச் செழும்பழுக்காய்
தாறலை தண்டலை சூழ்தஞ்சை வாணன் றமிழ்வெற்பிலே.

இ - ள். நுண்ணிடையாய்! ஈண்டுக் கூடிவருகின்றோர் வழியை அலைக்கும் வெய்ய சிலையையுடைய வேடராகில் என்கையிற்பிடித்த ஓரம்பினால் புறப்பொருளில் தும்பைத்திணையின் நூழிலாட்டென்னுந்துறைதோன்றக் கொன்றுகுவித்தலை யஞ்சேன், நுமர்சுற்றத்தவரேயாகில் அவர்முன் செல்லுதலை யஞ்சுவேன்; ஆதலான் இவரால் அப்பசிய கமுகினது செழித்த பாக்குத் தாறு காற்றாலசையுஞ்சோலைசூழ்ந்த தஞ்சைவாணன் தமிழ்வெற்பிடத்தில் யான்செல்வேன். எ - று.

ஆறலைத்தல்-வழிபறித்தல், நூறல்-கொல்லுதல். 'நுமரேலஞ்சுவேன்' என்றது நுமரெதிர்ந்துழி அவரைக் கொலைசெய்யவேண்டும், செய்துழி நீ துயருழத்தி ஆதலால் அஞ்சுவனென்றான். தாறு-குலை. தண்டலை - சோலை. நூழிலாட்டென்பது ஒருவன் பலரைக்கொன்று குவித்தல் —என்னை? "பல படை யொருவர்க் குடைதலின் மற்றவனொள்வாள் வீசிய நூழிலும்" என்னுஞ் சூத்திரத்தானுணர்க. இதற்குக்காரணம் மதுரைக்காஞ்சியிற் கண்டுகொள்க. யான்செல்வேன் என்பது அவாய்நிலையான் வந்தது. (௩௬௪)

### தமருடன்செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றரற்றல்.

தமருடன் செல்பவள் அவன்புறநோக்கிக் கவன்றரற்றல் எ - து. தமருடன் செல்லப்பட்ட தலைவி அவன்புறங்காட்டிப்போதலைநோக்கிக் கவலைப்பட்டுத் தேறுதல்.

ஏமா னெனவஞ்சு மேற்காத் தலினவ் விரவிபொற்றோ
வாமானின் வாழ்வன வாகப்பன் றூட்டஞ்சை வாணனென்னோர்
போமா னரிடத் தென்னையர் தோன்றப் புறங்கொடுத்த
கோமான் மணிநெடுந் தேர்நுகம் பூண்ட குரகதமே.

இ - ள். தஞ்சைவாணனுக்குப் பகைவராயுள்ளார் செல்லுமான்சஞ்சரிக்கும் வழியிடத்து என் தந்தையர் தோன்றுதலைக்கண்டு புறங்கொடுத்துச் செல்கின்ற தலைவனது மணியிழைத்த நெடுந்தேர் நுகத்திற்பூட்டிய குதிரைகள் அம்புகண்ட மான்போல அஞ்சுகின்ற என்னைக்காத்தலால்

அவ்வாவித்தனது பொற்றேரிற்பூட்டிய வாவுங்குதிரைகள்போலப் பன்னாள் வாழ்வனவாக, எ - று.

ஏ - அசை. வாமான - வாவுமான. * "செய்யுமென்னும் பெயரெச்சக் கிளவிக்கு மெய்யொடுங்கெடுமே யீற்றுமிசை யுகரம்" என்பதனானுணர்க. அதா-வழி. குரகதம்-குதிரை. 'கவன்றுற்றல்' என்பதனால் இக்கிளவியிரக்கத் தின்பாற்படும்.

நீங்குங்கிழத்தி பாங்கியர் தமக்குத் தன்செலவுணர்த்தி விடுத்தலும், தன்செலவீன்றாட்குணர்த்திவிடுத்தலும், ஈன்றாட்கந்தணர்மொழிதலுமாகிய மூன்றும் போக்கறிவுறுத்தற்குரிய. அறத்தொடு நிற்றலிற்றமர் பின்சேறலைத் தலைவி கண்டுரைத்தலொன்றும் அலரறிவுறுத்தற்குரித்து. தம்முடன் செல்பவள் வன்புறநோக்கிக் கவன்றுற்றலொன்றும் இரக்கத்துக் குரித்தெனக்கொள்க. (௩௯௫)

உடன்போக்கிடையீடு
முற்றிற்று.

---

வரைதல்.

தன்னூர்வரைதலும் தன்மனைவரைதலும் என்னும் இவ்விரண்டொழிந்தது † "எவற்றினுங்கிழவோ - னந்தணர்சான்றோர் முன்னிட்டருங்கலந் தந்துவரைத லருதியென்ப." - என்னுஞ் சூத்திரவிதியாற் சென்றோன் மீண்டுவந்து அந்தணரையுஞ் சான்றோரையு முன்னிட்டுவரைந்து கொண்டெழிக் கண்டோர் மகிழ்ந்துகூறல்.

வரைதல் எ - து. ஐம்பத்தாறுநாள் தலைவன்மீண்டு தலைவியில்லின் வாராநின்றுழி தலைவி தம்மொடிரக்கொண்டுபோயழைத்துவந்தபின் உலகவியற்கையின்படி பலவிதமாக அருங்கலமுதலிய வேண்டுவனகொடுத்து அந்தணரையுஞ் சான்றோரையு முன்னிட்டு மணச்சடங்குடனே வதுவை முடித்துழிக் கண்டோர் மகிழ்ந்துகூறல்.

**சென்றோன் மீண்டுவந்துஅந்தணரையுஞ்சான்றோரையுமுன்னிட்டு**
**வரைந்துகொண்டுழிக்கண்டோர்மகிழ்ந்துகூறல்.**
(இது வெளிப்படை)

சேலார் புனல்வையை சூழ்தஞ்சை வாணன்றென் மாறையினம்
வேலா னெனப்பிறர் வேட்டவா யார்மண மெண்டுகிலின்
பாலா ரமளியும் பாற்கட லானது பங்கயக்கண்
மாலா யினனிவ னுந்திரு வாயினண் மாதுமின்றே.

---

* தொல். சொல். வினையியல், சூ ௪௧.
† அகப்பொருள்விளக்கம், வரைவியல், சூ. உ௯.

இ - ள். கயலார்ந்தபுனல் பெருகிவரப்பட்ட வையைசூழ்ந்த தஞ்சைவாணன் தென்மாறை நாட்டில் வெண்டுகிலின் பான்மையாரகத பாயலும் பாற்கடல்போன்றது; இவ்வேந்தனுஞ் செந்தாமரைக்கண் மாலையொப்பானாயினன், இம்மாதரும் திருவையொப்பாராயினார்; ஆதலான, நம்வேலானை மணம் வேட்டவர் பிறர் யார். எ - று.

சேல் - கயல். ஆர்தல் - பொருந்தல். புனல் - நீர். அமளி - பாயல். இங்ஙனமொரு தலைவனுக்கும் தலைவிக்கும் ஒருகால் மணமுடிப்பதன்றிப் பலகால் மணமுடிந்ததாகக்கூறுதல உலகினகண் வழங்குவதன்றே, இவ்வாறுகூறியதெனனையெனின்,—உடன்போய்ததன்னூரின்கண்ணே வரைதலும், மீண்டுவந்து தன்மனையின்கணணே வரைதலும், அந்தணர் சான்றோரை முன்னிட்டுத் தாய்தமரறியமணச்சடங்கின் முறையேமுடியாமையான் அவை யிரண்டுமெணமாகா ; அஃதெனனையெனின், உலகியல்பின்கண் தாய்தமரறியாது மணசசடங்குமின்றி ஒருவன் உரிமை கருதித்தாலிகட்டுமணமென்று உலகின்கண்ணுள்ளார் கைககொள்ளார்; அவர்ககே மீண்டும் மணச்சடங்குடனே மணமுடிப்பார், ஆதலால, அந்தணர் முதலாயினரை முன்னிட்டு அவன் மனையின் மணச்சடஙகுடனே முடித்தலின் இதுவே மணமாயினவாறுணர்க இவ்வாறு நாள்முறையாயக்கூறிவந்து ஐம்பத்தாறு நாள் மணமுடிந்ததென்றுகூறியதென்னையெனின், * "திங்களிரண்டினக மெனமொழிப."—எனனும் அகப்பொருட்சூத்திரததுறையில இருதிஙகளுநாலுநாளிருக்கமணமுடிபப தியலபென்று இலக்கணஙகூறினமையாற்கூறியதென்றுணர்க. (௩௯௬)

வரைவியல் முற்றிற்று.

---

நான்காவது

## கற்பியல.

கற்பியல் எ - து. கற்பிககப்படுதலாற் கறபாயிற்று. கற்பித்தலாவது என்னையெனின், அறிவும்ஆசாரமும்தலைவனுறகறபிக்கபபடுதலும், இருமுதுகுரவராற் கறபிக்கப்படுதலும், செவிலியாற கறபிககபபடுதலும், அந்தணர் முதலிய சான்றோராறகற்பிககப்படுதலுமெனக்கறபித்தல பலவாயின. ஆதலால் கற்பியல் எனப்பெயராயிற்று.

ஆயின், இவ்வாறு களவினொழுகல் கற்பின்கணொழுகல் உலகின்கண் இன்றெனின, நன்று சொன்னாய்— அறிவுடையோர் மக்கட்கு மணஞ்செய்யுங்கால் இத்தன்மையானை நினக்கு மணஞ்செய்யநினைந்தேம்,

---

* இறையனாரகப்பொருள், சூ. ௩உ.

இது நினக்கியைபோ? இயைபின்மையோ? எனவினவி அவரவர் கூற்றின்படிசெய்வா. அவர்கூறாக்கால குறிப்பானுணர்ந்து செயவனெனக்கொள்க. இங்ஙனம இருவருள்ளமும் ஒத்தவழி மணஞ்செய்தலியல்பாயிற்று, ஆகவே, உள்ளபுணாச்சி நிகழ்ந்ததாம்; உள்ளப்புணர்ச்சி நிகழ்ந்தபோதே மெய்யுறுபுணர்ச்சி நிகழ்ந்ததாயிற்று. இதனை *"உள்ளத்தா லுள்ளலுந் தீதே பிறன்பொருளைக்-கள்ளத்தாற் கள்வேமெனல்."—என்னும குறட்குப் பரிமேலழகருரையில நினைத்தலுஞ்செயதலோடொக்கு மெனக்கூறியதனானுணர்க. எனவே,—உலகினகண நிகழுங கறபொழுக்கமெல்லாம களிருவமணத்தின வழிக்கறபெனறேகொள்க.

இல்வாழ்க்கை.

இல்வாழக்கை எ-து தலைவனும் தலைவியும இல்லின்கண்வாழும் வாழ்க்கையைக்கூறுதல்

"கிழவோனமகிழசசி கிழத்திமகிழ்ச்சி
பாஙகிமகிழசசி செவிலிமகிழச்சியென
நீஙகுநால்வகைத் தில்வாழ்க்கைய்யே."—என்னும் அகப்பொருள் விளக்கச் சூத்திரவிதியால் வாழக்கை நால்வகைப்படும.

தலைவன்தலைவிமுன்பாங்கியைப்புகழ்தல்

(இது வெளிபபடை.)

நின்மே லடுதத பசலையின காரண நின்றுணைவி
எனமே லடுத்த வியலபினன் றேபெற்ற தேழுலகும
தன்மே லடுதத புகழ்த்தஞ்சை வாணன தமிழ்க்கிரிநுண
பொன்மே லடுத்தன பொற்சுணங் கேற புணர்முலையே.

இ-ள் நுண்ணியபொனமேலே நெருஙகவைததாறபோன்ற சுணங்கைப்பெற்று இடை வெளியின்றி நெருங்கிய முலையினையுடையாய்! தன்னிடத்துத்தோன்றிய புகழ் எழுலகுமநெருங்கிய தஞ்சைவாணன்தமிழசசிலம்பிடத்திருக்கும் நின்மேலேநெருங்கிய பசலைநீங்குஙகாரணமாக நின்றுணைவி என்மேலே நெருங்கிய அன்பின் முறைமையினன்றோ இவ்வாழப் பெற்றது. எ-று.

அடுத்தல்-நெருங்குதல். இன்-நீங்கறபொருண்மை யுணாததும்உருபாகலான் நீக்கததையுணர்த்திநின்றது. இயல்பு-முறைமை. தமிழ்க்கிரி-பொதியமலை. நுணபொன் - தகட்டிறசெதறிய சிறுமைப்பட்ட பொன, புணர்முலை நெருங்குமுலை. இல்வாழ்க்கை அதிகாரத்தான் வந்தது. (௩௬௭-

* திருக்குறள், செ. ௨௮௨.
அகபபொருள்விளககம், கற்பியல். சூ. ௩.

### தலைவனைப்பாங்கிவாழ்த்தல்.

(இது வெளிப்படை.)

தெரியா டகவிதழ்ப் பூங்கொன்றை வேணியுந் தேவியும்போல்
பிரியா துறையப் பெறுகுதிரா றப் பிறைமானு நெற்றிப்
புரியாழ் கிளைமொழிப் பூவையு நீயும் புணர்ந்த பலகேழ்
வரியார் சிலையண்ணலே தஞ்சை வாணன்றென் மாறையிலே.

இ - ள். பலநிறத்தையுடைய கட்டுதலாராத சிலையையுடைய அண்ணலே! தஞ்சைவாணன் தென்மாறைநாட்டில் பிறைபோலும் நெற்றியையும் நரம்புகட்டிய யாழிசைபோன்ற மொழியையுமுடைய பூவைபோல்வாளும் நீயுங்கூடி தெரிந்தெடுத்த பொன்போன்ற இதழையுடைய கொன்றைப்பூவைத்தரித்த வேணியாகிய சிவனும் தேவியாகிய உமையும்போல என்றும் பிரியாதிருக்கப்பெறுவீர். எ - று.

தெரியாடகம்-பொன்களிற்றெரிந்தெடுத்தபொன். கொன்றைவேணி-சிவன். தேவி-உமை. ஆல்-அசை. புரி-நரம்பு யாழும் பூவையும் ஆகுபெயர். கேழ்-நிறம். வரிதல்-கட்டுதல். (௩௬௮)

### பாங்கி தலைவியை வரையுநாளளவும்வருந்தாதிருந்தமை யுரையாயென்றல்

(இது வெளிப்படை)

கோங்ககன் மாமுலைக் கொங்கை நல்லாய்மணங் கூடுமெல்லை
யாங்கன மாற்றி யிருந்தனை நீயிப மாசயிலம்
தாங்கன மாறத் தலம்புனைவாணன் றமிழ்த்தஞ்சைவாழ்
பூங்கன மார்குழ லாரலா மாலைப் பொறைசுமந்தே.

இ - ள். கோங்கினது நல்ல பெரியமுகைபோன்ற கொங்கையையுடைய நல்லாய்! நீமணங்கூடுமளவும் இக்கயமும் பெரியகுலவரையும் பூமிபாரமெடுத்தஇளைப்பாற அப்பாரத்தைத்தரித்த வாணன் தமிழ்த்தஞ்சையில் வாழும் பூவைத்தரித்த முகில்போன்ற குழலார் தூற்றப்பட்ட அலராற்கட்டிய மாலையினது பாரத்தைச்சுமந்து எவ்வண மாற்றியிருந்தனை. எ - று.

இபம்-இக்கயம். மாசயிலம்-குலவரை. தலம்-பூமி. கனம்-முகில். இதற்குப்பாரமாகிய குழலாரொன்று பொருள்கூறுவாருமுளர். (௩௬௯)

### பெருமகளுரைத்தல்.

பெருமகளுரைத்தல் எ - து. தலைவி தான்வருந்தாதிருந்த காரணம் பாங்கிக்குரைத்தல்.

---

மைதோய்ந் தலர்ந்த மலர்த்தடஞ் சூழ் தஞ்சைவாண னென்னா
மெய்தோய்ந்த செந்நிற வேல்விழி யாயதுயர் வெள்ளமலைவற்பர்
கைதோய்ந் தளிப்பவ சோகத்த வாய்சிறந்த காலவனவாய்
செய்தோய்ந் தனந்தழை யேபுணை யாக்கொண்டு நீந்தினனே.

இ - ள். கருநிறம்பொருந்திய நீலமலரையுடைய வாவிசூழ்ந்த தஞ்சைவாணனுக்குப் பகைவராயுள்ளார் மெய்யிரத்தத்திற்றோய்ந்து சிவந்த நிறத்தையுடையவேலைப்போன்ற விழியினையுடையாய்! வெற்பரானைதொட்டளிப்ப அசோகமென்கின்ற பெயரினையுடையனவாய நிறத்தையொப்பனவாய செயிற்றோய்ந்தாற்போன்ற தழையையே தெப்பமாகக்கொண்டு துயர வெள்ளத்தை நீந்தினேன். எ - று.

மை[illegible] தடம்-வாவி. தோய்ந்து-தொட்டு. அளிப்ப - [illegible]. செய - [illegible]. புணை - தெப்பம். (௩௭0)

தலைவனைப்பாங்கி வரையுநாளளவும் நிலைபெறவாற்றிய நிலைமைவினாதல்

(இது வெளிப்படை.)

வரையு மிந்நாளள வெவ்வா றிரோம மடந்தைமுகை
புரையு மென்கொங்கை பிரிந்திருந்தீர் முன்பொருப் பெடுத்தே
நிரையு மிஞ்ஞாலமுங் காத்தருட் டானவன் பாதா கையினீள
திரையுங் குயிலும் விடாதெழு மோசை செவிமடுத்தே

[இது பிறசெய்யுட்கவி] (௩௭௧)

மன்றல்மனைவரு செவிலிக்கிருவ ரன்புறவுணர்த்தல்.

மன்றல்மனைவரு செவிலிக்கிருவரன்புறவுணர்த்தல் எ-து கலியாண மனையில்வந்த செவிலிக்கு இருவரது அன்பும் உவப்பும் உணர்த்தல்.

வளங்கொண்ட தஞ்சைவரோதயன் வாணன்றென் மாறையன்னாள்
இளங்கொங்கை கொண்டுழுதீரங் கொண்மார்பின முத்தந்தெற்பவித்தி
விளங்கொண் பிறைநுதல் வேளாதந்து போகம் விளைத்தன்புசேர்
உளங்கொண் டருத்துதலா லனையூ ரனுவப் புறுமே.

இ - ள். அன்னை ! வளமைகொண்ட தஞ்சையில்வரோதயனான வாணன்தென்மாறைபோன்றதலைவி தன்னிளங்கொங்கையைக்கொண்டு மூதிரங்கொண்ட மார்பிடத்து முத்துமாலையினது முத்தைப்பொருந்த வித்தி விளங்கும் ஒள்ளிய பிறைபோன்ற நுதலினவேளாததரும போகத்தை விளைத்து அன்புசேருள்ளங்கொண்டு நுகர்வித்தலான மிகவுமகிழ்ச்சியுறும்.

ஈரம்-அன்பு. அருந்துதல்-நுகர்வித்தல். உவப்பு-மகிழ்ச்சி. (௩௭௨)

வாறனுள் பெருமகளுரைத்தல் கிழத்திமகிழ்ச்சி ; அல்லனவைந்தும் பாங்கி மகிழ்ச்சி; செவிலிநற்றாய்க்குத் தலைமகள் கற்பியல்புரைத்தல் மூன்றுஞ்செவி லிமகிழ்ச்சியெனக்கொள்க (௩௭௯)

இல்வாழ்க்கை முற்றிற்று.

---

## பரத்தையிற்பிரிவு.

இது தலைவன் பரத்தைமேற் காதலாய்த் தலைவியைப்பிரிந்து பரத்தையர் சேரியிற்போதல். பரத்தையிற்பிரிவென்றதனை *"பொதுநலத்தார் புன்னலந்தோயார் மதிநலத்தின் மாண்ட வறிவினவர்."—என்பதனுற் றலைவ னறிவிலனும், தலைவியிடத்தன்புயிலனும், பெருமையிலனும், பட்டியுமா மெனின் அன்றன்று. அரசுரிமையுறுதலின் அரசர்க்குப் பரத்தையரினும் வரைதற்குரியராயத் தொன்றுதொட்டு நடக்கு முறைமையராயும், வரையாத வுரிமையாய்ச் சேரியின்கணுறைவாருமாய இவரும் பிறந்த ஞான்றுதொட்டு இவர்க்கென விதித்திருக்கப்படுதலானும், அவரை நீக்குதல் தகுதியன்மையானும், பரத்தையிற் பிரிதல் குற்றமன்றெனக்கொள்க. அன்றியும், காலைக்கடன்கழித்தலும், உலகத்திலிருந்து நற்காவற்றொழில்செய்தலும், விருந்துடனடிசிலுண்கொடலும், நாவலரோடுகலவிபயிற்றலும், ஆடல் பாடல்கண்டுகளித்தலும், மடவாரோடு கூடலும், துயிறலும், துயிலுணர்ந்து தேவர்ப்பரவலுமாகிய காலவரையறையொடுபட்டனுள், ஆடல்பாடல் ஒன்றுதலானும், அதற்குரியார் பரத்தையராதலானும், அதற்குரிய காலத்தில் அவரிடத்தில் மனஞ் செல்லுதலியல்பாதலானும், பரத்தையிற்பிரிதலாற் குற்றமின்றெனக்கொள்க. ஆயின், பரத்தையர்சேரியிற் செல்லுமாறென்னையெனின், அவர் பலரோடும் விளையாடற்பொருட்டும், அவருடன் புணர்தற்குரியவராய்ப் புணர்தற் பொருட்டும் பரத்தையர் சேரியிற் செல்லுமென்றுணர்க.

**காதலன்பிரிவுழிக்கண்டோர்புலவிக்**
**கேதுவிதாமவ்விறலிக்கென்றல்.**

(இது வெளிப்படை.)

மாறையர்க் காவலன் வாணன்றன் றஞ்சையில் வாணுதற்கிவ்
வாறையர் காரண மாகுமன்றே கொங்கை யானையுடன்
சாறையர் வீதிய ரிப்பறை யார்ப்பத் தயங்குகுழல்
கூறையர் கூறைகொள் வான்வய லூரனைச் சூழ்ந்தனரே.

(இ - ள்,) விளங்குங் குழலையுடைய பரத்தையரிலைக் கொள்ளை கொள்ளும் பொருட்டாகக் கொங்கையாகிய யானையுடன் திருவிழாச்செய்

---

* திருக்குறள், செ. ௯௧௫.

புமவீதியில் வண்டாகியபறைகள் ஆரவாரிக்க வயலூரனைச்சூழ்ந்தனர், ஆதலால், மாறையார் காவலனாகிய வாணன் தென்தஞ்சையிலிருக்கும் வாணுதற்கு இம்முறைமை புலவி செய்தற்குக் காரணமாம். எ - று.

இவ்வாறு-இம்முறைமை. அயர்தல்-விரும்புதல். சாறு-விழா. அரி-வண்டு. குறைபா-பரத்தையர். குறை-கொள்ளை. புலவிடம் அறிவும் அரிய நிலையானவந்தன. (௩௭௭)

## தனித்துழியிறைவிதுனித்தழுதிரங்கல்

(இது வெளிப்படை.) தனிதல்-துன்பமுறல்.

வண்போ தணிதொங்கல் வாணன்றென் மாறை மகிழ்நர்கைமேல்
அன்போ டுனன்னெஞ்ச சறிவறைப் போக வழலுள்வெந்த
பொன்போ னிறங்கொண் டிரவுங் கண்ணீரும் புலாவதுபாத
தென்போ லவரிங்ங னேயிமை யாம லிருப்பவரே.

இ - ள். போதுகளாற் கட்டியமாலையணிந்த வாணன் தென்மாறையி லிருக்கும் வண்மையாகிய மகிழ்நர் கைமேலமைத்த அன்புடனே அவனை யிருக்கும் நெஞ்சறிவு கீழ்போக அழலுள்வெந்த பொன்போன்ற நிறத்தைக் கொண்டு இரவும் கண்ணீரும் எப்போதும்புலர்வென்றுபுலாவதுயாதமறிவ விட்டதில் என்னைப்போல உறக்கமின்றி இமையாமலிருப்பவரியார்? எ-று.

'தொங்கலணி' எனவும், 'வணமகிழ்நர்' எனவும், 'இங்ஙனென்னைப்போல' எனவும் இயையும். தொங்கல்-மாலை. மகிழ்நர்-கணவர். அறைபோதல்-கீழ் போதல். அழல் - நெருப்பு. (௩௭௮)

## ஈங்கிதுவென்னெனப்பாங்கிவினாதல்.

ஈங்கிதுவென்னெனப் பாங்கிவினாதல் எ - து. மறைநாட்காலையில்வந்த பாங்கி தலைவியைநோக்கி நீ அழுதுகொண்டிருத்தற்குக் காரணம் என்னென்று வினாதல்.

---

எம்மா திரமும் புரவலர் தேடி யிரந்துழல்வோர்
தம்மா துயரந் தணித்தருள் வாணன் றமிழ்த்தஞ்சைவாழ்,
நம்மாவி யன்னவர் நாடொறு நாடொறு நலக்கவுநீ
விம்மா வருந்துவ தென்பிரிந் தாரின் விளங்கிழையே

இ - ள் விளங்கிழாய்! எத்திக்கினுங் கொடைபோனத் தேடியிரந்து வருந்துவோர் தம்முடைய பெரியதுயரைத் தவிர்த்தருளப்பட்ட வாணன் தமிழ்த் தஞ்சையில் வாழும் நமதாவிபோன்றவர் நாடோறும் நாடோறும் இன்பமளிக்கவும் நீ விம்முதலுற்றுப்பிரிந்தாரைப்போல வருந்துவதென்?

மாதிரம்-திக்கு. புரவலர் - கொடுப்போர். உழல்வோர்-வருந்துவோர் தணித்தல்-ஆறுதல். நல்கல்-அளித்தல், விம்மா என்பது வினையெச்சம். இன் - உவமவுருபு. எடுத்துக்கோடற்கண்ணே அகப்பொருளென்பதற்கு இன்பப்பொருள்என்று பொருள்கூறியவர் இவ்வாறு துன்பமுறுதலைக்கூறிய தென்னையெனின், புணர்தல்பிரிதலிருத்தலிரங்கலூடலென்பன இன்பத்திற் குறுப்பாகலின் இவைகளினொன்று நீங்கினும் அவ்வின்பத்திற் குறுப்புக்குறையாம், அஃதென்னையெனின், புணர்தலே யின்பமென்றும் ஏனைய துன்பமென்றும் கூறுகின்றுழி, பிரியாது புணர்ந்துழி வெறுப்படையும், பிரிந்துழி துன்பமுற்றிலரேல் அவரறிவிலாராம். இருத்தலும் ஊடலும் இவ்வாறேகொள்க. ஆதலால், துன்பமுறுவிடின் இன்பக்குறைபாடேயெனக் கொள்க. (௩௭௯)

### இறைமகன்புறத்தொழுக்கிறைமகளுணர்த்தல்.

இறைமகன் ... . இறைமகளுணர்த்தல் எ - து. தலைவன்தன்னிடத்தொழுகுமொழுக்கமின்றி பரத்தையரிடத்தொழுகுகின்றானென்று தலைவி பாங்கிக்குக்கூறல்.

'புறத்தொழுக்கு' என்பதற்குப்பொருள் பரத்தையரிடத்தொழுகு மொழுக்கம் என்று பொருள் கொண்டவாறென்னையெனின், வடநூலார் புறகுலாபபாமென்று கூறுவராதலால் பரத்தையரொன்னும் சொற்குப் புறமுடையவளென்னும் பொருள்கூறிநின்றவாறுணர்க. புறமுடையளென்பதென்னையெனின், இவரின்பம் இன்பமன்றென்று தெய்வப்புலமைத் திருவள்ளுவனார் வரைவின்மகளிர்என்னுமதிகாரத்தால் இன்பத்திற்குப் புறம் இவரின்பமென்று கூறியவாற்றானுணர்க. *"இருமனப்பெண்டிருங் கள்ளுங்கவறுந்-திருநீக்கப்பட்டார் தொடர்பு" என்பதனானுமுணர்க.

---

தாராக நல்கினர் காரிகையாய தஞ்சைவாணன் றன்னைச்
சேரா தவரென்னத் தீவினையேனை யச்செங்கண் வன்கட்
காரா கழனிக் கரும்பின்கு சாயக் கதழ்ந்துசெந்நெல்
ஆரா தயலிற பஞ்சாயாரு மூர ரயலவாககே.

இ - ள். அழகையுடையாய! தஞ்சைவாணனைச் சேராதவர்போலத் தீவினையுடைய யானவருந்தச் சிவந்தகண்ணையும் தறுகண்மையுமுடைய எருமை கழனியிடத்துக் கரும்புக்கூட்டங் சாயமிதித்து விரைந்துபோய்ச் செந்நெல்லையுமாராது வயல்வரம்புகடந்துஅயலிலிருக்கும் கோரையையருந்து மூரையுடையவர் அயலாராகிய பரத்தையர்க்குத் தார்பொருந்திய தமது மாலைக்கொடுத்தனர். எ - று.

எனவே,—கரும்புபோன்ற குலக்கிழத்தியும் செந்நெல்போன்றதானும் வருந்துமனத்தினென்னாது வரம்புகடந்துஅயலிலிருக்கும் கோரைபோன்ற

---

* திருக்குறள், செ. ௯௨0.

பரத்தையரைக் கூடினனென உள்ளுறையுவமை கொள்ளக்கிடந்தவாறு காண்க. தார்-மாலை. ஆகம்-மார்பு. வண்கண்-தறுகண்மை. காரா - எருமை *“பெற்றமுமெருமையுமரையுமாவே” என்பதனானுணர்க. கதழ்ந்து-விரைந்து. பஞ்சாய் - கோரை. (௩௪௦)

### தலைவியைப்பாங்கிகழறல்.

(இதுவெளிப்படை.) கழறல் - இடித்துக்கூறல்,

புனையலங் காரங் கற்பியல் போற்றியும் போற்றருஞ்சீர்
மனையறம் பார்த்தும் வாழ்வதல்லாற் றஞ்சை வாணனன்று
டனையவண் டார்குழ லாரணங் கேமக் கன்பர்கள்
இனையரென் றாவமில் லாவுரை யாட லியல்பல்லவே.

இ - ள். தஞ்சைவாணன்றன்றுடைபோன்றவண்டார்ந்த குழலையுடைய ஆரணங்குபோல்வாய்! அலங்கரிக்கும் அலங்காரம் கற்பிலக்கணமே யென்று கற்பிலக்கணத்தை வழுவாமற்காத்தும், துதித்தற்கரிதாகிய சிறப்பையுடைய இல்லறத்தை யுண்டாக்கியும் அவர்வாழ்வதேயல்லது இப்போது தம்மிடத்தன்பையுடையவர் இத்தன்மையரென்று விருப்பமில்லாததாக அவர் புறத்தொழுக்கைக்கூறுதல் நமக்கு முறைமையன்று. எ - று.

புனைதல் - அலங்கரித்தல். போற்றல் - காத்தல். இயல் - இலக்கணம். மனையறம் - இல்லறம். இனையர் - இத்தன்மையர். ஆவம் - விருப்பம். †“அன்பீனுமார்வமுடைமை” என்பதனாற்கொள்க. (௩௪௧)

### தலைவிசெவ்வணியணிந்துசேடியைவிடுப்புழி அவ்வணியுழையர்கண்டழுங்கிக்கூறல்.

செவ்வணி ... கண்டழுங்கிக்கூறல் எ - து. தலைவிபூத்தகாலை மூன்றுநாள்போக்கி நாலாநாள்நீராடியபின் செம்பூச்சூடி செவ்வாடையுடுத்துச் செஞ்சாந்துபூசிச் சேடியைவிடுக்கப் பரத்தையர் சேரியிலிருக்குங்கால் அவ்வலங்காரத்தை அயல்மனையிலுள்ளார் கண்டிரங்கிக்கூறல்.

---

வேளாண் மரபு விளக்கிய வாணனொளிர் ஞாகழல்சூழ்
தாளான் வளங்கெழு தஞ்சையனை யீர்சங்கந் தந்தனனீர்
தோளார் மணியன்ன தொல்குல வேடையிற் றேனறியப்பூ
வாளார் வலர்தொடுப் பார்கெங்ங னேவந்து வாய்த்ததுவே.

இ - ள். வேளாண்குலத்தை விளங்கச்செய்தவாணனென்னும் ஒளியார்ந்த கழல்சூழ்ந்த தாளையுடையவனது வளம்பொருந்திய தஞ்சையை யொப்பீர்! சங்கமெனப்பட்ட நல்ல நீர்மையையுடையவடுப்படாதமுத்தம

---

* தொல். பொருள். மரபியல், சூ. ௩௦. † திருக்குறள், செ. ௭௪.

போன்று தோன்றுதோட்டெழுவில்லாது வரப்பட்ட குலமாகிய வேலை யிறவேன்றியபூ வறிதே அலர்தொடுப்பார்க்கு எவ்விடத்திலே யிருந்து வாய்த்தது. எ - று

பூவின்றி அலர்தொடுப்பார்க்கு ஒருபூவந்து வாய்க்கில் எவ்வா றலர் தொடாரென்றவாறாயிற்று. மரபு-குலம். மின்-ஒளி. தோளாரபணி-தோளை படாமுத்தம். பூ-திங்களொடுமவரும் மாதர்க்குத்தம். வாளா-சும்மா. 'சங்கந் தந்தனனீர்'என்பதனை 'மலர்சசந்தனனேீர்'என்று பாடமோதி வெண்மலர் போன்ற அழகையுடையமுத்தமென்று பொருள்கூறுவாருமுளர். இவ்வாறு செவ்வணியணிந்து சேடியைவிடுத்தல் உலகினகார வழக்கமின்றெனினும் புலவர் நாட்டப்பட்ட செய்யுள்வழக்கமெனக்கொள்க (௩௮உ)

## பரத்தையர்கண்டுபழித்தல்

பரத்தையர்கண்டுபழித்தல் எ - து. அச்சேரியிற்போய சேடியைப் பரத்தையர்கண்டு பழித்துக்கூறல்

---

படியொன்று சாலி யனையவர் சேரிப் படர்பவளக்
கொடியொன்று நீல மலர்ந்தது காட்டக் கொடியவெம்போர்
வடியொன்று கூரிலை வேலல்ல வாணன்றென் மாறையிற்பொற்
றொடியொன்று தோண்மட வார்சேரி வாய்வந்து தோன்றியதே.

இ - ள். புவியிற்பொருந்திய நெற்போன்றவர்சேரியினின்றும் நடந்து வந்த பவளக்கொடியொன்று நீலப்பூத்தத்தைக் காட்டப்பொருட்டுக் கொடிய வெவ்விய போர்செய்யப்பட்ட வடித்தற்றொழில்பொருந்திய கூரிய இலைபோன்ற வேற்றொழில்வல்ல வாணன்தென்மாறையில் பொற்றொடி யணிந்த தோளையுடைய மடவார் சேரியிடத்துவந்து தோன்றிற்று. எ - று

படி-புவி. சாலி யனையவர் - இற்கிழத்தியாகிய தலைவி. படர்தல்-அச் சேரியினின்றும் இச்சேரியில் வருதல். நீலம்-பொய். பவளக்கொடி நீலமலர்ந்தல் பொய்யென்பதுபற்றிக் கூறினர். எனவே,—தலைவிபொய்யுடையாளுஞ் செய்தனுப்பியதெனப் பழித்துக்கூறியவாறு காண்க. வடி - வடித்தல். தீக்கணியாகிய நாணம் முதலிய குணங்களில்லாமையான் புறவணியுடையா ரென்பதுதோன்ற 'பொற்றொடியொன்று தோண்மடவார்'என்று கூறினர்.

## பரத்தையுலகியல்நோக்கிவிடுத்தலின் தலைவன்வரவுகண்டு வாயிலக்கணமொழிதல்.

பரத்தைய ... ... மொழிதல் எ - து. தலைவி நீராடியஞான்று பரத்தை யர் தங்கள் சேரியில் தலைவனிருத்தல் உலகமுறைமைக்கு இயலாதென்று விடுத்தலின், தலைவன்வருதலைக்கண்டுவந்து தாதிகள் பாங்கிக்குமொழிதல்.

---

வாருந்து பச்சிள நீர்முலை யார்மதன் வாணன்றஞ்சை
யாருந் தொழத்தகு மெய்ம்பெரு மாட்டிதன் னேவலினால்
சேரும் பரத்தையர் சேரியி லேசென்ற சேடியைக்கண்
டூருந் திரைப்புன லூரன்வந் தானின் றுலகியற்கே.

இ - ள். கட்டியகச்சைப் பூரித்துத் தத்தளப்பட்ட பசிய இளநீர்போன்ற முலையார்க்கு மதனையொத்த வாணன்றஞ்சையில் கற்பினால் யாவரும் தொழத்தகும் எம்பெருமாட்டி தன்னேவலினால் முன் தலைவன்போய்ச் சேரும் பரத்தையருடைய சேரியிலே சென்ற சேடியைக்கண்டு ஊரப்பட்ட அலையையுடைய புனல்சூழ்ந்த ஊரன் இன்று உலகியற்கு வந்தனன் எ - று.

வார் - கச்சு. திரை - அலை. புனல் - நீர். உலகியல் - தலைவி நீராடிய ஞான்று தலைவன் பரத்தையிற்பிரியாமை தருமநூலியல்பு. (௩௱௪)

வரவுணர்பாங்கி யரிவைக்குணர்த்தல்

(இது வெளிப்படை.)

தள்ளா வளவயல் சூழ்தஞ்சை வாணன் றரியலர்போல்
உள்ளா துனைப்பண் டகன்றன ராயினு முள்ளியிப்போ
தெள்ளாது வந்துன் கடையினின் றாரெம் மிறைவர்குற்றம்
கொள்ளா தெதிர்கொள்வ தேகுண மாவது கோமளமே.

இ - ள். நம்மிறைவர் தள்ளாத வளத்தையுடைய வயல்சூழ்ந்த தஞ்சைவாணன் தரியலர்போல உன்னை நினையாது முன்பு சென்றனராயினும், இப்போது நினைத்து இகழாது வந்து உன்வாயிலில் நின்றனர், அவர்செய்த குற்றத்தை மனத்திற்கொள்ளாமல் எதிர்கொள்வதே குணமாவது. எ - று.

தள்ளா - நீங்கா. உள்ளாது - நினையாது. பண்டு - முன்னம். உள்ளி - நினைந்து. கடை - கடைவாசல். கோமளம் - இளமையழகு. 'உன்னையுள்ளாது' எனவும் 'இப்போதுள்ளி' எனவும் இயையும். (௩௱௫)

தலைவனைத்தலைவி யெதிர்கொண்டுபணிதல்.

(இதுவெளிப்படை.)

மருவிற் பெருநல மன்னுவர் தாந்தஞ்சை வாணன்வெற்பர்
ஒருவிற் பசலை யுருக்குவர் தாமக் கூடலெவ்வர்
இருவிற் புருவ விளங்கொடி யேயெய்து மெய்தவில்லாத்
திருவிற் புனைநறுந் தாரவர் மார்பர் திருமுனின்றே.

இ - ள். இரண்டு விற்போன்ற புருவத்தையுடைய இளங்கொடியே! தஞ்சைவாணன்வெற்பர் நம்மைமருவினராயின் பேரழகு நிலைபெறுவதாம், அவர் நீங்கின் பசலைநிறமுருக்குவதாம், இத்தன்மையாகிய நமக்கு ஊடலெவ்

வாறு? விடுதலில்லாத திருவைப்போல் அணியப்பட்ட நறியதாரையணிந்த வரைபோன்ற மார்பர் திருமுன்னின்று பணிதும். எ - று.

நலம்-அழகு. ஒருவுதல்-நீங்குதல். எய்தும்-பணிதும். எய்தல்-விடுதல். இன் உருபு ஒப்புப்பொருண்மைக்கண்வந்தது. புனைதல் - அணிதல். திருமுன்-சந்நிதி வழக்கு, எய்தும் என்றது பணிதுமெனனும் பொருள்கொள்ளுமோவெனின், தேவர்கூறிய கடவுள்வாழ்த்தில் † "தேவாதிதேவனவன் சேவடி சேர்துமன்றே" என்பதனில் சேர்தும் என்பதற்கு வணங்குதும் என நச்சினார்க்கினியாருரையெழுதினார். சேர்தும் என்பதும் எய்தும் என்பதும் ஒருபொருட்கிளவியாதலால் எய்தும் என்பதற்குப் பணிதும் எனவே பொருள்கொள்க. (௩அ௬)

புணர்ச்சியின்மகிழ்தல்.

(இது வெளிப்படை)

மன்வாவர காம நெடுங்கடல வாணனறென மாறையன்றுள்

தொன்னலம வாரமுலை மததந் தழீஇததடந தோளிணையாம

பன்னக நாணிற கடைந்திதழ வாரதிரைப பட்டநன்னீர்

இன்னமிழ தாரந்திமை யோரமை யாவின்ப மெயதினமே.

இ - ள். தலைவர் காதலாகிய நெடுங்கடலில் வாணனறெனமாறையன்றுள அழகுபழகிய வாரமுலையாகிய மந்தரத்தைத்தழுவிய பெரிய தோளிணையாகிய பன்னகநாணினறகடைந்து, இதழினகண நெடியஅலையாலுண்டாகப் பட்ட நன்னீராகிய இனியவமுதத்தையார்ந்து இமையோரது தெவிட்டாத வின்பத்தை யெய்தினம். எ - று.

நலம்-அழகு தொல-பழமை மாறிபபொருள்கொள்க மந்தம்-மந்தரம். பன்னகம் - பாம்பு. திரை-அலை, அமையா-தெவிட்டா. கூற்று கவிக்கூற்று. களவிற்புணர்ச்சியெல்லாம் தலைவன்கூற்றாய் நிகழ்தலின் இப்புணர்ச்சி கவிக்கூற்றின தென்னையெனின், தலைவி நாணுடையளாதலால் தலைவி செயலின்றித் தலைவன் செயலாய் முடிதலின் தலைவன்கூற்றாய் நிகழ்ந்தது, கற்பியல் அவ்வாறன்றி இருவர்செயலுமொத்துநிகழ்தலின் இருவர்கூற்று ஒருவர்கண் கூறலாகாமையின் கவிக்கூற்றாய் நிகழ்ந்தவாறு காண்க. (௩அ௭)

வெள்ளணியணிந்துவிடுத்துழித்தலைமகன்வாயில்வேண்டல்.

வெள்ளணி .. .. .. வாயில்வேண்டல் எ - து. தலைவி புதல்வனைப்பயந்து நெய்யாடிய செய்திக்கு அடையாளமாகி வெள்ளாடை முதலியன வணிந்து சேடியைவிடுப்புழி அச்சேடியை வாயிலாகத் தலைவன் வேண்டிக்கூறல்.

---

† சிந்தாமணி, நாமகளிலம்பகம், வாழ்த்து, செ. க.

என்பாற் குறையை நினைந்து மறுத்தெதிர் கொள்ளவல்லே
தன்பாற் புலவி தணிசென்று நீதஞ்சை வாணன்வையம்
அன்பாற் பரவும் புகழுடை யானரு ளேயனையாய்
உன்பாற் புலவி யுற்றாளவண் வார்குழ லொண்ணுதலே.

இ - ள். வையம் அன்பாற்பரவும்புகழுடையானாகிய தஞ்சைவாணன் தருளைப்போல்வாய்! அழகுபொருந்திய வார்ந்தகுழலையுடையவொண்ணுதலாள் நின்னிடத்தில் புலவியையுற்றாள், ஆதலால், என்னிடத்தில் குறையை நினைந்து மறுத்தவண்ணம் எதிர்கொள்ள நீவிரைந்துசென்று அவளிடத்துப் புலவியை யாற்றச்செய்வாய். எ - று.

வல்-விரைவு *"செல்லாமையுண்டேலெனக்குரைமற்றுநின்-வல்வரவு வாழ்வார்க்குரை." என்பதனாலறிக. புலவி-ஊடல். வையம்-உலகு. பரவுதல்-துதித்தல். எண்ணுதல்-ஆகுபெயர். (௫௮௮)

### தலைவி நெய்யாடியதிகுளைசாற்றல்.

தலைவிநெய்யாடியதிகுளைசாற்றல் எ - து தலைவி புதல்வனைப்பயந்து நெய்யாடியதனைப்பாங்கி தலைவற்குச்சொல்லல்

---

மலர்புரை யோகொண்ட வாட்கண்ணங் கோமங்கை வாணன்றஞ்சைப்
பலர்புகழ் பாலற் பயந்துநெய் யாடினள் பாங்கெவர்க்கும் [ப
மலர்புரை நீடொளி யாடியுட் பாவையன் னாட்குள்ளன்
புலர்புன லூரவென் னேதிரு வுள்ளமிப் போதுனக்கே.

இ - ள். மலரை யொப்பவழகுகொண்ட ஒளிபொருந்திய கண்ணையுடைய எம்மரசாகிய மங்கை வாணன்றஞ்சையிற் பலரும்புகழப்பட்ட பாலனைப்பெற்று நெய்யாடினள், பாங்கியவெவர்க்கும் மலரையொப்பாய நீண்டவொளியையுடைய கண்ணாடியுட்பாவைபோன்றாளிடத்து உள்ளன்பு புலர்ந்தபுனலூர! இப்போதுனக்குத் திருவுள்ள மியாதோ! எ - று.

பலர்புகழ் என்புழிச் சிறப்புமை விகாரத்தாற்றொக்கது. பயந்து ஈன்று. பாங்கு-பாங்கியர் "பாங்கிலென்றமியாளிடந்தலைப்படலும்," என்பதனானுணர்க. ஆடி - கண்ணாடி. அன்னாட்கு என்புழி வேற்றுமைமயக்கம். உளர் - உள்ளன்பு, ஓகாரம் - ஐயம், என்னை,—பரத்தையர் சேரிக்குச் செல்லத் திருவுள்ளமோ, ஈண்டுறையத் திருவுள்ளமோவென ஐயந்தருதலானெனக்கொள்க. (௫௮௯)

---

* திருக்குறள், செ ௧௧௫௧

### தலைவன்றன்மனத்துவகைகூறல்.

(இது வெளிப்படை.)

மையணி வேல்விழி வாணுதல் கூர்ந்தது வாணன்றஞ்சைக்
கொய்யணி நாண்மலர்க் கொம்பரன் னாள்குழ விப்பயந்து
செய்யணி மேனியி லையவி பூண்ட நிலையறிந்தே
கையணி வால்வளை யைக்கண்ட நாளினுங் காதன்மையே.

இ-ள். மையணி வேல்போன்ற விழியையும் வாணுதலையு முடையாய்! வாணன்றஞ்சையிற் கொய்யப்பட்ட அழகாகிய நாண்மலரையுடைய கொம்புபோன்றவள் புதல்வனைப்பெற்று செய்யணிந்த மேனியில் வெண் சிறுகடுகுபூண்ட நிலைமையறிந்து கையிலணிந்த ஒள்ளியவளையினையுடை யாளைக்கண்ட நாளினும் காதற்றன்மைமிகுந்தது எ-று.

வேல்விழி வாணுதல்-அன்மொழித்தொகை. கூர்தல்-மிகுதல். அணி-அழகு. நாண்மலர்-முறுக்கவிழ்மலர். குழவி-மகவு. *"குழவியுமகவுமா யிரண்டலவை-கிழவவல்லமக்கட்கண்ணே." என்பதனானுணர்க. பயந்து-பெற்று. ஐயவி-வெண்சிறுகடுகு, †"நெய்யோடையவியப்பியைதுணர்த்து" என்பதனாலுணர்க, குழவி என்புழி இரண்டனுருபுதொக்கது. வால்வளை-ஆகுபெயர். காதன்மை-ஆசைத்தன்மை. வாணுதல்-அண்மைவிளி. (௩௩௦)

### தலைவிக்கவன்வரல்பாங்கிசாற்றல்

(இது வெளிப்படை)

ஏரார் புதல்வன் பிறந்தனன் வாழிய வென்னுமுன்னே
வாரார் வளமனை வந்துநின் றார்கங்குல் வாணன்றஞ்சை
நீராவி நீலநெடுங்கண் மின்னே நின்னை நீப்பதல்லால்
தேரார் தொழிற்குவ ரோபெரி யோர்தஞ் சிறுவனையே

இ-ள் நெடுங்காலம்வாழ்க! அழகார்ந்த புதல்வன் பிறந்தனனென்று சொல்வதற்குமுன்னே தருந்தகுதியில்லார் கங்குலிடத்து வளவிய நம் மனையில்வந்துநின்றனர், வாணன்றஞ்சையில் நீர்பொருந்திய வாவியிற் பூந்த நீலம்போன்ற நெடியகண்ணையுடைய மின்னே! நின்னைப் பிரிவதே யல்லது பெரியார் தஞ்சிறுவனைத் தோந்தறியாது விடுவரோ. எ-று

ஏர்-அழகு வாழிய-நெடுங்காலம்பற்றியசொல். என்னை,— ‡"வாழிய வென்னுஞ்சேயெனகிளவி" என்பதனானுணர்க. ஆவி-வாவி. மின்-ஆகு பெயர் நீத்தல்-பிரிதல். தோதல்-பிறந்தகாலத்தை யாராய்ந்தறிதல். (௩௩௧)

---

* தொல். பொருள். மரபியல். சூ. ௨௫
† திருமுருகாற்றுப்படை, பழமுதிர்சோலை, வரி ௨௨௮.
‡ தொல். எழு. உயிர்மயங்கியல், சூ. ௩௦.

### தலைவியுணர்ந்துதலைவனோடுபுலத்தல்.

(இது வெளிப்படை.)

வயங்கே ழுலகும் புரக்கின்ற வாணன்றென் மாறையன்ன
நயங்கேழ் பெருவள நல்குநல் லூர நயந்துநண்ணி !
முயங்கேல் சிறுவற் பயந்தவென் மேனியின் முத்துவடந்
தயங்கே ரகமுழு துமபழு தாமது தானினக்கே.

இ - ள் விளங்கப்பட்ட ஏழுலகத்தையுங் காக்கின்ற வாணன் தென்மாறையன்ன இன்பமும் ஒளியும் பெரியவளமும் நல்கப்பட்ட நல்லூரையுடையானே! சிறுவனைப்பயந்த என்மேனியைவிரும்பிப் பொருந்தி முயங்கற்க, முயங்கியது தான் நினக்கின்பமாகிய பரத்தையர் முலைமேலணிந்த முத்துவடந் தயங்கப்பட்ட அழகுபொருந்திய நெஞ்சுமுழுதும் பழுதாம் எ - று

வயங்கல்-விளங்கல். புரத்தல்-காத்தல் நயம்-இன்பம் கேழ்-ஒளி. தயங்கல்-விளங்கல். ஏர்-அழகு. அகம்-நெஞ்சு 'மேனிநயந்து' என இயையும் ()

### தலைவிபாணனைமறுத்தல்.

(இது வெளிப்படை)

தலையா கியதன்மை யூரற்கு வாணன் றமிழ்த்தஞ்சைசூழ்
மலையா கியமதில் வையம் புனைநெட் டெங்கை மானபடுக்கும்
கலையாகு நின்னிசைக் கண்ணிகொண் டேதிரி கன்றுதின்னிப்
புலையா கடக்கவெம் மிற்போக போக புறங்கடையே.

இ - ள் தலைமைத் தன்மையாகிய ஊரற்கு வாணனது தமிழ்த்தஞ்சையைச் சூழ்ந்த மலையாகிய மதிலையுடைய வையைசூழ்ந்த நாட்டின் எங்கையாகிய மானைச்சிக்கவைக்கும் மானுக்கினமாகிய கலைபோன்ற நின்னிசையாகிய கண்ணிகொண்டு திரியப்பட்ட கன்றுதின்னியென்னும் புலையா எம்மில்லினின்று கடக்கப் புறங்கடையிற்போக போகவென்று கல்லெறிந்தனள். எ - று.

எங்கை-என்தங்கை. கண்ணி-மானபடுக்குங்கண்ணி கலை-இசைநூல். கன்றுதின்னி இகழ்ச்சிப்பெயர். 'போகபோக' என்பது விரைவுபற்றி வந்த அடுக்கு மேற்செய்யுளில் கல்லெறிந்தாரென்று பாணன் தலைவியொடு கூறியவாறு, இச்செய்யுளில் கல்லெறிந்தனள் என்பது வருவிக்கப்பட்டது.

### வாயில்மறுக்கப்பட்டபாணன்கூறல்

வாயில்மறுக்கப்பட்டபாணன்கூறல் எ - து. கல்லெறிந்த தலைவியுடன் பாணன் கூறல்.

---

னக்கே தருகின் னெடும்புன லூரனு நீயுமவன்
னக்கே தருவை தமிழ்த்தஞ்சை வாணன றடங்கிரிசூழ்
னக்கே கயமன்ன நின்னடி போற்றிப் புகன்றகன்றும
னகக்கே தருமிகை யாவெம பிராட்டி யெறிந்தகலலே.

இ - ள் எமபிராட்டி! நின்னுடையகணவனாகிய நெடும்புனலூரனும
னக்கேதருவன், நீயும அவன்றனக்கேதருவை, யானசெயதகுற்றத்தால நீ
யெறிந்தகல தமிழ்த்தஞ்சை வாணனது விசாலமாகிய மலைசூழ்ந்த புனத்தி
லிருக்கும மயிலபோன்ற நின்னுடைய அடியைத்துதித்துத் தலைவன வர
வைக்கூறிய அதனால மனங்கன்றும எனக்கேதரும். எ - று

ஏகாரம், மூன்றும பிரிநிலை, ஆடவரிலும மடவாரிலும் பாணரிலும
பிரித்து வாங்குதலின். தடங்கிரி - பெரியமலை. கேகயம - மயில. கன்றல-
வெமபுதல். மிகை - குற்றம. (௩௬௪)

விறலிவாயின்மறுத்தல்.

(இது வெளிப்படை.)

வணபுன லூரவையை சூழதஞ்சை வாணனை வாழ்த்தலாபோல
கணபுன லூருமென காதலகண டேகின கடைத்தலைக்கே
தணபுன லூரனவந தானென்று சாற்றினை தானமுறப
மணபுன லூரகளெல லாமபாடி யேற்றுணணும பாணமகளே.

இ - ள் ஈவுபெறப புனலசூழந்த ஊரகடோறும பணணைபபாடி இரந
துண்ணும் பாணமகளே! வளவியபுனலசெலலும வையையாறுசூழந்த தஞ
சைவாணனை வாழ்த்தலாபோல கணணிடத்துப புனலூரநதுவரும என்காத
லைககணடு நின்கடைத்தலையினகண தணணியபுனலூரன வநதனனென்று
சொல்லினை, இசசொறகு மனமபொறுத்தேன சொலலாய. எ - று.

ஊரதல - செலலுதல. உளாதல பெருகுதல. ஊரன்-மருதநிலத்துத்
தலைவன். தானம-ஈவு. (௩௬௫)

விருந்தொடுவந்துழிப்பொறுத்தல்கண்டிறையோன்மகிழ்தல்.

(இது வெளிப்படை.)

புரவே யெதிர்ந்த நமக்கு விருந்தினறு போலவென்றும்
வரவே புணாநதம மாதவம வாழிய வாணன்றஞ்சைக்
குரவேய் கருமுகிற் கொந்தள பாரங் குருமபைக்கொங்கைத்
அரவேய் நுடங்கிடை யாள்விழி யூர்சிவப பாறறுதற்கே.

இ - ள் வாணன்தஞ்சையிலிருக்கும் குரவலாமாலைசூடிய கருமுகில்
போன்ற அளகபாரத்தையும், குருமபைபோன்ற கொங்கைப்பாரத்தையும

தாங்கவாற்றாதாள்போல் ஒசியப்பட்ட இடையானது விழியின்கண் ஊரப்பட்ட சிவப்பாற்றுதற்கு நம்மைக்காக்க எதிராய்வந்த விருந்து இன்றுவரப் புணர்ந்த நமது மாதவம் எஞ்ஞான்றும் வாழ்க. எ - று.

'இச்சொற்குமனம்பொறுத்தேன்சொல்லாய்' என்றது வருவிக்கப்பட்டது. புரக்க-காக்க. நமக்கு என்புழி வேற்றுமைமயக்கம். போல்-அசைநிலை. *"ஒப்பில்போலியு மப்பொருட்டாகும்." என்பதனானுணர்க. தூவு - ஆகுபெயர். கொந்தளபாரம் - அளகபாரம். நுடங்கல் - ஒசிதல். 'மாதவமென்றும் வாழிய' என இயையும். (௩௬௫)

விருந்துகண்டொளித்தவூடல்வெளிப்படநோக்கிச்
சீறேலென்றவள்சீறடிதொழுதல்.

(இது வெளிப்படை,)

தெரியோர் பொருட்டன்று தேர்வின்றி யூடல் செயிர்த்தவர்க்குக்
கரியோர் தெளித்தென்ன காரணங் காட்டுவர் கானுண்டுதேன்
வரியோர் தொடைப்புயன் வாணன்றென் மாறை மலர்த்திருவே
பெரியோர் பொறுப்பரன் றேசிறி யோர்கள் பிழைத்தனவே.

இ - ள். மணத்தையுண்டு வண்டுகள் பண்ணைவாசிக்கும் மாலையையணிந்த புயத்தையுடையவாணன் தென்மாறைநாட்டிலிருக்குந் திருவையொப்பாய்! ஆராய்ச்சியின்றி ஊடுதலொருபொருளையுடைத்தன்று, தெரிவாயாக, கோபித்தவர்க்கால் ஆற்றுதலன்றிச் சான்றுடையோர் தெளிவித்து என்னைக் காரணங்காட்டுவர், என்னிடத்துக் குற்றமுண்டாயினுஞ் சிறியோர்கள் பிழைத்தன செய்தக்கால் பெரியோர்கள் பொறுப்பர், ஆதலால் யான்றொழுகின்றேன், என்பிழையைப்பொறுத்தருளவேண்டும். எ - று.

'ஊடலோர்பொருட்டன்றுதேர்' எனமாறுக. செயிர்த்தவர் - கோபித்தவர். கரியோர் - சான்றோர். கான் - மணம். தேன் - வண்டு. வரி - பண். ஓதல் - ஈண்டு வாசித்தல். தொடை - மாலை. அன்றும், ஓகாரமும் அசைநிலை. சீறடிதொழலென்னுங்கிளவிப்பொருளானும், வருஞ்செய்யுளில் உன்பாதமிறைஞ்சுதலென்று தலைவிகூறுதலானும் 'தொழுகின்றேன்' என்னுஞ் சொல் வருவிக்கப்பட்டது. (௩௬௭)

இஃதெங்கையர்காணின்நன்றன்றென்றல்

இஃதெங்கையர்காணின்நன்றன்றென்றல் எ - து எங்கையராகிய பரத்தைமார்காணின் நீர்செய்தபணிவு குற்றமாய்முடியுமென்றல்.

---

* தொல்காப்பியம், சொல், இடையியல், சூ. ௩0

எண்போன நெஞ்சமு நீருமென் பாத மிறைஞ்சுதனுங்
கணபோலு மெங்கையர் காணினனே றுகயன மாதிரத்துத்
திண்போ தகநதொறுந திட்டிய வாணன செழுநதஞ்சைசூழ்
வண்போ தளவிய நீரவையை நாட்டுறை மனனவரே.

இ - ள் கயறகொடியைத திக்குகளிலிருககுந் திண்ணிய யானைக டோறு மெழுதிய வாணன செழுமையையுடைய தஞசையைசசூழ்ந்த வளவியபோது கலந்துவரபபட்ட நீரையுடைய வைகைநாட்டிலுறையும் மன்னவரே ! என்னை எணணுதலபோன நெஞசமும நீரும என்பாதம வணஙகுதலை நும்ககுக் கணணையொககும எனககுந தஙகையராகிய மாந தையா காணினன்றோ ? எ - று

எண் - எணணுதல். இறைஞசுதல - வணஙகுதல். எஙகையா - என தங்கைமாா நன்றே என்புழி ஓகாரம எதிாமறை. கயல் - ஆகுபெயா மாதிரம-திககு. போதகம்-யானை. தீட்டல்-எழுதல அளவுதல-கலததல் ()

அங்கவர்யாரையுமறியேனென்றல்.

(இது வெளிபபடை )

மன்னும புலவியை மாறறியுந தேறறியும வலலவணணம
இன்னுந தெளிநதிலே னெயனனேயென னேயெனசெய கேனிதறகு
முன்னம படிநது முழுகுநன னீாககஙகை முன்னுறையும
அன்னம படியுஙகோ னோவுவ ராழியி னாரணஙகே.

[இது பிறசேய்யுட்கவி ]

காமக்கிழத்தியைக்கண்டமைபகர்தல்.

(இது வெளிபபடை.)

போயே தெருவிற் றனிவிளை யாடும பூதலவற்புலல
நீயே திலையலலை நின்மக னேயிவ னீயுமிவன்
தாயே வருகெனச் சேயனன வாணன றமிழ்த்தஞ்சைமான்
ஏயே யெனநிற்ற லானறிந தேனன்னை யெஙகையெனறே.

இ - ள். முருகவேளையொதத வாணன தமிழத்தஞசையிலிருககும மான்போன்ற பரத்தையானவள் தெருவிறபோயத தனியேவிளையாடும புதல்வனைததழுவியெடுத்தலைக்கண்டு யான நீ அயலாளலலை, நினககுமகனே இவன், நீயும் அவன்தாயே, வருகவென்றழைகக, அவள் அமமொழிகேட்டு நாணத்தினால் ஏயேயெனநிறறலான் அவள்தன்னை எங்கையென்றறிந் தேன். எ-று.

மகிழ்க என்பது முன்னிலை எசசம். புதல்வன் - மகன், புல்லல்-தழு வல். ஏதிலை - அயலார். சேய் - முருகன். ஏயே என்பது நாணததின்வந்த அடுக்குமொழி. எங்கை - எனககுத்தங்கை. (௫00)

### தலைவியைப்பாங்கிதணித்தல்

(இது வெளிப்படை)

மாவா ரணமன்ன வாணன்றென் மாறைநம மன்னர்நின்னைப்
பாவாய் பணியவும் பார்க்கிலை நீயிடப் பாகமங்கை
தாவாத சங்கரன் கங்கைதன் கொங்கை தழீஇயிதழிப்
பூவார் சடைமுடி மேல்வைத்த போதும் பொறுத்தனளே.

இ - ள் பாவைபோன்றவளே! பெரியயானையையொத்த வாணன்றென் மாறைநாட்டில் நம்மன்னர் நின்னைப்பணிதலைச்செய்யவும் நீ பார்க்கிலை, சங்கரன் இடப்பாகத்தைநீங்காத அம்பிகை சங்கரன் கங்கைதன் கொங்கையைத்தழுவிக் கொன்றைப்பூவார்ந்த சடைமுடியின்மேல் வைத்தபோதும் பொறுத்தனள், இது கேட்டிலையோ? எ - று

மங்கை - அம்பிகை தாவாத - நீங்காத. இதழி - கொன்றை. உம்மை சிறப்பு. (௪௦௧)

### தலைமகள்புலவிதணியாளாகத்தலைமகனூடல்.

(இது வெளிப்படை)

தழங்கார் புனல்வையை சூழ்தஞ்சை வாணன்றன் தருள்போல்
பழங்காத லெண்ணலெ னைதநெஞ் சேயிவள் பண்டுபைம்பொற்
கழங்கா டிடமுங் கடிமலர்க் காவுங் கடந்துபுள்ளும்
வழங்கா வழிநமக் கோர்துணை யாய்வந்த மானல்லளே.

இ - ள் துன்பமுற்ற என்னெஞ்சே! இவள்முன்பு செம்பொன்னாற் செய்த கழங்காடப்பட்ட இடமும், விளையாடப்பட்ட மணந்தொடுகூடிய மலர்ச்சோலையும் விட்டுநீங்கிப் புட்களும் இயங்காத பாலைநிலத்தின் வழியில் நமக்கொரு துணையாய்வந்த மான்போன்றவளல்லள், நிறைந்தொலிக்கும் புனலையுடைய வையைபாருசூழ்ந்த தஞ்சைவாணன் தன்னுடைய அருள் போன்ற தலைவி பழங்காதலை எண்ணவேண்டாம் எ - று

'ஆர்தழங்குபுனல்' என இயையும். தழங்குபுனல் வினைத்தொகை. பைதல் - துன்பம் கடி - மணம். கா - சோலை கடத்தல் - விட்டு நீங்கல். வழங்கல் - உலாவல். மான்-ஆகுபெயர். (௪௦௨)

### பாங்கிஅன்பிலைகொடியையெனத்தலைவனையிகழ்தல்

பாங்கிஅன்பிலை ... .. ... யிகழ்தல் எ - து. பாங்கிதலைவனை யன்பிலாய் கொடியாயென இகழ்ந்துகூறல்.

மைந்நாண் மலர்த்தொடை வாணன்றென் மாறையெம மன்னவுவந்
தந்நாண் முயங்கி யமிழ்தென வாரந்தனி ரார்வமுற்று
முந்நாண் மதிவட்ட மென்முலை மாதை முனிந்துநஞ்சென்
றிந்நாண் மிகவுவாத் தீர்புல வாநிற்றி ரெங்களையே.

இ - ள். கருநிறம்பொருந்திய முறுக்கவிழ் மலர்மாலையணிந்த வாணன் றென்மாறை நாட்டிலிருக்கும் எமக்கு மன்னரே! அந்நாள் மூன்றாம் பூரணைநாள் மதியினது வட்டம்போன்ற மெல்லிய முலைவட்டத்தையுடைய மாதை விருப்பமுற்றுப்புணர்ந்து மகிழ்ந்து அமிழ்தென இன்பத்தை நுகர்ந்தீர், இந்நாள் நஞ்சென்று முனிந்து மிகவும்வெறுத்து எங்களோடுபுலவாநின்றீர்.

மைந்நாண்மலர் - குவளைமலர். மன்ன-அண்மைவிளி. உவந்து-மகிழ்ந்து. முயங்கி - புணர்ந்து. ஆர்தல் - நுகர்தல். ஆர்வம் - விருப்பம். *நந்தை, பத்திரை, சயை, இருத்தை, பூரணையென முதற்றிதிதொடுத்துப் பஞ்சமிவரைக்கும் முதலாம்வட்டம், சட்டிதொடுத்துத் தசமிவரைக்கும் இரண்டாம் வட்டம், ஏகாதசிதொடுத்துப் பூரணைவரைக்கும் மூன்றாம்வட்டமாதலின் 'முந்நாண்மதிவட்டம்' என்றார். உவாத்தல்-வெறுத்தல். புலத்தல்-ஊடுதல். எங்களை என்புழி வேற்றுமைமயக்கம். 'அந்நாண்முன்னுள' எனவும், 'ஆர்வமுற்றுமுயங்கியுவந்தமுது' எனவும், 'இந்நாணஞ்சென்று முனிந்துமிகவும்' எனவும், 'எங்களைப்புலவாநிற்றிர்' எனவும் இயையும். (ச0ங)

ஆயிழையை நீத்துமாற்றமையும்வாயிலாகவரவெதிர்கோடல்

ஆயிழை .. . வெதிர்கோடல் எ - து. தலைவன்பரத்தையர் சேரிக்குத் தேரின்மேலேறிப்போம்போது தெரிந்தெடுத்த அணியையணிந்த புதல்வன் குறுக்காகநிற்க, அப்புதல்வனைத்தழுவி யெடுத்துக்கொண்டு தலைவன் ஆற்றாமையுடன் வந்துழி, தலைவியைப் புதல்வனுந் தலைவனாற்றாமையுந் தூதாக எதிர்கொள்ளுந்தல்.

---

வெள்ளம் பரந்தன்ன வேட்கைசென் றாலு மிகப்பெரியோர்
உள்ளஞ் சிறியவர் மேற்செல வாரொள்ளிர் கோமளஞ்செய்
வள்ளங் கமல மலர்த்தஞ்சை வாணன்றென் மாறையன்னப்
புள்ளம் புனல்வய லூரபுன் காமம் புகல்வதன்றே.

இ - ள். கடல்பரந்துவந்தாற்போலும் வேட்கைசெல்லினும் மிகவும் பெரியராயினோர் உள்ளஞ்சிறியவராகிய பரத்தையர்பால் செல்லவாரோசெல

---

* நந்தை - க, சு, கக: பத்திரை - உ, எ, கஉ: சயை - ங, அ, கங: இருத்தை - ச, கூ, கச. பூரணை - ரு, க0, கரு — என மதிவட்டங்கொள்ளப்படுவதனை பிங்கலந்தையில் வானவர்வகைத்தொகுதியுட்காண்க.

லார், விளங்காநின்ற அழகாறசெய்த கிண்ணம்போன்ற கமலமலரில் தஞ் சைவாணன் தெனமாறையனன புளளிருககும அழகிய புனலையுடைய வயலூா புலவியகாமததை ஒருபொருளாயச சொல்வதனறு எ - று.

எனவே,—நீ பரததையா சேரிககுபபோன தனமையையலலை என்ற வாறாயிறறு. வெள்ளம்-கடல. "கடலனன காமமுழநது" எனறாபிறரும். உள்ளஞ்சிறியவா-பரததையா ஓகாரம்-எதிாமறை கோமளம் அழகு. வள்ளம்-கிண்ணம. மலர் எனபுழி-ஏழாமவேறறுமைததொகை. ஆம - அழகு. புகல்வது - சொலவது. தாமரைமலரில அனனபபுளளிருக்கும, ஒழிந்த பூவிலஇராதெனபபொருள்கொணடவதனன, தலைவன தனனிடததலலது பரததையாபால செல்வானலல னெனபதாக உளளுறையுவமதோன்றிய வாறுணாக. வளளம - கமலமலா. 'அனனபபுள்ளமபுனல' எனக்கூட்டுக ()

மணந்தவன்போயபின்வந்தபாங்கியோடிணங்கிய

மைந்தனையினிதிற்புகழ்தல்.

(இது வெளிபபடை.)

இருமையி லேயும பயனகளெல லாநதனனை யினறநமக்
கொருமையி லேவந துறறததைகந தானமைநத ஞெணசுடர்போல்
வருமயி லேகொணடு யாதடிந தானனன வாணனறஞ்சைத
திருமயி லேயனை யாயபுன லூரனைந தேருடனே

இ - ள். ஒளளிய ஞாயிறுபோல ஒயபுசசொலலவரும வேலகொண்டு மாமரமாகநினற சூரனைவெட்டிய முருகவேளபோனற வாணன்தஞ்சை நகரிலிருககுமஅழகியமயிலபோனறவளே! மைநதன இமமை மறுமைகளில தருமபயனகளையெலலாந தனனைப்பெறற நமககு ஒருமையாகிய இப்பிறப்பிலேவநது பொருந்தி பரததையா சேரிககுமபோம புனலூரனைததகைந்து மனைககழைததுக கொணடுவநதனன எ - று

இருமை - இமமை, மறுமை ஒருமை-இபபிறபபு. உறுதல-பொருநதுதல. சுடா-ஞாயிறு. அயில - வேல. ஏகாரம - அசைநிலை தடிதல-வெட்டுதல. † "சூாமுதறடிநத சுடரிலைநெடுவேல" எனபதனானுணாக. 'மைந்தனிருமையிலே' எனவும, 'வநதுறறபுனலூரனைந தேருடனே தகைநதானை' எனவுமமாறுக (௪௰௫)

தலைவிதலைவனைப்புகழ்தல்

(இது வெளிபபடை.)

கொணடாணிற் றுனனிய கேளிமற றிலலைக குறிப்பினெனறு
தணடா தவாசொனன சாலபுகண டேன்றல மேழபுரககும
வணடார் மலர்ப்புயன் வாணனறென மாறை மகிழநாமுன்னுள்
உண்டாகியபழங் கேண்மையிந நாளு மொழிநதிலரோ.

† திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம், வரி. ௪௬.

இ - ள். தலைமேன்மழையுங் காக்கும் வண்டார்ந்த மாலையணிந்த புயத்தையுடைய வாணனது தென்மாறையிலிருக்குந் தலைவா! முன்னுண்டாகிய பழைய நட்பு இந்நாள்வரைக்கும் ஒழிந்திலா, ஆதலால் கருதுமிடத்துக்கண் வனினும் அஞ்சித்தான் கேளிரில்லையென்று அறிவில் நீங்காத பெரியோர் சொன்ன மாட்சிமையை இன்றுகண்டேன் எ - று.

பாங்கி முன்னிலையெச்சம். கொண்டான் - கணவன். உடலு முயிரு நெஞ்சு மன்புமொன்றாய்க் கலந்ததன்மை தந்தைதனையர்முதலாயினோர்க் கில்லையால் * "கொண்டானிற்றுன்னிய கேளிர்பிறரில்லை" என்று கூறினு ளென்றுணர்க. துன்னுதல் - கிட்டுதல். கேளிர் - சுற்றத்தார். மற்று - அசை. குறித்தல் - கருதல். தண்டாதவர் - நீங்காதவர். சால்பு - மாட்சிமை. மலர் - ஆகுபெயர். மகிழ்நர் - கணவர். கேண்மை - நட்பு. (௩௦௬)

பாங்கிமனைவியைப்புகழ்தல்.

(இது வெளிப்படை)

சிறந்தார் புகழ்தரு தீம்புன லூரன்செய் தீமையெல்லாம்
மறந்தார்வ மெய்தி வணங்குத லாலிவள் வாணன்றஞ்சை
திறந்தா ரகையன்ன முத்திலம் போலு நெடுங்குலத்திற்
பிறந்தார் நிறைந்தகற் போருவடி வேபெற்ற பெற்றியளே

இ - ள். இத்தலைவி மிக்காயினோர்புகழ்தரும் இனிமையாகிய புனலூரன்செய்த தீமையெல்லாம் மறந்து விருப்பமுற்று வணங்குந்தன்மையளென்று கருதாது வணங்குதலான் வாணன்றஞ்சை நகரின்கண் ஒளியின் தாரகையொத்த முத்துப்போல உயர்குலத்திற்பிறந்த மடவாருடைய நிறைந்த கற்பிலக்கணமெல்லாம் ஓருருவாகப்பெற்ற பெற்றியள். எ - று.

சிறந்தார் - மிக்கோர். †"உலகமுவப்பவலனேர்புதிரிதரு," ‡"பகலகான் றெழுதரு" என்பனபோல 'புகழ்தரு' என்பது ஓர்சொல். ஆர்வம் - விருப்பம். திறம் - ஒளி. நெடுங்குலம் - உயர்குலம், நெடுமால் என்பதுபோல. (௩௦௭)

இச்சொன்ன கிளவிகளெல்லாம் வாயில்வேண்டல்முதல நான்கு வகைக்கு மாகுமாறு அறிந்துகொள்க.

பரத்தையிற்பிரிவு முற்றிற்று.

---

* நான்மணிக்கடிகை, செ. ௫௭.
† திருமுருகாற்றுப்படை, திருப்பரங்குன்றம், வரி. க.
‡ பெரும்பாணாற்றுப்படை, வரி. உ.

# ஓதற்பிரிவு.

ஓதற்பிரிவு எ - து. தலைவன் கலவிகாரணமாகப்பிரிதல். தலைமகளை யெய்தியிருந்தே இவனோதுவான்பிரிவானேனெனின், முன்ஞானமில்லாதா னாகவே ஞானத்தின்வழியது ஒழுக்கமாகலானும், ஒழுக்கத்தின் வழித்துக் குலமாகலானும, இவையெல்லாங்குறைவீடாமே யெனினஆகாது, கறபான் பிரியுமெனபதனறு, பணடே குரவாகளாறகறபிககப்பட்டுக் கற்றான் அறம் பொருளினப வீடுபேறுகள் நுதலிய நூலகளெலலாம் இனிப்பாதேயதது அவை வல்லோருளரொனிற காணபலென்று அவைவலலாாக ளுளவழிச் சென்று தனஞானம் மேறபடுதது அவா ஞானங கீழ்ப்படுத்தறகு மெனக் கொள்க.

**கல்விக்குப்பிரிவுதலைமகனுணர்ந்ததோழி தலைமகட்குணர்த்தல்.**

(இது வெளிப்படை)

மல்வித் தகங்கொண்ட தோளுடை யானறஞ்சை வாணன்றொல்சீர்
கலவித தகன்புவி நாவிலவைத தோன்வையை நாடனையாய்
கலவித் தடங்கட னீந்திய காதலா கற்றவாமுன்
சொல்வித்த வெனறழ லாாசுரம போகத துணிந்தனரோ.

இ - ள். மறறொழிலில வல்லபங்கொண்ட தோளுடையானாகிய தஞசைவாணனது பழகிய புகழாகிய நல்லவிதையினை அகனற புவியினுள் ளோா நாவில பயிராக வைததவனது வைகைநாடு போனறவளே ! கல்வி யாகிய பெரியகடலை நீந்திக கரைகணட தலைவா திசைகளிற கற்றவர்முன் தாஙகறற கலவியானுணடாகிய கீர்த்தியாகிய வித்தைவிதைக்க என்றெ ணணி அழலாாநத சுரததினகட்போகத துணிநதனா. எ - று.

மல்-மற்றொழில். விததகம-வல்லபம். விதது-விதை. புவி-ஆகுபெயர். தடங்கடல-பெரியகடல். சொல்-கீாததி. விதத-விதைவிக்க. (௨௦௮)

**தலைமகள்கார்ப்பருவங்கண்டுபுலம்பல்.**

(இது வெளிப்படை.)

யாணர்க் குழன்மொழி யெனசெய்கு வேன்கல்வி யெல்லையெல்லாம்
காணப் பிரிந்தவர் காண்கில ராற்கடன் மேய்நதுதஞ்சை
வாணாக் கெதிர்த்தவா மங்கையா போலுமென் வல்லுயிரின்
உளணற்ப மென்னவெண் ணுவரு மேகமுருமுடனே.

இ - ள். அழகினையுடைய குழலிசைபோன்ற மொழியாய் ! தஞ்சை வாணனுக்குஎதிாகியபகைவா மனைவியர்போலும் துன்பமுழக்கிருக்கின்ற

என்னுடைய வலியவுயிரை இனியவுணவாக நுகர்தலெளிதெனவெண்ணிக் கடல்நீரையுட்கொண்டு இடியுடனே மேகம்வாராநின்றது ; இதனைக் கல்வி யெல்லாம்காணப்பிரிந்ததலைவர் காண்கிலர், ஆதலால் யானென்செய்கேன்!

யாணர்-அழகு. செய்யா என்னும் வினையெச்சம் செய்து என்னும் இறந்த வாய்பாடாகப் பொருள்கொள்க. உருமு - இடி. (௪0௯)

தலைமகளைப்பாங்கியாற்றுவித்தல்.

(இது வெளிப்படை.)

காதற் கயமபடிக தனனொடு காமக் கனிநுகரா

தோதற் ககன்ற வுணர்வுடை யோருடை நீருலகம

மாதர்க் கமைந்தருள் வாணன்றென மாறை வரக்கடவார்

ஆதற் கணங்கனை யாய்புய லேது வறிநதருளே.

இ-ள். அணங்கனையாய்! காதலாகியகுளததிறபடிந்து உன்னொடுகூடிக் காமமாகிய கனியைநுகராது ஓதற்பிரிவாகப பிரிநத அறிவுடையோர் பூமி தேவியார்க்குடையோனாகி யமைந்தருளப்பட்ட வாணன தென்மாறையில வரக்கடவராதற்கு வந்தபுயல் நிமித்த மென்றறிந்தருள்வாய். எ - று.

கயம்-குளம். புயல்-மேகம். ஏது-நிமித்தம். (௪௧0)

ஓதற்பிரிவு முற்றிற்று.

---

# காவற்பிரிவு.

காவற்பிரிவு எ-து.நாடுகாத்தற்குப்பிரியும்பிரிவு இவன்நாட்டைப்பிறர் புகுந்தலைதலுங் கைக் கொள்வதுஞ் செய்யப்பட்டவை நீக்குதற்குப்பிரிய ஆண்மையும்மதிப்பும் இலனாமெனின,நாட்டைநலிவாருளராகநலிவுகாத்தற குப் பிரியுமென்பதன்று ; காட்டகத்துநின்று நகரத்துவநது முறைசெய்ய மாட்டாதமூத்தோரும் பெண்டிரும் இருகைமுடவரும் கூனரும் குருடரும் பிணியுடையாரு,மென இத்தொடக்கத்தார் முறைக்கருமங்கேட்டுத திருத் துதல் பொருட்டாகவும், வளனில்வழி வளந்தோற்றுவிததற்கும், " தேவர் குலமே சாலையம்பலமே " என்றித்தொடக்கத் தனவற்றை ஆராய்தற்கும், மதிருடி யோம்புதற்கும் பிரியுமென்பது. அல்லதூஉம், பிறந்தவுயிர்தாயைக் கண்டு இன்புறுவதுபோலத தன்னாற் காக்கப்படும் உயிர்வாழ்சாதிகள் தன்னைக்கண்டு இன்புறுதலின் தான் அவர்கட்குத் தன்னுருவுகாட்டுதற் பொருட்டாகவும் பிரியுமெனக்கொள்க.

தோழிதலைவன்காவற்பிரிவுணர்த்தல்.

(இது வெளிப்படை.)

விண்காவல் கொண்ட திலோத்தமை தான்முதன் மெல்லியலார்
கண்காவல் கொண்டருள் காரிகை காவலர் கார்க்கடல்சூழ்
மண்காவல் கொண்ட மனத்தின ராயினர் வாணன்றஞ்சைப்
பண்காவல் கொண்ட மொழிச்செய்ய வாயிதழ்ப் பைங்கிளியே.

இ - ள். விண்ணுலகப் பதவிக்கு உலகில்தவஞ்செய்து ஒருவர்வாராத படிக்கு இடையூறு செய்துகாவலகொண்ட திலோத்தமை முதலாகிய மடவார் கண்களை அயலில்நோக்காமற காவலாய்க்கொண்டருளபட்ட அழகையும், வாணன் தஞ்சைநாட்டில பண்ணைத தன்வாயினின்றும் போகாமற் காவலகொண்ட மொழியையும, சிவநதவாயிதழையுமுடைய பைங்கிளியே காவலா கரியகடல்சூழ்நத மண்ணை காவலகொண்ட மனத்தினராயினர்.

விண்-விண்ணுலகு. காரிகை-அழகு. ' காரிகைபண்காவல்கொண்ட, எனஇயையும் (௪கக)

தலைமகள்கூதிர்ப்பருவங்கண்டுவருந்தல்.

(இது வெளிப்படை )

மன்னுயிர காவலன் வாணனறென் மாறையில் வந்தளியார
என்னுயிர் காவல ரோநிழை யாயித யம்புலர்த்திக்
கொன்னுயிர் வாடைக் கொடும்பனி நீரிற குளிர்குழைத்துப
பின்னுயி ராமலென் மேற்பூசு நாளுமென் பேசுவதே.

இ - ள். உலகததில்நிலைபெற்ற உயிர்களைக்காக்கின்ற காவலனாகிய வாணன்தென்மாறையிலஏந்திழையாய! நெஞ்சையுலாததி அச்சததைவீசும் வாடைக்காற்றுக் கொடியதாகிய பனிநீரிலே குளிர்கக்குழைததுப் பின் யான மூச்சுவிடாமற்பூசுநாளினுங காவலாவந்துஎன்னுயிரை யளியார்,இனி பேசுவதுஎன? எ - று.

புலாத்தல்-உலாததல். கொன்-அச்சம. உயிர்ததல-வீசுதல் உயிராமல்-மூச்சுவிடாமல. 'பூசுநாளுங்காவலாவந்தளியார்பேசுவதென'என இயையும்.

தோழியாற்றுவித்தல்.

(இது வெளிப்படை )

வரற்கால மென்றென் றெணப்பல கூடல் வளைத்ததிரம
விரற்கால வின்று,மெல்லியன்மின் னேசென்று மேதினிகாத்
தரற்கால குஞ்சர மஞ்சமஞ் சூழ்ந்துறை வீசுகின்ற
சரற்காலம் வந்தடைந் தார்தஞ்சை வாணன தமிழ்வெற்பரே.

இ - ள். மின்னே! போய் நாட்டைக் காத்து உரல்போன்ற கால்களை யுடையனவாகிய குஞ்சரங்கள் அஞ்சும்படி முகில்கடந்து துளிகளையெறியப் பட்ட சரற்காலமென்றறிந்து தஞ்சைவாணன் தமிழ்வெற்பர் வந்தடைந் தனர், ஆதலால் தலைவர் வருங்காலம் எப்போதெப்போதென்று பலகால் கூடல்வளைத்து விரல் உதிரமொழுக இன்றுமெலிய வேண்டாம். எ - று.

என்றென்று என்பது வினைவின்கண்வந்த அடுக்குமொழி. கூடல் வளைத்தல் - பிரிந்த கணவன் வருதற்கு விரலால்வளைத்துக் குறிபார்த்தல். கால் - ஒழுக. குஞ்சரம் - யானை, சாதியொருமை. உறை-துளி. (௨௯௩)

காவற்பிரிவு முற்றிற்று.

---

## தூதிற்பிரிவு.

தூதிற்பிரிவு எ - து. இருவரசரும்தம்மிற்பொராநின்றவிடத்து அவ ரைச்சந்துசெய்வித்தற்குப்பிரியும்பிரிவு அரசரைச்சந்துசெய்வித்தற்குப்பிரியு மெனின், தூதுவராவார் பிறர்க்குப்பணிசெய்து வாழ்வார். அவர்பொருவிறப் பென்னையோவெனின், தூதுவர்போலச்சந்து செய்வித்தற்குப்பிரியுமென்ப தன்று;இருவரசருமநாளைப்பொருதுமென முரண்கொண்டிருந்தநிலைமைக் கண்டானருளரசனுதலின் இம்மக்களுமஇவ்விலங்குகளுமெல்லாமபட இவை யிருகுலத்திற்கும் ஏதமநிகழ்ந்தது என்செய்யுமோ, யான் இப்போதொழிப்ப னென்று இருவரையும்பிரந்து சந்துசெய்வித்தலு மொன்று தேவரும அசுர ரும் பொருதகாலத்து தேவரையும் அசுரரையும மிக்கசெய்தானை யானொ றுப்பலென்று பாண்டியன் மாகீர்த்தி சந்து செய்வித்ததுபோல இவரையும் மிக்க செய்தானையொறுப்பலென்று சந்துசெயவித்த தெனக்கொள்க.

தலைமகனுணர்ந்ததோழி தலைமகட்குணர்ந்தல்.

(இது வெளிப்படை.)

தூதாக வனபா மசலத்துணிக் தாமொன்றுஞ் சொற்புலவோர்
மாதாக வன்பசி தீர்த்தருள் வாணன்றென் மாறையிந்து
மீதாக வம்பு கிடந்தன போலுண்கண் மெல்லியலிப
போதாக வம்புகல வேரிக லார்தம புரமபுகவே.

இ - ள். எஞ்ஞான்றுஞ் சொல்லிலேவல்ல நாவலர்களது பெரியதாகத் தையும் வலியபசியையுந் தீர்த்தருளப்பட்ட வாணன் தெனமாறைநாட்டில சந்திரன்மேல் அம்புகிடந்தனபோன்ற முகத்தின்மேல் மையுண்டகண்ணை யுடைய மெல்லியலே! இப்போது பூசலைச்சொல்வோராகிய மாறுபாடுடைய இருபெரு வேந்தரும் பாசறைநீங்கித் தம்புரங்களிற்சென்றுபுக அன்பர் தூதாகப்போகத் துணிந்தனர். எ - று.

இந்து-சந்திரன். மெல்லியல்-அண்மைவிளி. ஆகவம்-போர். இகலார்-மாறுபாடுடைய இருபெருவேந்தர். (௪௧௪)

தலைவி முன்பனிப்பருவங்கண்டுவருந்தல்.
(இது வெளிப்படை.)

மலிகின்ற வண்புகழ் வாணனறெ்ன மாறையை வாழ்த்தலர்போல்
மெலிகின்ற சிந்தையு மேனியுங் கொண்டு விளர்ப்பெனும்பேர்
பொலிகின்ற கஞ்சுகம் போதகிருந் தேனைப் புரந்தருளார்
நலிகின்ற முன்பனி நாளினு ணாமுனை நண்ணினரே.

இ-ள். நிறைகின்ற வளவிய புகழையுடைய வாணனதென்மாறை நாட்டை வாழ்த்தாதவர்போல மெலிகின்ற நெஞ்சையும் மேனியையும் உடைத்தாய் விளர்ப்பென்கின்ற பேர்பொலிகின்ற சட்டைபோர்த்திருந்த என்னை மாறுபாடுடைய இருபெருவேந்தர் தம்படையின்கட்சென்றார் வருத்தஞ்செய்கின்ற முன்பனி நாளினும் வந்துகாத்தருளார். எ-று.

மலிதல்-நிறைதல். சிந்தை-நெஞ்சு. மேனி-வடிவு. கஞ்சுகம்-சட்டை. 'விளர்ப்பெனும் பேர்பொலிகின்ற கஞ்சுகம் போர்த்திருந்தேனை' என்றது முன்பனிக்குளிர்க்குக் கஞ்சுகம் போடவேண்டுதலான வேட்கைநோய்தந்த விளர்ப்பெனுங் கஞ்சுகத்தைப் போர்த்திருந்தேனென்று கூறினாளென வுணர்க. புரத்தல்-காத்தல். நணார்-மாறுபாடுடைய இருபெருவேந்தர். முனை-படை. நண்ணினர்-சென்றனர். (௪௧௫)

தோழியாற்றுவித்தல்
(இது வெளிப்படை.)

சுற்றுங் குழலின் பிணிவிடப் பானவந் தோனறினார் பார்
முற்றும் பொழிகின்ற முன்பனி நாண்முகி லுங்கடலும்
வற்றும் பருவத்து மண்புரப் பானறஞ்சை வாணனொன்னார்
செற்றும் படையினவெம் போர்தணிப் பானன்று சென்றவரே.

இ-ள். சொருகுங் குழலையுடையாய்! மேகமுங் கடலும் வறக்குங்காலத்தும் உலகத்தைக்காப்போனாகிய தஞ்சைவாணன் ஒன்னாரை வெகுளும் படைபோல இருபெரு வேந்தர் பொரும் வெவ்வியபோரைத் தணிக்கும் பொருட்டுத் தூதாகவந்துசென்றவர் பார்முழுதும்பொழிகின்ற முன்பனிக் காலத்தில் நின் வேட்கைநோயைத் தீர்க்கும்பொருட்டு வந்துதோன்றினர், நீ புலம்பலொழிவாய். எ-று.

சுற்றல்-சொருகுதல். குழல்-அண்மைவிளி. பான் இரண்டும் வினையெச்சம். நாள்என்புழி ஐந்தனுருபுதொக்கது. உம்மை-எதிர்மறை. செறல்-வெகுளல். படையின்-படைபோல. (௪௧௬)

தூதிற்பிரிவு முற்றிற்று.

## துணைவயிற்பிரிவு.

துணைவயிற்பிரிவு. எ - து. நண்பாகிய வேந்தனுக்குப் பகைவேந்தா இடையூறுற்றவழி அவவிடையூறு தீர்ததற்குத் தலைமகன் துணையாகப் பிரிதல். தன்னுழையரில் ஒருவனைப் படைகூட்டிச் செல்லவிடாது தான் போதல் வேண்டுமென்பது எனனையெனின், நட்புமிக்கால தானே யவனு யிருத்தலின் அவன்கருமந் தன்கருமமாயெண்ணி விரைவினெழுந்து அப் பகைநீக்கத் தானே போயினனெனக்கொள்க.

துணைவயிற்பிரிந்தமைதோழிதலைமகட்குணர்த்தல்.

(இது வெளிப்படை.)

நண்பான மன்னர்க் கிடாதணிப் பானெண்ணி நல்லுதவிப
பண்பான மன்னா படாதலுற ரூபனி நீாபொழியும
தண்பா ஞலுநதொடை யமபுய வாணன றமிழ்த்தஞ்சைவாழ்
வெண்பா லலமகொளசெவ் வாயனன மேயனன மெனனடையே.

இ - ள் பனிபெய்யும நீரைப்பொழிகின்ற தண்ணிய கருங்குவளை மாலைபணியப்பட்ட தீழகிய புயத்தையுடைய வாணன் தமிழததஞ்சையில் வாழ்கின்றவெண்மை நிறமபொருநதிய பாலின் இனிமையைக் கொள்ளுஞ் செய்யவாயையும், அன்னம்போன்ற மெதமெனற நடையையு முடையாய்! நம்மன்னர் தமக்கு நட்பான மன்னாக்குப் பகைவநதால் பகையால்வந்த துன்பத்தைத தணிக்கும் பொருட்டாககருதி நல்லுதவிக்குணததினாலே செல்லலுற்றார் எ - று

இடர் - துன்பம். தணிததல் - தீர்த்தல். எணணல் - கருதல். பண்பு-குணம். படாதல் - செல்லுதல். பானல்-கருஙகுவளை. அம் - சாரியை. தொடை-மாலை. அம்-அழகு. நலம் - ஆகுபெயா. செவ்வாய்நடை என்புழி-உம்மைத்தொகை. மேன்னடை - ஆகுபெயா. பினபனிக்காலமாதலால் ‘பனி நீர்பொழியுக் தண்பானல’ என்றுகூறியவாறுணர்க. (௨௪௭)

தலைமகள்பின்பனிப்பருவங்கண்டுபுலம்பல்.

(இது வெளிப்படை.)

இன்னற் படுகின்ற வென்னையெண் ணார்தமக் கின்றுணையாம
மன்னற் குதவி பிரிந்தகங் காதலர் வாணன்றஞ்சைக்
கன்னற் கடிகை யதிவதல் லாற்பகல் காண்பரிதாம்
பின்னற் கனையிருள் கூர்துன்ப மேவிய பின்பனியே.

இ - ள். தமக்கினியதுணையாகிய மன்னர்க்கு உதவியாகப்பிரிந்த நம்முடைய காதலர் வாணனது தஞ்சைநகரில நாழிகை யறிவிக்கும் வட்டிலான் நாழிகையறிவதல்லது ஞாயிற்றைக்காண்பரிதாம் பின்னலாகிச்செறிந்த இருள்மிகுந்து துன்பத்தைப்பொருந்திய பின்பனிக்காலத்துத் துன்பப்படுகின்ற என்னை நினையார், யானென்செய்கேன்! எ - று.

இன்னல்-துன்பம. கன்னலகடிகை-நாழிகை பகல்-ஞாயிறு. காண்பரிதாம் என்னும பெயரெச்சம *"தத்தமெச்சமொடுசிவணுங்குறிப்பி-னெச்சொலாயினுமிடைநிலைவரையார்." என்னுஞ்சூத்திரவிதியாலஇடையேபல சொலவரினும பனி என்னும் பெயரைக்கொண்டுமுடிந்தது. (௪௧௮)

## தோழியாற்றுவித்தல்.

(இது வெளிப்படை.)

வடுக்கண் டனையகண் மங்கைநல லாய்தஞ்சை வாணன்வெற்பின்
அடுக்கங் குளிர வசைகின்ற வாடை யகன்றவர்க்கு
நடுக்கஞ்செய் பின்பனி நாளின்வந் தாரமர் நண்பனுற்ற
இடுக்கண் களையவென் றேயகன் கான மிகந்தவரே.

இ - ள். தஞ்சைவாணன் வெற்பிடத்து மாவடுவைக்கண்டாற்போன்ற கண்ணையுடைய மங்கைநல்லாய்! மலைப்பக்கமெல்லாங்குளிர அசைந்துவருகின்ற வாடைக்காற்று பிரிந்தவர்க்கு நடுக்கஞ்செய்யப்பட்ட பின்பனிக்காலத்துப் போரிடத்து நட்புக்கொண்ட வேந்தனுற்ற துன்பத்தை நீக்கவென்று அகன்ற சுரத்தைக்கடந்தவராவர், நீபுலம்பலொழிவாய

வடு-மாவடு. அடுக்கம - மலைப்பக்கம வாடை-வாடைக்காற்று. அமர போர் இடுக்கண - துன்பம. கானம் - சுரம. இகந்தவர் - கடந்தவர் (௪௧௯)

துணைவயிற்பிரிவு முற்றிற்று.

---

## பொருள்வயிற்பிரிவு.

பொருள்வயிற்பிரிவு எ - து. பொருளீட்டுதல் காரணமாகப் பிரியும்பிரிவு எனின், முன் பொருளிலனுமாகவே "ஏளனுநாப்பணித்தலு மிரந்தோர்க்கீதலு நன்னுநர்நாட்டலு நயவாரொறுத்தலும்" என்னும் இவையெல்லாம் பொருட் குறைபாடுடையார்க்கு நிகழாமையான் இக்குறைபாடெல்லாம் உடையனும்; அவையுடையானது பொருவிறப் பெண்ணையோவெனின பொருளிலனுய்ப்பிரியுமென்பதன்று; தன்முதுகுரவராற் படைக்கப்பட்ட பலவேறுவகைப்பட்ட பொருள்களெல்லாங் கிடந்தது, மன்னன் அது

* தொல். சொல். வினையியல், சூ. ௪௦.

கொண்டு துய்ப்பது ஆண்மைத்தன்மையன்றென்த் தனது தாளாற்றலாற் படைத்த பொருள்கொண்டு வழங்கிவாழ்தற்குப் பிரியுமென்பது. அல்லதூஉம், தேவகாரியமும் பிதிர்க்காரியமும் தனது தாளாற்றலாற்படைத்த பொருளாற்செயத் தனக்குப்பயன்படுவன : என்னை, தாயப்பொருளாற் செய்தது தேவரும் பிதிரரும் இன்புறாராகலான் அவர்களையும் இன்புறுத்தற்கு பிரியுமெனக்கொள்க.

தோழி தலைமகட்குணர்த்தல்.

(இது வெளிப்படை,)

மஞ்சைப் புனைமதின் மாறைவ ரோதயன் வாணர்பிரான
தஞ்சைப் பதியண்ண லெண்ணலர் போற்றனி நாமிருக்க
நெஞ்சைப் பொருள்வயின் வைத்துநங் கேள்வர்நன் னீணமதியின்
பிஞ்சைப் புரைநுத லாய்பிரி வானின்று பேசினரே.

இ - ள். நல்லநீண்ட பிறைபோலுநுதலையுடையாய்! முகிலையணிந்த மதில்சூழ்ந்த மாறைநாட்டில வரத்திறனுதயஞ்செய்த வாணர் குலத்துக் கதிபனாகிய தஞ்சைபபதியில வேந்தனை யெண்ணாதவர்போலத தனியாய் நாமிருக்கத் தன்னெஞ்சைப் பொருளிடத்துவைதது நங்கணவர்பிரியும் பொருட்டாக இன்று சொல்லினார். எ - று.

மஞ்சு - முகில். வரோதயன் - முற்றுவினையெச்சம். அண்ணல் - வேந்தன். எண்ணலா - பகைவர். மதியின்பிஞ்சு - பிறை வான்-வினையெச்சம்.

தலைவி இளவேனிற்பருவங்கண்டுபுலம்பல்.

(இது வெளிப்படை.)

கங்க ணிரங்க வருமபொரு டேட நடந்தவன்பர்
செங்க ணிருங்குயி லாரபது கேட்கிலர் செந்தமிழோர்
தங்க ணிடும்பை தவிர்த்தருள் வாணன்றென் றஞ்சைவஞ்சி
திங்க ணிவந்தது போற்கவி னார்முகத் தேமொழியே.

இ - ள். புலவர் தம்மிடத்துண்டாகிய மிடித்துன்பத்தைத் தீர்த்தருளப்பட்ட வாணன்தென் தஞ்சையிலிருக்கும் வஞ்சிக்கொம்பானது திங்களை யேந்தியதுபோன்ற அழகார்ந்த முகத்தையும் இனிமையாகிய மொழியையுமுடையாய்! நம்முடைய கண்ணுள்ளது கலுழ அரியபொருள் தேடநடந்த அன்பர் இளவேனிற்காலம்வந்து செங்கண்ணையுடைய கருங்குயில் ஆரவாரிப்பது கேட்கிலர், யானென்செய்கேன்! எ - று.

இடும்பை - துன்பம். வஞ்சி - வஞ்சிக்கொம்பு. நிவத்தல் - ஓண்டேந்தல். கவின் - அழகு. ஆர்த்தல் - பொருந்துதல். (சஉக)

